உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம் **1267**

துறைமங்கலம்—சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# சோணசைலமாலை

இதற்கு

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் மாஜி தமிழ்ப்பண்டிதரும்

உரையாசிரியரும் - சைவப்பிரசாரகருமாகிய

மகாவித்துவான்

ஈக்காடு-இரத்தினவேலுமுதலியார் குமாரர்

பிரசங்கசண்டமாருதம்-புராணிகர்

வித்துவான்

ஈக்காடு - சபாபதிமுதலியார் எழுதிய

**உரையுடன்**

அ. முத்துவடிவேல் முதலியாரால்

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை:

ஸ்டர் காபிரைட்] 1937 [விலை ரூபா 1

# ரிஜிஸ்டர் காபிரைட் அறிவிப்பு



# முகவுரை



"புனையெழில் வடிவி னுளோர் பொதுமகட் கண்ட மைந்தர்
மனமெனப் புலவர் நெஞ்ச மருளுமின் றமிழ்ப்பா மாலை
சினவிடை யவற்கே சாத்துஞ் சிவப்பிர காச னென்னு
முனைவனெம் மடிகள் பாத முளரிகள் சென்னி சேர்ப்பாம்"

இப்பிரபந்தமானது, துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தரிசனார்த்தமாகத் தம்முடைய சகோதரர்களோடு திருவண்ணா மலைக்குச் சென்று குருதேவரைத் தரிசித்து அவண் எழுந்தருளி யிருக்கும் தினங்களில் ஒரு தினம் அச்சோணசைலத்தை உள்ளன் போடு பிரதக்ஷிணஞ் செய்து வரும்போழ்தே, தம்மையும் மெய்ம் மறந்து தெய்வத் திருவருளாற் றிருவாய்மலர்ந்தருளியதாகும். 'சோணசைலன்' என்னும் திருநாமத்தை மகுடமாக வைத்துக் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு செய்யுட்களாற் பாடப்பெற்ற துதிநூலாகலின் 'சோணசைலமாலை' என்னும் பெயர் இதற்கு ஏற்பட்டது. இத் துதிநூலின் முன்னிரண்டடியில் நூலாசிரியர் முறைப்பாடும் பின்னிரண்டடியில் மலைச்சிறப்பும் அமைந்துள்ளன.

உலகத்திலுள்ள கற்றோர் கல்லாராகிய இருதிறத்தாரும், பொது வாக, வாடி வதங்கும் இயற்கையமைந்த பூக்களால் மாலை தொடுத் துப் பெருமானுக்குச் சாத்துவர். அது சிறிது காலத்தில் வாடி வதங்கும். ஆனால், கல்வியிற் சிறந்தோர், சிறப்பாக, ஏனையோர் போல வாடி வதங்கும் இயற்கை யமையாததும், நால்வகைச் சொற் களால் சொன்னயம் பொருணயம் அதிவிசித்திர கற்பனாலங்கார மமைந்த பாமாலை சாத்துவர். அது பூமாலைபோலச் சிறிது காலத்தில் வாடி வதங்கிப் போகாமல் என்றும் நிலைபெற்று நிற்கும். அவர் உள்ளளவும், அவர் பிற்காலத்தும் அவர் வமிசத்தாராலும் அவர் பரம்பரை மாணவர் குழுவாலும், ஏனையோராலும் பொன்னேபோற் போற்றப்பட்டுவரும். இதுமாத்திரமேயன்றி, முழுமுதற்கடவுளுக்கும்

பூமாலையைவிடப் பாமாலையின்மேற்றான் விருப்பம் அதிகம். என்னை?, "பன்மாலைத் திரளிருக்கத் தமையுணர்ந்தோர் பாமாலைக்கே நீதான் பக்ஷமென்று நன்மாலையா வெடுத்துச் சொன்னார் நல்லோர்" எனச் சிவஞானப் பெருஞ் செல்வராகிய தாயுமானவரின் அமுதவாக்கே இதனை வலியுறுத்தும். இந்நோக்கங் கொண்டோ பிறிது நோக்கங் கொண்டோ மற்றெந் நோக்கங்கொண்டோ இவ்வாசிரியர் 'சோணசைலமாலை' என்னும் இப்பாமாலையை இயற்றினரோ அறிகிலோம். ஆனால், அவர் உள்ளக்கிடை அவர்க்கே தெரியும்.

இது சொன்னயம் பொருணயம் அதிவிசித்திர கற்பனாலங்காரம் செறிந்த அதிநூலென்பதும் தமிழ் பயிலும் மாணவர் குழாங்களால் வெகுகாலமாக நல்லாசிரியர் மாட்டுப் பாடங்கேட்டு வரு நூல்களில் அதிமுக்கியமானதென்பதும் இந்நூல் கற்ற துணையானே ஏனைய நூல்களின் நயங்களும் இனிது விளங்குமென்பதும், தெய்வத் திருவருளும் கல்விப் பொலிவும் நாளடைவில் உண்டாகு மென்பதும் உலக மறிந்ததே. எனவே, நூலாசிரியர் சிறப்பும் நூற்சிறப்பும் வெள்ளிடை மலைபோற் றெள்ளிதின் விளங்குகின்றனவன்றோ?

என்பால் உழுவலன்புங் கெழுமிய நட்புமுடைய சில தமிழபிமானிகள் இந்நூற்கு விளக்கமான விருத்தியுரை யொன்றெழுதி நல்ல விதத்தில் தமிழர் எல்லோருக்கும் பயன்றருமாறு வெளிப்படுத்த வேண்டுமென்று தெரிவித்தனர். 'சோணசைலமாலை'க்கு உரை காணும் ஆற்றல் அணுத்துணையும் இலாதவனாக இருப்பினும், எனது மனத்தைக் கவர்ந்த இவர்கள் பணித்தமை கருதி என் **தந்தையும் ஆசிரியருமாகிய மகாவித்துவான் ஸ்ரீகாடு. இரத்தினவேலு முதலியாரவர்கள்**பால் யான் பாடங்கேட்டது வெகு சிறிதேயாயினும் மறப்பெனும் பகைவன் வாரிக் கொண்டதுபோக எஞ்சியதைக்கொண்டு கல்வி கேள்விகளிற் சிறியேன் புன்மதி கொண்டு ஓர் உரை எழுத உத்தேசித்தேன். இவ்வுரை காணுங் காலமெல்லாம் 'நான் இது செய்வேன்' என்னும் தற்போதம் என்னிடத்து எப்போதும் நிகழாமையை யான் அறிவேன்; என்னெஞ்சறியும்; என்னுள்ளங்கவர் கள்வனுமறிவன்.

இதில் ஒவ்வொரு பாடலிலுமுள்ள ஒவ்வொரு விஷயத்தையும் கூடுமானவரையில் தெளிவாகக் காட்டியிருக்கிறேன். இதில் பதவுரை, பதசாரம், விசேடவுரை, இலக்கணக் குறிப்பு, இலக்கண விளக்கம், சரித்திர ஆராய்ச்சிகள், சங்கநூற் செய்யுள்கள், ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியம் முதலிய இலக்கணச் சூத்திரங்கள், பல இலக்கியங்கள், பல ஸ்தலபுராணங்கள், வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்கள் முதலிய பலவும் இதில் மேற்கோள்களாக எடுத்தாளப்பட்டுள்ளன.

என்னால் எழுதப்பட்ட இந்நூலுரையில் ஆராய்ச்சிக் குறைவாலோ, அறியாமையாலோ சிற்சில பிழைகள் ஏற்பட்டிருத்தலும் கூடும். அங்ஙனம் காணப்படின் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுள் திருவாய்மலர்ந்தருளிய "கொங்குதேர் வாழ்க்கை" என்னுஞ் செய்யுட்கே குற்றங் கூறிய கலா விநோதர்களான பண்டிதர் வழி வந்தவர்களான முற்று முணர்ந்த முதறிவாளர்கள் என்பொருட்டல்லாமல் என் தந்தையார் பொருட்டாகிலும் குற்றங் குறை கூறாமல் தமது தனயரின் மழலைச் சொல்லெனக் கொண்டு அகமிக மகிழ்ந்து அங்கீகரித்து ஆசிகூறி அன்புடனே ஆட்கொள்வார்களாக. பக்தர்கள் பல்லாண்டிசைக்க. சுபம்! சுபம்!! சுபம்!!!

இங்ஙனம்

ஈக்காடு. சபாபதி முதலியார்

சிவமயம்

## துறைமங்கலம்

# சிவப்பிரகாச சுவாமிகள் சரித்திரம்

பூமிதேவிக்கு முகம்போல விளங்கும் தொண்டைநாட்டிலே அம்முகத்தொளிர் திலகம்போல விளங்குவதாகிய காஞ்சிமாநகரிலே இற்றைக்குச் சற்றேறக்குறைய முந்நூற்றுப் பன்னிரண்டு வருடங்களுக்குமுன் வேளாளர் குலத்திலே தொண்டைமண்டலத்தார் வழித்தோன்றியவர்களுக்கெல்லாம் சைவதீட்சாகுருவாகக் குமாரசுவாமி பண்டாரம் என்னும் ஒரு பெரியார் இருந்தார். இவர் திருவண்ணாமலையார் திருவடித்தாமரைக்கே அகங்கனிந்த அன்பர். ஆதலின் திருக்கார்த்திகைத் திருவிழாவிற்குத் திருவண்ணாமலை நோக்கி யாத்திரை புறப்பட்டார். போம்போது வழியில் உச்சிக்காலத்தே ஒரு நந்தவனத்திற்றங்கி, சிவபூசையை முடித்துக்கொண்டு உணவு அருந்தி இளைப்பாறிப் பிறகு புறப்பட்டு அன்று மாலை அக்கச்சியம் பதியை அடைந்தார். உடனே ஈசானியதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அனுட்டானங்களை முறையே முடித்துக்கொண்டு சிவபூசை செய்தற்குப் பூசைப்பெட்டகம் எங்கே? என்று தன் பரிசாரகரைக் கேட்டார். அவர்கள் நாடித் தேடிக் காணாதவர்களாகி மனம்வாடி நொந்துவந்து தாம் பகலிற் றங்கியிருந்த நந்தவனத்திற்றானே மறந்து வைத்து வந்ததாகப் பகர்ந்தனர். அதுகேட்டதும், அப்பெரியார் அகம்வருந்தி அப்பரிசாரகரையே போய்த் தேடிக் கொணரும்படி கட்டளையிட்டு, அவ்வூர் ஆள் ஒருவனையும் துணைசேர்த்து அனுப்பிவைத்தார். பரிசாரகர்கள் சென்றதன்பின் இப்பால் இப்பெரியார் தாமும் தமது மனைவியும் ஓர் இடத்திற் றங்கியிருந்து, தம்முடைய ஆத்மார்த்த மூர்த்தியாகிய உடையவரைப் பிரிய நேர்ந்ததே என்று கழிதுயருற்றுக் கலங்கிச் சிவத்தியானஞ் செய்துகொண்டே நித்திரையின்றி இருந்தார்.

இவ்வாறு இப்பெரியார் எண்ணி ஏங்கிச் சிவத்தியானமே பண்ணித் தூங்காதிருக்கும்பொழுது, இவர் பண்ணிய புண்ணியத்

தாலே திருவண்ணாமலையார் தாமே ஒரு சங்கமராகத் திருக்கோலம் பூண்டருளிவந்து, "என்னே அப்ப! நீ மனவாட்ட முற்றிருத்தற்குக் காரணம் யாதோ?" என்று கேட்டருளினார். அதற்கு அப்பெரியார் வந்த சங்கமரை வணங்கித் தமக்கு நிகழ்ந்ததாகிய உடையவரின் பிரிவை எடுத்து உரைத்தார். அதற்குச் சங்கமர் திருக்கோலத்துடன் வந்த அண்ணாமலையார், "அந்தோ! அங்கம் வேறு; இலிங்கம் வேறாக இருந்ததனாலன்றோ அவரைப் பிரிய நேர்ந்தது; இலிங்காங்க சம்பந்தியாய் இருந்திருந்தால் இவ்வாறு நேரிட்டிராதே? ஆயினும் பரவாயில்லை; இன்றுமுதல் நீ இலிங்காங்க சம்பந்தியாகவே இரு;" என்று வீரசைவமார்க்கத்தை உபதேசித்தருளி, "உமது பூசைப்பெட்டகம் அதிகாலையில் உம்பால் வந்தெய்தும்" எனவுந் திருவாய் மலர்ந்தருளினர். அதற்கு அப்பெரியார், "அடியேனுடைய சிஷ்யர்கள் பந்துக்கள் முதலாயவர்களுக்கு இச்செய்கை விரோதமாக இருக்குமே" என்று பணிவொடு விண்ணப்பித்துக்கொண்டார். அது கேட்டுச் சங்கமராக வந்த அண்ணாமலையுடையானார், "சிஷ்யர் பந்துக்கள் முதலியோர் சார்பால் உமக்கு ஒரு பயனும் இல்லை. ஆதலால், நாம் உமக்கு உரைத்தபடி சிவலிங்கதாரணஞ் செய்து கொள்ளும். இதன்பிறகு நுமக்கு மூன்று புத்திரர்களும் ஒரு புத்திரியும் பிறப்பர். இவர்களால் நுமக்கு இகபரசாதகங்கள் எல்லாஞ் சித்திக்கும்" எனத் திருவாய்மலர்ந் தருளினார்.

அப்பெரியாரும் சங்கமர் கட்டளைக்கு இணங்கினார். உடனே சங்கமராக வந்த திருவண்ணாமலையார் குமாரசாமிப் பண்டாரத்தை நோக்கி, "இத்திரு ஆலயத்துத் தெற்குவீதியில் இருக்கும் குருதேவரிடத்திற் சென்று தாரணதீக்ஷை செய்துகொள்ளும்" எனக் கட்டளையிட்டருளி, இப்பெரியார்க்கு இத்தாரணதீக்ஷையைச் செய்துவிக்குமாறுங் கூறி அந்தர்த்தானமாயினார்.

பொழுது புலர்ந்ததும் சங்கமர் திருக்கோலந்தாங்கி எழுந்தருளி வந்த திருவண்ணாமலையார் திருவாய்மலர்ந்தருளியபடியே குமாரசாமிப் பண்டாரத்துக்கு அகம் பூரிக்க, உடல் புளகமுற, ஆனந்தக் கண்ணீர்சோரப் பூசைப்பெட்டகம் கைக்கெட்டியது. குருதேவர் மடாலயத்திருந்து குருதேவரின் அடியார்கள் இவரைத் தேடிவந்து

அழைத்தார்கள். இவரும் இவையனைத்துஞ் சிவபெருமான் திருவருள் திருவிளையாட்டே என்று திருவருளை வியந்து துதித்து, உடனே குருதேவர் மடாலயஞ் சென்று, குருதேவரைத் தரிசித்து, முறைப் படி நமஸ்கரித்து, அவரால் சிவலிங்க தாரண தீக்ஷைபெற்று மகிழ்ந் திருந்தார். திருக்கார்த்திகைத் திருவிழாத் தரிசனஞ்செய்து பின்னர்த் தம் கச்சிப்பதி வந்தடைந்தார்.

தன் சிஷ்யர்களுக்கும் தன் உறவின்முறையார்க்கும் வீரசைவ விசேடங்களை எடுத்துப்புகன்று, அவர்களுக்கும் சிவலிங்க தாரண தீக்ஷைசெய்து சிவாநந்தச் செல்வராகி வாழ்ந்துவந்தார்.

இவ்வாறு வாழ்ந்துவருங் காலத்தில் திருவண்ணமலையார் திரு வருள் செய்தபடியே இவர்க்கு மூன்று புத்திரர்களும், ஒரு புத்திரி யும் அவதரித்தனர். புத்திரர்களுக்கு முறையே சிவப்பிரகாசம், வேலாயுதம், கருணைப்பிரகாசம் என்றும், புத்திரிக்கு ஞானம்மை என்றும் நாமகரணஞ்செய்து உரிய பருவத்து வித்தியாரம்பஞ்செய்து கல்விபயிற்றி நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்துவந்தார். பிள்ளைகள் பிறைச்சந்திரன்போல வளர்ந்துவருங் காலத்தில் தந்தையாகிய குமாரசுவாமி ஐயர் சிவலிங்க ஐக்கிய மாயினார்.

பின்னர், மூத்தவராகிய சிவப்பிரகாசசுவாமிகள் தன் தாயாரை யும் சகோதரர்கள் சகோதரியையும் அழைத்துக்கொண்டு திரு வண்ணமலையைப் போய்ச்சேர்ந்து, குருதேவரை அடைந்து, சில காலம் அவ்விடத்திலேயே தங்கி, அவர் ஆதரவில் சிலகாலந் தங்கி யிருந்து கல்வியில் மிகு நிபுணராயினர். இவ்வாறு வருநாள்களில் ஒருநாள் திருவண்ணமலை என்னும் சோணசைலத்தை வலம் வரும் பொழுது 'சோணசைலமாலை' யைப்பாடி யருளினர். இச்சோண சைலமாலை திருவண்ணமலைநாதர் துதியாகக் காப்புச்செய்யுள் நீங்க லாக நூறுபாக்கள் அடங்கியதாகும்.

பின்னர், இச்சிவப்பிரகாசசுவாமிகள் இலக்கணம் பயிலவேண் டும் என்னும் பேரவாவால் தென்னாடு செல்ல விரும்பி, தம் சகோ தரர்களுடனே புறப்பட்டு, வாலிகண்டபுரத்திற்குத் தெற்கே ஐந்து

கடிகை தூரத்திலுள்ள நல்லாற்றூர் என்னும் துறைமங்கலத்தை அடைந்து, ஆங்கிருந்த ஒரு சிங்காரமான நந்தவனத்திற் றங்கிச் சிவபூசை செய்துகொண்டிருந்தார்.

இச்செய்தியை அவ்வூர்க்கிராமாதிகாரியும் சிவலிங்கதாரியும் குருலிங்க சங்கமபக்தியிற் சிறந்து விளங்கியவருமாகிய அண்ணாமலை ரெட்டியார் என்னுஞ் சீமான் சிலரால் கேள்வியுற்று, அந் நந்தவனத்திற்கு ஓடோடியும் சென்று, சிவப்பிரகாச சுவாமிகளைத் தரிசித்து, இவரிடத்திற் பேரன்புபூண்டு, இவர்க்கு வேண்டும் உபசாரங்கள் பலவும் உள்ளன்போடு புரிந்து, அவ்வூரிலேயே தங்கி இருக்கும்படி சிவப்பிரகாச சுவாமிகளை வேண்டிக்கொண்டனர். சிவப்பிரகாச சுவாமிகளும் அவ்விரட்டியார் வேண்டுகோளுக்கு இணங்கிச் சிலகாலம் அவ்வூரில் வசிக்கிறதற்கு ஒருப்பட்டனர்.

ஒருப்பட்ட சிவப்பிரகாசர் அவ் இரட்டியாரோடு அவ்வூரிலுள்ள சென்னபசவையர் மடத்திற்கு அடுத்து மேற்புறத்திலே ஒருமடம் கட்டுவிக்கச்செய்து இரட்டியார் பணிவிடைசெய்ய அந்த மடத்திலேயே தங்கி இருந்தார்.

இவ்வாறு சுவாமிகள் இரண்டுவருடகாலம் இங்கேயே தங்கியிருந்து அண்ணாமலை இரட்டியாருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக்கொண்டிருந்து, பின்னர்த் தென்னாடு செல்ல எண்ணி, இரட்டியாரின் உத்தரவு பெற்றுக்கொண்டு, தம் சகோதரர்களுடன் திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தார்.

திருநெல்வேலிவந்து தாம்பிரபர்ணி நதிக்கரையிலுள்ள சிந்துபூந்துறையிலுள்ள தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த வெள்ளியம்பலத்தம்பிரான் என்பவர் இலக்கணக்கடலாக விளங்கி இருக்கின்றனர் என்பதைக் கேள்வியுற்று, அவரிடத்திற்சென்று அவரைக் கண்டார். அவ்வெள்ளியம்பலத்தம்பிரான் இவரை நோக்கி, "நீர் நம்பால் வந்ததற்குக் காரணம் யாது?" என்று வினவினர். சிவப்பிரகாச சுவாமிகள், "இலக்கணங் கற்க வந்தேன்" எனத் தம் வரலாற்றை அவர்க்கு ஆதியோடந்தமாகக் கூறினர். அதற்கு வெள்ளியம்பலத் தம்பிரான் இச்சிவப்பிரகாச சுவாமிகளின் இலக்கியத் தேர்ச்சியை

அறிந்துகொள்ளும்பொருட்டு, " 'கு' என்று எடுத்து 'கு' என்று முடியுமாறு ஒரு நேரிசைவெண்பா சிவபெருமான் ஆதியாக இடையே 'ஊருடையான்' என்பது வரப்பாடுக" என்று சொல்லினர்.

உடனே சிவப்பிரகாசர் சிறிதுந் தாமதிக்காது,

"குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்
முடக்கோடு முன்னம் மணிவார்க்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைத்தோன் மேற்கொள்ள
வூருடையா னென்னு முலகு"

என்ற வெண்பாவைப் பாடிக் காட்டினர். இவ்வெண்பாவின் கண்ணே யுள்ள 'வடக்கோடு தேருடையான் றெவ்வுக்கு' என்ற சொற்களின் நயங்களைப் பெரிதும் பாராட்டி, சிவப்பிரகாச சுவாமிகளைத் தழுவி, அணைத்துப் புகழ்ந்து, தம்மோடு சமமாக ஆசனத்தில் அமர்த்திக் கொண்டு, "நுமக்கு யாம் போதிக்கவேண்டிய இலக்கணம் இல்லை. எல்லா இலக்கணமும் உம்பாலே அமைந்திருக்கிறது" என்று கூறி, "நும் சகோதரர்களுக்கு ஐந்திலக்கணத்தையும் ஐயந்திரிபறப் போதிப்போம்" என்று கூறி, சிவப்பிரகாசரைத் தம்பக்கல் வைத்துக்கொண்டே ஒருபட்சத்துள் மிருபட்சமாக ஐந்திலக்கணங்களையும் போதித்தருளினர். சிவப்பிரகாச சுவாமிகள் அகமிக மகிழ்ந்து வெள்ளியம்பலத்தம்பிரானுக்குக் குருதட்சணை கொடுக்க எண்ணித் தாம் அண்ணாமலை இரட்டியாரிடம் பெற்ற முந்நூறு பொன்னையும் அவர் திருமுன் வைத்தனர்.

வெள்ளியம்பலத்தம்பிரான் அது தனக்கு வேண்டுவதின்று என மறுத்துக்கூறி, அதனை ஏற்றுக்கொள்ளாது, "நீங்கள் எனக்குக் குருதக்ஷிணை தர விரும்பினால் நான் சொல்லுவதைச் செய்வதே குருதக்ஷிணையாகும். அஃதியாதெனில்: திருச்செந்தூரில் ஒரு தமிழ்ப் புலவன் தனது கல்விச்செருக்கால் அகங்கரித்து எம்மை நிந்தித்துக் கொண்டிருக்கின்றான்; அவன் வீறை அடக்கி அவன்வந்து நம்மைப் பணியும்படி செய்யவேண்டிய தொன்றையே நும்பால் எதிர்பார்க்கின்றேம்" என்றார்.

சிவப்பிரகாசரும் அதற்கு இயைந்து, "அவ்வாறே செய்வன்" என்று சொல்லித் தம்பிரானால் அனுப்பப்பெற்ற மாணாக்கர்களோடு தாமும் திருச்செந்தூர்சென்று முருகப்பிரானைத் தரிசித்து வணங்கிக்கொண்டு கோயில்வலம் வரும்போழ்து அந்தத் தமிழ்ப்புலவர் சிவப்பிரகாச சுவாமிகளோடு வந்த மாணாக்கரைக்கண்டு, "இவர் யார்?" என்று உசாவி அறிந்து, சிவப்பிரகாசர் முன்வந்து தன் வழக்கம்போல வெள்ளியம்பலத் தம்பிரானை இழித்துக் கூறினர். உடனே அப்புலவனுக்கும் சிவப்பிரகாசர்க்கும் மாறுபாடு உண்டாகிக் கலாய்த்துச் சொற்போரைத் தொடங்கினர். எந்தவகையாலும் அத்தமிழ்ப்புலவன் சிவப்பிரகாசரை வெல்லமுடியாதவனாகிக் கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தனன். அஃதென்னை எனின்: அத்தமிழ்ப் புலவர் சிவப்பிரகாசசுவாமிகளை நூதனமாகப் பாட்டு பாடி வென்று விடலாமென வெண்ணி, நிரோட்டமாக இச்செந்திலாண்டவன் துதியாக முப்பதுசெய்யுள் பாடி முடிப்பது; இதில் யார் தோல்வி அடைகிறார்களோ அவர்கள் வென்றார்க்கு அடிமையாவது எனச் சூள் உரைத்துக்கொண்டு பாடத்தொடங்கினர். சிவப்பிரகாசர் திருக்கோயில் வலம் வருவதற்குள் நிரோட்டகமாக கலித்துறை யமக அந்தாதி முப்பதுசெய்யுள் அடங்கிய அந்தாதியைச் செந்திலாண்டவன் திருவருட்சகாயத்தாற் பாடி முடித்தனர். தமிழ்ப்புலவர் ஒரு செய்யுளும் பாடமுடியாது திகைத்து வெட்கி நின்றார். இந்நூலே **திருச்செந்திநிரோட்டகயமகவந்தாதி** எனவும், **திருச்செந்திலந்தாதி** யெனவும் பெயர் பெறும்.

சிவப்பிரகாசர் அப்புலவரை நோக்கி, "புலவரே! இப்போழ்து என்ன சொல்லுகின்றீர்?" என்றார். அதற்கு அத்தமிழ்ப்புலவர், "அடியேன் தோற்றேன்! தோற்றேன்!" என முக்காலுங்கூறிச் சாஷ்டாங்கமாகச் சிவப்பிரகாசர் திருவடியில் விழுந்து வணங்கி, "இனி அடியேன் தேவரீருக்கு அடிமை" என்று கூறினர். உடனே சிவப்பிரகாசர் அப்புலவனை அழைத்துக்கொண்டு திருநெல்வேலி வந்து வெள்ளியம்பலத்தம்பிரானை வணங்கி நின்றார். வெள்ளியம்பலத்தம்பிரான் அகமிகமகிழ்ந்து பாராட்டிச் சிவப்பிரகாசரை நோக்கி, "நீர் நமது கடனை முடித்தீர்; இனி நீர் சிறிதுகாலம்

சிதம்பரத்தில் வாசஞ்செய்துகொண்டு இரும்" என விடைதந்து அனுப்பிவைத்தனர்.

சிவப்பிரகாசர் தம் சகோதரர்களுடன் அவ்விடம்விட்டுப் புறப் பட்டுத் தென்னாட்டிலுள்ள சிவத்தலங்களை யெல்லாந் தரிசித்து வணங்கிக்கொண்டு, பின்னர்த் துறைமங்கலம் வந்துசேர்ந்து, தன்னைப் போற்றிவந்த அண்ணாமலை இரட்டியார்பொருட்டு அவருக்குரிமை யான கம்பத்தக்கிராமமாகிய வாலிகண்டபுரத்திற்கு வாயுமூலையில் இருக்கும் வெங்கைமாநகரத்திற்கு வந்து சேர்ந்தார்.

இங்குத் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் வெங்கை புரீசராகிய பழமலையார்மீது தோத்திரப்பாரூபமாக **வெங்கைக் கோவை, வெங்கைக்கலம்பகம், வெங்கையுலா, வெங்கையலங் காரம்** என்னும் நான்கு பிரபந்தங்கள் இயற்றிச் சிலநாள் அங்குத் தங்கியிருந்தார்.

பின்னர், அண்ணாமலை இரட்டியாரை அழைத்துக்கொண்டு சிதம்பரத்திற்குப்போய் ஆங்கு ஒரு திருமடங் கட்டுவித்துச் சிலகாலம் வசித்திருந்து, விருத்தாசலஞ்சென்று பழமலைநாதர்பேரில் அந்தாதி யும், **(பழமலையந்தாதி) பிக்ஷாடன நவமணிமாலையும், கொச்சகக் கலிப்பாவும்** பாடி முடித்துப், பின்னர் **பெரியநாயகியம்மன் பேரில் பத்தோன்பது கலித்துறையும், பத்துக்கழிநெடில் விருத்தமும்** பாடித் துதித்து, அங்கு வாசஞ்செய்துவரும் நாட்களில் ஒருநாள் மணிமுத்தாநதிக்கரை மார்க்கமாக உலாவிக்கொண் டிருக் கும்பொழுது ஒரு மாங்கனி பாட்டையின் பக்கத்துள்ள தோட்டத்தி லிருந்து தொப்பென்று இவர்முன் விழுந்தது. இது சிவ நிவேதனைக் குதவும் எனச் சிவப்பிரகாசர் எடுத்துக்கொண்டு திரும்பி நாலடி எடுத்துவைத்தனர். மேலடி எடுத்துவைக்குமுன் தோட்டக்காரன் ஓடோடியும்வந்து சிவப்பிரகாசரை மடிபிடித்திழுத்து வையச் சுவாமி கள் சினந்து,

"அடுத்துவரும் தொண்டனுக்கா வந்தகனைத் தாளால்
அடர்த்ததுவுஞ் சத்தியமே யானால்—எடுத்ததொரு

மாங்கனிக்கா என்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா நித்தன்வரத் தான்."

என்று கூறிவிட்டு அவ்விடம்விட்டு அகன்றார். அந்தோ! அத்தோட்டக்காரன் * கன்னிகாராசியிற் சூரியன் வந்ததும் இறந்தொழிந்தான். பின்னர் வடதிசையை நோக்கிக் காஞ்சிபுரத்தைத் தரிசிக்க வரும்போது போரூரவிநாசியிலிருந்து சாந்தலிங்கசுவாமிகள் இடைமார்க்கத்தில் வர, அவரைக்கண்டு ஆனந்தங்கொண்டு அளவளாவி, தம்முடனே அழைத்துக்கொண்டு பொம்மையபாளையத்திற்குச் சமீபமாக வந்தபோது சாந்தலிங்கசுவாமிகள் சிவப்பிரகாசசுவாமிகளைப் பார்த்து, "நாம் இருவரும் சிவஞானசுவாமிகள் சன்னிதானத்திற்குப் போய் அவரைத் தரிசித்துக்கொண்டு போவோம்; அவர்மேல் தோத்திரப்பாடல்கள் பாடுக" என்றனர். அதற்குச் சிவப்பிரகாசர் "அடியேன் நரஸ்துதி செய்யேன்" என்றார். பின்னர் அன்றிராத்திரி ஓரிடத்தில் தங்கி நித்திரை செய்யும்பொழுது முருகப்பெருமான் மயில்வாகனரூடராக எழுந்தருளி வந்து, "ஒரு பாத்திரத்தில் விடு புஷ்பங்களை வைத்து இம்மலரை மாலையாகத் தொடுத்து நமக்கணிய வேண்டும்" என்று கூறி மறைந்தருளினர். விடிந்ததும் இக்கனவைச் சாந்தலிங்கசுவாமிகளுக்கு அறிவிக்க, அதற்கு அவர், "தேவரீர் பாமாலை தொடுக்கக்கூடாதென்று சொல்லியபடியால், அப்பாமாலையே தொடுக்கவேண்டுமென்று குறிப்பித்ததாகும்" என்றார். உடனே சிவப்பிரகாசர் சிவஞானபாலையசுவாமிகள் பேரில் **தாலாட்டு, நெஞ்சுவிடுதூது, கலம்பகம்** என்னும் மூன்று நூற்களைப் பாடிப்போய்ச் சன்னிதானத்தில் அரங்கேற்றி ஞானோபதேசம்பெற்று, அந்த ஞானாசிரியன் கட்டளையின்படி தமது தங்கையாகிய ஞானாம்பையைச் சாந்தலிங்கசுவாமிகளுக்கு விவாகஞ்செய்து கொடுத்து, பின்னர்க் காஞ்சிக்குவந்து வாசஞ்செய்துகொண் டிருக்குங்காலையில் தமது **ஞானசிரியர்** பேரில் **பிள்ளைத்தமிழும், திருப்பள்ளி யெழுச்சியும், அதிசயப்பத்தும்** செய்தருளினார்.

* கன்னிகாராசியிற் சூரியன் மேவுவது புரட்டாசிமாதத் தென்றறிக.

பிறக, இவர் இவ்வாறு இருந்துவரும் நாள்களில் ஒருநாள் அண்ணாமலை இரட்டியார் இவரைக் கல்யாணஞ் செய்துகொள்ளு மாறு வேண்ட அதற்குச் சுவாமிகள்,

"சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
† பாய்கொண்டான் வந்துதொழும் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தளவிருந்தும்
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே." என்றனர்.

இவர் திருத்தம்பியார் கருணைப்பிரகாசசுவாமிகளைக் கல்யாணஞ் செய்துகொள்ள வேண்டினபொழுது அதற்கு அவர்,

"நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு நகையால்
வேணு வானது விளைந்துபோய்ப் புகுந்தது வென்றாற்
காண லாவதோ ருருவமெய் நாரியைக் கண்டால்
பூணு வார்மயல் காளைய ரென்பதும் புதிதோ."

என்று தங்குறிப்பை வெளியிட்டனர். சிவப்பிரகாசசுவாமிகள் தம் சகோதரர் இருவர்க்கும் மணம் செய்வித்து இல்லறத்து இருக்கச் செய்து தாம் மாத்திரம் துறவறத்திலேயே யிருந்தார். தாம் துறவற நிலையில் இருந்துகொண்டு பிரபுலிங்கலீலை, சித்தாந்தசிகாமணி, வேதாந்தசூடாமணி, சிவப்பிரகாச விகாசம், தர்க்க பரிபாஷை, திருக்கூவப்புராணம், சதமணிமாலை, நால்வர் நான்மணிமாலை, நிரஞ்சனமாலை, கைத்தலமாலை, அபிஷேகமாலை, இஷ்டலிங்கப் பெருங்கழிநெடில், குறுங்கழிநெடில், நன்னெறி, சிவநாம மகிமை என்னும் நூல்களைச் செய்தருளினர். இதன்றியும் திருப்பதிகம் பெற்ற திருத்தலங்கள் ஒவ்வொன்றிற்கும் இரண்டிரண்டு வெண் பாக்களும் பாடியருளினர்.

சிவப்பிரகாசசுவாமிகளின் சகோதரர்களில் ஒருவராகிய வேலைய சுவாமிகள் நல்லூர்ப்புராணம், இஷ்டலிங்கக் கைத்தலமாலை, சுக

† "பாய்கொண்டானும் பரவும்" என்றும் பாடம்.

நமச்சிவாயமூர்த்திகள் சரித்திரம் என்னும் நமச்சிவாயலீலை, வீர சிங்காதனபுராணம், கிருஷ்ண சரித்திர பாரிஜாதலீலை, மயிலத் திரட்டைமணிமாலை என்னும் நூற்களைச் செய்து அருளினர். இவ் வேலையசுவாமிகளின் இளையராகிய கருணைப்பிரகாசசுவாமிகள் இஷ்டலிங்க அகவல், சீகாளத்திப்புராணத்தில் சீகாளத்திச் சருக்கம் வரையிலும் செய்தருளி, வெங்கைமாநகரத்தில் பதினெட்டாம் வயதில் சிவலிங்க ஐக்கியம் ஆயினர்.

அதுகேட்டுச் சிவப்பிரகாச சுவாமிகள்,

"முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு
கண்டசுவை முதிர்ச்சி யாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன்
னிளைக்கவர்ந்து தடங்கா ளத்தி
மன்னவனுண் டானெனது மாதவத்தின்
வலிதீர மண்ணின் மீதே
என்னுடன்வந் தவதரித்த விளங்கருணைப்
பிரகாச னென்னுங் கோவே."

என்று இரங்கினர். வேலைய சுவாமிகள்,

"ஆண்டதனை லெனையொவ்வாய் வித்தையினுற்
றமயனினு மதிக மென்றே
பூண்டவுல கதனினுள்ளோர் புகல்வதுகேட்
டிருந்துமென்ன புதுமை தானோ
காண்டகுகண் மணியேநல் விளங்கருணைப்
பிரகாசக் காளாய் நீதான்
மாண்டனையென் றறிந்திருந்து முயிர்தரித்தேன்
யானுமிகு வன்னெஞ் சேனே."

என்றிரங்கினார். பின்பு சிவப்பிரகாசசுவாமிகள் மிகவும் மகிமையோடிருந்து சீகாளத்திப்புராணத்தில் கண்ணப்பர் சருக்கமும், நக்கீரர் சருக்கமும் செய்தருளி தமது முப்பத்திரண்டாம் வயதிலே நல்

லாத்தூரில் பாலையசுவாமிகளால் விடப்பட்டிருந்த மடத்திலே சிவலிங்க ஐக்கியமாய்ச் சிறந்தார்.

அப்போது வேலையசுவாமிகள்,

"அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான்—முல்லை
யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்."

என்று கூறி யிரங்கினார்.

பின்னர் இச்சுவாமிகள் சீகாளத்திப்புராணத்தைப் பாடி நிறை வேற்றிப் பெருமத்தூர் மடத்தில் எழுபத்திரண்டாம் வயதில் சிவலிங்க ஐக்கியமாய்ச் சிறந்தார்.

திருச்சிற்றம்பலம்

சிவப்பிரகாச சுவாமிகள் திருவடி வாழ்க.

# இதன்கண் எடுத்தாளப்பெற்ற நூல்கள்



விநாயகபுராணம்
கந்தபுராணம்
காஞ்சிப்புராணம்
திருவிளையாடற்புராணம்
கந்தபுராணச்சுருக்கம்
திருவாசகம்
சிவபராக்கிரமம்
அருணாசலபுராணம்
மறைசையந்தாதி
அபியுக்தர்வாக்கு
தாயுமானவர்
சிவவாக்கியர்
திருவருட்பா
காசிகாண்டம்
சீகாளத்திப்புராணம்
பிரபுலிங்கலீலை
பாரதம்
அண்ணாமலைச்சதகம்
அருணாசலேசுவரர்பதிகம்
குகைநமச்சிவாயர்பாடல்
நன்னூல்
திருக்குறள்
நால்வர்நான்மணிமாலை
தேவாரம்
சிவதருமோத்தரம்
மகாராஜாதுறவு
திருவெங்கைக்கலம்பகம்
வேதாரணியபுராணம்
திருவருணைக்கலிவெண்பா
பெரியபுராணம்
இரட்டைப்புலவர்
காசிரகசியம்
உவமானசங்கிரகம்
இரத்தினச்சுருக்கம்
பட்டினத்தார்பாடல்
உண்மைவிளக்கம்
குமரகுருபரசுவாமிகள்
நாலடியார்
சிவஞானபோதம்
சிவஞானசித்தியார்
சிதம்பரசுவாமிகள்
அருணகிரியந்தாதி
சிவப்பிரகாசம்
திருக்களிற்றுப்படியார்
சௌந்தரியலகரி
திருப்போரூர்ச்சந்நிதிமுறை
திருமந்திரம்
சிவநாமமகிமை
தணிகைப்புராணம்
சிவப்பிரகாசசுவாமிகள் தனிப்பாடல்கள்
நாலாயிரப்பிரபந்தம்
சித்தாந்தசிகாமணி
பேரூர்ப்புராணம்
வீராகமம்
திருப்பல்லாண்டு
கலிங்கத்துப்பரணி

கந்தர்கலிவெண்பா
பெரியபுராணம்
சித்தாந்தக்கட்டளை
யாப்பருங்கலக்காரிகை
தொல்காப்பியம்
குசேலோபாக்கியானம்
பெருந்திரட்டு
திருவள்ளுவநாயனார் தனிப்பாடல்
சூதசங்கிதை
காளமேகப்புலவர்பாடல்
நளவெண்பா
திருமுருகாற்றுப்படை
திருவேங்கடமாலை
பிரமோத்தரகாண்டம்
திருத்தொண்டர் புராணசாரம்
நம்பியாண்டார் நம்பிதிருவந்தாதி
நீதிநெறிவிளக்கம்
ஔவைப்பிராட்டியார்தனிப்பாடல்
திருக்கருவைவெண்பாவந்தாதி
திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி
மணிமேகலை
தனியூர்ப்புராணம்
திருத்தொண்டத்தொகை
விவேகசிந்தாமணி
திருமுருகாற்றுப்படை தனிப்பாடல்கள்
பட்டினத்தார்உடற்கூற்றுவண்ணம்
வைராக்கியசதகம்
உபதேசகாண்டம்
பிருகஜ்ஜாபாலோபநிடதம்
காளமேகப்புலவர்தனிப்பாடல்
உருத்திராக்கமாலை
கூர்மபுராணம்
திவாகரச்சூத்திரம்
திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
திருவாரூர்நான்மணிமாலை
பொன்வண்ணத்தந்தாதி
அற்புதத்திருவந்தாதி
சிதம்பரமும்மணிக்கோவை
பெருமான்திருமொழி
இறையனாரகப்பொருள்
பிரயோகவிவேகம்
இலக்கணக்கொத்து

கணபதி துணை

# சிறப்புப்பாயிரம்

## நேரிசை வெண்பா

ஏணுருஞ் சோண சயிலனுக் கெஞ்ஞான்றும்
பூணார மாலை புனைந்தணிந்தான்—மாணாப்
பவப்புணரி நீந்தியிடப் பாரதிநூல் செய்த
சிவப்பிரகா சக்குரவன் றேர்ந்து.

(பதவுரை.) மாணாப் பவப்புணரி-பெருமையில்லாத பிறவிக்கடலை, நீந்தியிட - நீந்தும்பொருட்டு, பாரதிநூல் - மரக்கலம்போலும் நூலை, செய்த-இயற்றியருளிய, சிவப்பிரகா சக்குரவன்-சிவப்பிரகாச சுவாமிகள் என்னும் பரமாசாரிய மூர்த்திகள், தேர்ந்து - ஆராய்ந்து, ஏணுரும்-வலிமைபொருந்திய, சோண சைலனுக்கு - சோணசைலேஸ்வரர் மேல், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், பூண் ஆர - ஆபரணமாகப் பொருந்த, மாலை-சோணசைலமாலை என்னும் பாமாலையை, புனைந் தணிந்தான்-செய்து சாத்தினார்; என்றவாறு.

(விசேடவுரை.) சோணசைலனுக்குச் சிறப்புக்கூறவந்தவர், 'ஏணுரும்'என அடைகொடுத்தனர். என்னை? அகந்தைகொண்ட பிரமவிஷ்ணுக்களால் காணமுடியாத பெருமானாகலானும், வடிவத்தில் பெரிய வடிவமாகலானும், சரம் அசரமாகிய பொருள்கள் அங்குவசிப்பதாலும் தவவலியுடையோர் ஏராளமாக அங்குக் காணப்படுவதாலும் என்க. எனவே, வலிமைபொருந்திய எனப் பொருளுரைக்கப்பட்டது. இன்னம் ஏண் என்பதற்கு 'பெருமை' என ஒருபொருளு முளவாகலின், ஏணுரும் என்பதற்கு பெருமை பொருந்திய என்றும் பொருள்

கூறலாம். ஏண் - வலிமை; "ஏணுறு மமரர்கடை கடலளித்த" (சோணசைலமாலை 42-ஆம் பாடல்) என்புழி இப்பொருளாதல் காண்க. கடலைக்கடக்கச்செய்யும் மரக்கலம்போலப் பிறவிக்கடலைக் கடப்பித்தலின் 'பவப்புணரி நீந்தியிடப் பாரதிநூல்' என்றார். இச் செய்யுள் 'சோணசைலமாலை' க்குச் சிறப்புப்பாயிரம். "எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க" என்பது இலக்கணம்; என்னை?

### இறையனாரகப்பொருள்

"ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"

என்றாராகலின். இச் சிறப்புப்பாயிரம் யாரால் இயற்றப்பட்டது என் பது தெரிவில்லை. 'சிவப்பிரகா சக்குரவன்' என்றமையின் நூல் ஆசிரியர் மாணவர் குழுவுள் ஒருவராய் இருக்கவேண்டு மென்று ஊகிக்கப் படுகிறது. சிறப்புப்பாப்பாயிரம் செய்தற்கு உரியவர்களுள் அவரும் ஒருவராகலின் என்க. என்னை?

### நன்னூல்

"தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்
றன்மா ணாக்கன் றகுமுரை காரனென்
றின்னோர் பாயிர மியம்புதல் கடனே"

என்பதானென்க. இதனுள், 'சிவப்பிரகாசக்குரவன்' எனவே நூற் செய்தோன் பெயரும், 'சோணசைலனுக் கெஞ்ஞான்று பூணாரமாலை' எனவே நூலின்பெயரும், 'பவப்புணரி நீந்தியிடப் பாரதிநூல்செய்த' எனவே நூலாசிரியர் சிறப்பும், 'பூணார' எனவே இந்நூற் சிறப்பும் வெளிப்படையாகப் பெறப்பட்டன.

குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, பஃறொடை வெண்பா என்ற ஐவகை வெண் பாக்களுள் ஒன்றான இருவிகற்ப நேரிசை வெண்பாவாலான இப் பாயிரம், இவ்வொருநூலுக்கே உரியதாதலால், சிறப்புப்பாயிரமாம்.

"தோன்று தோற்றித் துறைபல முடிப்பினுந்
தான்றற் புகழ்தல் தகுதி யன்றே"

என நன்னூலிலும், தொல்காப்பியத்து இளம்பூரணநுரை மேற்கோளிலும் சிறப்புப்பாயிரம் பிறர் செய்தற்குக் காரணம் கூறியிருப்பினும், சிறுபான்மை நூலாசிரியர் தாமேதம்மைப் பிறன்போலும் பாயிரம் கூறுதலும் உண்டு. பிரயோக விவேக நூலார் "இது, தன்னைப் பிறன்போலும் நாந்திகூறுகின்றது," "வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார்," "இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினோரும் திவாகரரும் பதினெண்கீழ்க் கணக்குச் செய்தாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங் கூறுவதுங் காண்க" என்றவை இங்கு அறியத்தக்கன. அது, தற்சிறப்புப்பாயிர மெனப்படும்.

வேலுமயிலுந்துணை

# சோணசைலமாலைக் குறிப்பு



சோணசைலமாலை என்னுந் தொடர்மொழியைச் சோணசைலனைச் சார்ந்த மாலையென்றேனும், சோணசைலனது ஸ்தோத்திர விஷயமான மாலையென்றேனும் விரிக்கப்படும்; சோணசைலனைச் சார்ந்த மாலையென விரித்தால், இரண்டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்கதொகையாகவும், சோணசைலனது ஸ்தோத்திர விஷயமான மாலையென விரித்தால், ஆறும்வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்கதொகையாகவும் கொள்ளப்படும். இன்னும் இத்தொடரை சோணசைலனுக்குரியமாலை என விரித்து நான்காம் வேற்றுமைத் தொகையாகவும் கொள்ளப்படும். சோணசைலன்-என்னும் நிலைமொழியும், மாலை-என்னும் வருமொழியும் புணரும்போது நிலைமொழியீற்று னகரமெய் கெட்டு சோணசைலமாலையென்றாயது "பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய் வலிவரி னியல்பாம் ஆவியரமுன் வன்மை மிகாசில விகாரமா முயர்திணை" என்ற நன்னூல் உயிரீற்றுப் புணரியல் சூத்திரத்துள், "சிலவிகாரமா முயர்திணை" யென்னும் விதியாலென்றறிக.

சோணசைலம்+மாலை என்று இவ்வாறு நிலைமொழி வருமொழியாகப் பிரித்து பொருள்புகலு ஞான்று 'அத்துச்சாரியை' பெறல் வேண்டும், "திருவரங்கத்து மாலை" என்பதுபோல. இவ்வாறே பிறவற்றோடும் 'அத்துச்' சாரியை பெற்றுத் திருவரங்கத்தூசல், திருவேங்கடத்தூசல், திருவேங்கடத்தந்தாதி, திருவரங்கத்தந்தாதி என வழங்குதல் காண்க. இவைகளில் 'அத்து'ச் சாரியையினது முதலிலுள்ள அகரவுயிரானது இயல்பினும் விதியினும் நின்ற அகரவீற்றின்முன்வா வகரவுடம்படு மெய்பெறுது கெட்டதுணர்க. என்னை?

தொல்காப்பியம்

"அத்தி னகர மகரமுனை யில்லை"

என்பதாலென்க. இனி, சிறுபான்மை ளவத்துக்கோடு, அதவத்துக்கண் எனக் கெடாமலும் வருதல் காண்க.

'சோணசைலன்' என்றால் அக்கினி மலைவடிவா யிருப்பவன் என்று பொருள். 'சோணம்' என்றால் செம்மை; அச்செந்நிறக் குணப்பெயர், குணவாகுபெயராய் அச் செந்நிறத்தை யுடைய அக்கினிக் காயிற்று. நீலஞ் சூடினாள் என்புழி நீலம் என்னும் குணப் பெயர் அதனையுடைய குவளைமலருக் காதல்போ லென்றறிக. குண வாகு பெயர் எனினும் பண்பாகு பெயரெனினும் ஒக்கும். மாலா என்ற வடமொழி மாலையென விகாரப்பட்டது; இதனை,

"முன்னா லொழியப் பின்னால் பலவுரு
மென்னா லாரு நன்னா லாருக்
கிணையிலை யென்னுந் துணிவே மன்னுக"

என இலக்கணக்கொத்து நூலார் வியந்து கூறிய நன்னூல் என்னும் இலக்கணநூலில் ஆசிரியர் பவணந்தி முனிவர் வடமொழியாக்கம் [ஆரியமொழி தமிழில் வடமொழியாதல்] அதாவது ஆரியமொழி திரிந்து வடமொழியாமாறு உணர்த்துவான் றொடங்கி அவற்றின் பொதுவிதி யுணர்த்தி அதற்குமேல் [ஆரியமொழி வடமொழியாதற் குச் சிறப்புவிதி] அதாவது ஆரியவெழுத்துத் தமிழில் விகாரப்படுதல் கூறுவதாகிய சூத்திரம் நன்னூல் பதவியல் 20-ஆவது சூத்திரம்.

அவற்றுள்:—

ஏழாமுயி ரிய்யு மிருவுமை வருக்கத்
திடையின் மூன்று மவ்வம் முதலு
மெட்டே யவ்வு முப்பது சயவும்
மேலொன்று சடவு மிரண்டு சதவும்
மூன்றே யகவு மைந்திரு கவ்வும்
ஆவீ றையு மீயீ றிகாரமும்

என்னும் அச்சூத்திரத்துள், 'ஆவீறு ஐயும்' என்று கூறியபடி ஆகார வீறு ஐகாரவீறாயிற் றுணர்க.

**திருவிளையாடற் புராணம்**

"பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்துப் பத்திபடப்
 பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி பெறமுக்கண்
 மூர்த்தி தாளிற்
றொழுதகன்ற வன்பெனுநார் தொடுத்தலங்கல் சூட்ட"

என்று சொல்லியவாறே மணங்கமழ் மலர்களைக் கொண்டு தொடுக்கப்பட்ட பூமாலை (தொடை)யைப் போலச் சொற்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட பாமாலையாகிய பிரபந்தம் என்க; எனவே, மாலையென்பது உவமையாகுபெயர்.

சிவபெருமானவர், அடியார்களாகிய ஆன்மகோடிகள் உள்ளுவந்து தமது திருமேனியின்மேற் சாத்தும் பூமாலையில் மிக்க விருப்புடையராயிருப்பினும், அதைவிட அவ்வடியார்கள் தம்மேற் புனையும் பாமாலையில் மிக்க பிரியமுடையவர் என்க. ஏனெனில், பூமாலை சிறிதுகாலத்திற்குள் வாடி வதங்கிப் போகும்; ஆனால், பாமாலை அவ்வாறு வாடி வதங்காமல் இருக்கும் சக்தியுடையது. இதனாலன்றோ, சிவஞானப் பெருஞ்செல்வராகிய **தாயுமான சுவாமிகளும்,**

"பன்மாலைத் திரளிருக்கத் தமையு ணர்ந்தோர்
 பாமாலைக் கேநீதான் பக்ஷமென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர்
 நலமறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன்
சொன்மாலை மாலையாக் கண்ணீர் சோரத்
 தொண்டனே னெந்நாளுந் துதித்தே நிற்பே
னென்மாலை யறிந்திங்கே வாவா வென்றே
 யெனைக்கலப்பாய் திருக்கருணை யெம்பி ரானே"

எனத் திருவாய்மலர்ந்தருளி யிருப்பதை யுணர்க. விசேஷமாகப் பாமாலைகளெல்லாம் நூறு பாக்களால் அமைந்துள்ளன; சில பாமாலைகள் முப்பது பாக்களாலும் அமைந்துள்ளன. இவ்விரு வழியிலும் நில்லாது தம் மனம்போல் பாடுவாரும் சிலரென்க.

சிவமயம்

# துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# சோணசைலமாலை

## மூலமும்-உரையும்

---

### காப்பு

#### நேரிசை வெண்பா

*சதுரனெழிற் சோண சயிலற் றுதிப்பன்*
*மதுரமொழி யன்பர் மனமாங்—குதிரைதிறை*
*கொண்டவனென் றேத்துங் குரைகழற்கால் யானைதிறை*
*கொண்டவனை யென்னுளத்தே கொண்டு.*

(பதவுரை) *மதுரம் மொழி-இனிமையாகிய சொற்களைப் பேசுகின்ற, அன்பர்-அடியார்களுடைய, மனம் ஆம் குதிரை-மனமாகிய குதிரைகளை, திறைகொண்டவன் என்று-கப்பமாகக்கொண் டருளுபவனென்று, ஏத்தும்-பெரியோர்கள் புகழும், குரை கழல் கால்-சப்திக்கின்ற வீரகண்டாமணியை யணிந்த திருப்பாதங்களையுடைய, யானை திறைகொண்டவனை - யானை திறைகொண்டவர் என்னும் திருநாமமுடைய விநாயகப் பெருமானை, என் உளத்தே கொண்டு-அடியேனுடைய மனதின்கண் சிந்தித்து (அப்பெருமானுடைய திருவருளின் உதவியினால்), சதுரன்-யாவரினும் மேற்பட்ட திறமை யுள்ளவராகிய, எழில் சோணசைலன்-அழகு நிரம்பிய அருணசலேஸ்வரரை, துதிப்பன்-அடியேன் செந்தமிழ்ப் பாக்களினால் புகழ்ந்துபாடி வணங்குவேன்; என்றவாறு.*

(விசேடவுரை) *காப்பு - என்பது தொழிற்பெயர்ப் பகுபதம், கா என்னும் பகுதியும், பு என்னும் தொழிற்பெயர் விகுதியும்பெற்று,*

"இயல்பினும் விதியினும் நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் விகுதிப் பகர மிகுந்து முடிந்தது. இஃது ஆகுபெயராய் ஈண்டு அத்தொழில் கருதி வழிபடும் வழிபாட்டை யுணர்த்தும் பாவிற்கு ஆகின்றது. இச்செய்யுள் காப்புச்செய்யுள் என்பதும், இக்காப்புச் செய்யுள் விநாயகர் வணக்கம் என்பதும் அறிக. இக்காப்புச் செய்யுளாய விநாயகர் வணக்கத்தால் இந்நூலாசிரியர் தாம் இயற்ற ஆரம்பித்த சோணசைலமாலையாகிய நூல் யாதொரு இடையூறுமின்றி மங்களகரமாக முடிவுபெற வேண்டுமென்றும், இடையூ றின்றி மங்களகரமாக முடிந்தபின்னர் என்றும் அந்நூல் நின்று நிலவ வேண்டுமென்றும்கருதி தெய்வவணக்கம்கூறுவது எல்லா ஆசிரியர்கட் கும் கருத்தாகலான் இவ்வாசிரியரும் அவ்வாறே ஆன்றோர் முறையை யனுசரித்து விநாயக வணக்கம் கூறினார். விநாயகக்கடவுள் தன்னை வழிபடுவோர் காரியங்களைப் பூர்த்திசெய்யவும், அவ்வாறு வழிபாடு செய்யாதவர்களின் காரியங்களை இடையூறு செய்யவும் சிவபெருமானி டம் வரம்பெற்றவ ராகலானும், உள்ளன்புடனே வழிபடுவோர்க்கு இடையூறு வாராமல் காப்பவராகலானும் **விக்கின விநாயகர்** என்னும் அருமைத் திருநாமம் வாய்ந்த விநாயகப்பெருமான் அவ்வாறு தன்னை வழிபடுவோர் காரியங்களை விக்கினமின்றி முடிவுபெறச் செய்தலும் வழிபடாதவர் காரியங்களை இடையூறுகளால் முடிவுபெறுதபடி செய் தலும் முறையாகுமோ எனின் அற்றன்று; இருவரிடத்திலும் விநாய கப் பெருமான் கருணை செலுத்துகின்றனர். அன்பர்களிடத்தில் செலுத்தும் கருணைக்கு அறக்கருணையென்றும், அன்பரல்லாதவராய்த் தம்மை வழிபாடு செய்யாமல் தொடங்குவோர் காரியங்களைப் பூர்த்தி செய்யாமல் விடுப்பதற்கு மறக்கருணையென்றும் கூறுப. மறக்கருணை யும் பெருமான் புரிவது அவர்கள் நல்வழிப்பட வேண்டுமென்னும் அன் பின் மிகுதியேயன்றி வேறன்று. தந்தை பிள்ளைகளிடம் ஒரேமாதிரி அன்பாக இருக்கவேண்டியவன் நல்ல பிள்ளையினிடம் அதிக பிரியமாக வும் கெட்ட பிள்ளையினிடம் கொடூரமாகவும் நடந்துகொள்வது அக் கெட்டபிள்ளை நல்வழிப்படவேண்டும் என்னும் நல்லெண்ணமேயன்றி வேறன்று. சில் வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினனாகிய தந்தையே கெட்டபிள்ளை எவ்வாறு திருந்தி நல்வழிப்படுவானென்று பலவாறு

தண்டனைசெய்து நல்வழிப்படுத்த முயலுவானெனின் அவனைப்பார்க்கிலும்சதகோடி பிரியமுள்ளவனை பெருமான் தன்னை வணங்காமலும் வழிபாடு செய்யாமலும் இருப்பவன் காரியங்களைப் பலவாறு இடையூறுகளால் முடிவுபெறுமல் செய்து நல்வழிப்படுத்துவா னென்க. இதனை,

விநாயக புராணம்

"முராரி யாதிய தேவர்கண் முதலுறு
முழுதுல கினிலுள்ளோர்
விராவி யாதொரு காரிய மாயினும்
விளங்குறச் செயவென்றே
பராவி யுன்னருச் சனைசெய்வோர்
பான்மைதந் தருளுள்ளன்
பிராது செய்பவர் காரிய மூறுசெய்
திடுதியென் றிவைசொன்னான்" எனவும்,

"அகரமென வறிவாகி யுலக மெங்கு
மமர்ந்தகர வுகரமக ரங்க டம்மாற்
பகருமொரு முதலாகி வேறு மாகிப்
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில்பொரு ளுன்கினையு மிடர்தீர்ந் தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல் லோர்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளு
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்" எனவும்,

கந்தபுராணம்

"என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதன்
முன்னரே யுனதுதாண் முடியுறப் பணிவரேல்
அன்னர்தஞ் சிந்தைபோ லாக்குதி யலதுனை
உன்னலார் செய்கையை யூறுசெய் திடுதிநீ. எனவும்,

கூறியவாற்று னுணர்க. ஆதலின், இத்யாதி காரணங்களால் விநாயகர் வணக்கமாகிய காப்புக் கூறப்பட்டதென்க. யாவரினும் மேற்பட்ட திறமையுள்ளவன் சிவபெருமான் ஒருவனே யாகலின், 'சதுரன்'

என்றார். எல்லாத் தேவர்களைப் பார்க்கிலும் மேற்பட்ட திறமை சிவபெருமானிடம் என்னவெனிற் கூறுதும்:—

தன்வயத்தனாதல்-தூயவுடம்பினனாதல்-இயற்கையுணர்வினனாதல்-முற்றுமுணர்தல்-இயல்பாகவே பாசங்களினீங்குதல்-பேரருளுடைமை-முடிவிலாற்றலுடைமை-வரம்பிலின்பமுடைமை என்னும் எண்குணங்கள் பொருந்தி யிருத்தல். இதனை,

காஞ்சிப்புராணம்

முடிவி லாற்றலை தன்வ யத்தினை
முற்று ணர்ச்சியை பேரருள்
மடிவி லாட்சியை தூய மேனியை
மற்றி யற்கை யுணர்ச்சியை
படியி லாவியல் பாக நீங்கிய
பாச நோயை வரம்பிலின்
புடையை யுன்னடி யேங்க ளென்றுமு
ணக்க டைக்கல மையனே.

என்பதனானுணர்க. சிருஷ்டியாதி கிருத்தியங்களைப் பிரமன் முதலோர் இயற்றத் தான் றலைமை பூண்டு வாளாயிருப்பதாலும், இதனை,

திருவிளையாடற் புராணம்

"பூவண்ணம் பூவின்மணம் போலமெய்ப் போதவின்ப
மாவண்ண மெய்கொண் டவன்றன் வலியாணை தாங்கி
மூவண்ண றன்சந்நிதிமுத் தொழில் செய்யவாளா
மேவண்ண லன்னோன் விளையாட்டின் வினையைவெல்வாம்"

என்பதனானுணர்க. அடிமுடி தேடிக் காணாதபடி பிரம விஷ்ணுக்களுக்குமுன் அக்கினிவடிவமாய் நின்றமையானும், பிறகு அக்கினி ரூபம் நீங்கி மலைவடிவமாகி அவர்களுக்கு அருள்புரிந்ததாலும், இவற்றை:—

கந்தபுராணச் சுருக்கம்

"மொய்வள ரமரர்க் கிறையவ னாகி
மூவரி லுயர்ந்தவ னாகி

மெவ்வகை யுயிர்க்கு முயிரென விருக்கு
  மியல்பினேன் யாவனென் றிசைப்ப
மைவள ருருவக் குரிசிலும் யானு
  மாறுகொண் டுழியழல் வடிவாய்ச்
செவ்வொளி பரப்பி யெழுந்துவா னிமிர்ந்த
  தேவனே யதிகமாந் தேவன்" எனவும்,

**திருவாசகம்**

"பிரம னரியென் றிருவருந்தம் பேதமையாற்
பரமி யாம்பர மென்றவர்கள் பதைப்பொடுங்க
அரனு ரழலுருவா யங்கே யளவிறந்து
பரமாகி நின்றவா தோணேக்க மாடாமோ" எனவும்

வருமாற்றானுணர்க. பிரமவிஷ்ணுக்கள் அடிமுடிதேடிய சரிதை அஷ்டாஷ்டலீலை யென்னும் **சிவபராக்கிரமத்தில் இலிங்கோற்பவமூர்த்தியிற்** காண்க.

இன்னோரன்ன பல காரணங்களால், 'சதுரன்' என்றார். விரிவஞ்சி இம்மட்டோடு விடுத்தாம்.

**திருவிளையாடற் புராணம்**

"மடவரலை மணந்துலக முழுதாண்ட
  சுந்தரனை வணக்கம் செய்வாம்"

"அல்லையீ தல்லையீ தெனமறைகளு மன்மைச்
  சொல்லினுற் றுதித்திளைக்கு மிச் சுந்தரனுடற்
  கெல்லை யாகுமோ"

"கறை நிறுத்திய கந்தர சுந்தரக் கடவுள்"

"சுந்த ரன்றிரு முடிமிசைத் தூயநீ ராட்டு"

"தழையு லாங்கைய ரேவிய தந்திமேல் விடைமே
  லழகர் சேவகஞ் செய்தவா றறைந்தன மவரே"

"பொன்னவிர் சடையான் முன்னே போனதென்
      னெஞ்சு தூதா

யன்னது தாழ்த்த தென்னென் றழுங்குவா
ளொருத்தி கெட்டே
னென்னது நெஞ்சம் போன தென்றன
ளொருத்தி கேட்ட
மின்னனாள் வேற்கண் சேந்தாள் விளைத்தன
ளவளும் பூசல்"

"கவனமால் விடையான் றன்னைக்
கடைக்கணித் திலனென் றங்கோர்
சுவணவான் கொடியோ ரோவத்
தொழில்வல்லான் குறுக நோக்கி
யிவனைநீ யெழுதித் தந்தால்
வேண்டுவ லீவ னென்று
ளவனையா ரெழுத வல்லா
ரென்றன ளாவி சோர்ந்தாள்"

"கருப்பூர சுந்தரன்பூங் கடம்பவன சுந்தரனுட்
கரவாத் தொண்டர்
விருப்பூருங் கலியாண சுந்தரனல் லறவடிவாய்
விளங்கு மேற்றுப்
பொருப்பூரு மபிராம சுந்தரன்றேன் புடைகவிழப்
பொன்னிற் பூத்த
மருப்பூசு சண்பகசுந் தரன்மகுட சுந்தரன்முன்
வாழி மன்னோ"

"தலையவனாய்ப் பரமா காச சரீரியாய் முதலீ றின்றித்
தொலைவருஞ் சோதி யாமிச் சுந்தர லிலிங்கந் தன்னில்"

"மான்மதசுந் தரன்கொடிய பழியஞ்சு சுந்தரனோர்
மருங்கின் ஞானத்
தேன்மருவி யுறைசோம சுந்தரன்றேன் செவ்வழியாழ்
செய்யப் பூத்த
கான்மருவு தடம்பொழில்கூ டாலவாய்ச் சுந்தரன்"

### அருணசல புராணம்

"சுந்தர வருணை நாதர் துலங்குமிந் நகரி னுள்ளே
வந்தவ ரெதுகேட் டாலும் வழங்குது மெனவிப் போது"

### மறைசையந்தாதி

"வரபர சங்கர வேதா ரணிய மடங்கலஞ்சுஞ்
சரபர சங்கர ளம்பொதி வாய்விழித் தையல்பங்கி
னரபர சங்கர ரவிபோ லொளியி னணிதிகழும்
புரபர சங்கர வாரம ஞர்வரும் போதத்திலே"

### அபியுக்தர் வாக்கு

"கதிரவர் கோடி யுதித்தென வொளிருங்
கவினுறு மேனியெம் பரனே"

எனப் பல இடங்களிலும் வருமாற்ருனும் இன்னேரன்ன பல காரணத்தாலும் சதுரனுய் விளங்கிய பெருங்கருணைத் தடங்கடலாகிய அம்முழு முதற்கடவுளே நிரம்ப அழகியார் எனக் கருத்துத்தோன்ற 'சதுர னெழிற் சோணசைலன்' என்ருர். சைலன் என்பது வெற்பன், பொருப்பன் என்பனபோன்று இடத்தால் வரு பெயர்களுள் குறிஞ்சித் திணையால்வந்த உயர்திணை யாண்பாற் படர்க்கைப் பெயர்.

துதிப்பன் என்பதில் 'அன்' தன்மை யொருமை வினைமுற்று விகுதி. 'அன்' என்பது தன்மை யொருமை வினைமுற்று விகுதியாக வருதலே யன்றி, 'அறிஞன்;' 'வந்தனன்;' வலியன், கடுவன்; என முறையே ஆண்பாற் படர்க்கைப்பெயர் விகுதியாயும், ஆண்பாற் படர்க்கை வினைமுற்று விகுதியாயும், ஒன்றன்பாற் படர்க்கைப்பெயர் விகுதியாயும் வருதல் காண்க. கடவுள் விஷயமாகப் பேசும்போது 'நான்' என்பதற்குப் பதிலாக அடியேன் என்றும், 'நீ' என்பதற்குப் பதிலாகத் தேவரீர் என்றும் கூறுவது ஆன்ருேர் மரபாகலின் 'அடியேன்' என்று பொருள் கூறினும். கடவுள் விஷயமாகப் பேசும் போதும் நீ, நான் என்று கூறுவாருமுளர். அது அத்தகைச் சிறப் புடைத்தன்று. யானை திறை கொண்டவனை யென்னுளத்தேகொண்டு

சோணசைலற் றுதிப்பன் எனமுடிக்க. மனமானது பலவித எண்ணங் களாலும் சிந்தனைகளாலும் பலவித கவலைகளாலும், பகிர்முக விஷயங் களிலே விரைந்து செல்லும் இயற்கையுடைமையாலும் மனதைக் 'குதிரை' என்றார். இதனை,

**தாயுமானவர்**

"எண்ணாத வெண்ணமெலா மெண்ணியெண்ணி யேழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே" எனவும்,

"சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற திறமரிது" எனவும்,

வருமாற்றானறிக. மனதைப் பகிர்முக விவகாரங்களில் செலுத்திப் பாழாக்காமல், மனதைச் செம்மையாக்க வேண்டும்; அவ்வாறு செம்மை யாக்கினால் ஆன்மலாபத்தை யடையலாம். இதனாலன்றோ,

**சிவவாக்கியர்**

"மனமது செம்மையானால் மந்திரஞ் செபிக்க வேண்டாம்"

எனக் கூறியுள்ளார்கள். பிற ஆசிரியர்கள் மனதைக் குரங்கென்றும் கூறியுள்ளார்கள். இதனை,

**தாயுமானவர்**

"காடுங் கரையு மனக்குரங்கு கால்விட் டோட வதன்பிறகே
யோடுந் தொழிலாற் பயனுளதோ" எனவும்,

**திருவருட்பா**

"பாழு மனக் குரங்காட்டம் பார்க்கமுடியா தே" எனவும்,

இன்னும் பலவாறுங் கூறியுள்ளார்கள். யானை திறை கொண்ட விநாயக னொருவனுக்கேயன்றி மற்றெவர்க்கும் மனமாகிய குதிரை யைக் கப்பமாகக் கொள்ளுவது சாத்தியமன்று என்பார், 'மனமாங் குதிரை திறை கொண்டவனென் றேத்துங் குரைகழற்கால் யானை திறை கொண்டவன்' என்றார். மொழியன்பர்-இரண்டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்கதொகை. அன்பர் மனம்-ஆறாம்வேற்று மைத்தொகை நிலைத்தொடர்.

மனம் என்பது மனன் என மொழியிறுதிப்போலியாயும் வரும். கழல் என்பது பண்டைக் காலத்தில் வீரத்தின் அறிகுறியாக வீரர்கள் காலில் அணிந்து கொள்ளும் ஓராபரணம். கழலிற் கட்டப்படுவதாகிய காரணம்பற்றி வழங்கும் பெயராய் ஒரு பொருளுக்கே சிறப்புப்பெயராய் நிற்கையால், கழல் என்பது காரணச் சிறப்புப்பெயர். உள்ளம் என்னும் பதம் உளம் என்று வந்தது இடைக்குறை. திறை-கப்பம் (Tribute) திரை-அலை(Waves) றகர ரகர மாறுபாட்டால் பொருள் மாறுபாடடைதலும் உணர்க. உளத்தே என்பதில் ஏகாரம் அசை. உளத்தே கொள்ளுதலாவது யானை திறை கொண்ட விநாயகனை மனதிலே சிந்தித்தலாம். தனக்கென சுவதந்தரமாக ஒரு ஆற்றலுமில்லாமையாக மனதில் நினைப்பதாலும் பெருமானை ஆண்டான் என்றும் தன்னை அடிமை என்றுங் கருதிவருவதாலும், விநாயகப்பெருமான் திருவருள் இன்றேல் எத்தொழிலும் முடியாதென்றும், தன்னால் முடிந்த எந்தக் காரியத்தையும் அப்பெருமான் திருவருளே கூட்டிவித்ததாகவும் கருதும் ஞானிகள் கொள்கை உடையவராகலானும் 'என் உளத்தே கொண்டு' என்றார்.

காசி காண்டம்

"மாற்றரிய தொல்பிறவி மறிகடலி னிடைப்பட்டுப்
போற்றுறுதன் குரைகழற்கால் புணைபற்றிக் கிடந்தோரைச்
சாற்றரிய தனிமுத்தித் தடங்கரையின் மிசையுய்க்குங்
காற்றெறியுந் தழைசெவிய கடாக்களிற்றை வணங்குவாம்"

எனக் கூறியபடி, நீக்குதற்கரிய பிறவியாகிய சமுத்திரத்திலகப்பட்டுக் கொண்டவர்களை முத்தியாகிய கரையில் சேர்ப்பவர் விநாயகக்கடவுளாகலானும்,

சீகாளத்திப்புராணம்

"தருமஞ் சந்திகழ் தாமரை யோன்பத
கருமஞ் சந்தி கடுப்பவர் வான்பதந்
தருமஞ் சந்திரற் றோய்திருக் காளத்தி
வருமஞ் சந்தி யானை வணங்குவாம்"

எனக் கூறியபடி, திரிமூர்த்திகள் பதவிகளையும் பாலிப்பவர் விநாயகக் கடவுளாகலானும்,

## பிரபுலிங்கலீலை

"சுரர்கு லாதிபன் றூய்மலர் நந்தனம்
பெருக வார்கடல் பெய்த வயிற்றினேன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்"

## கந்தபுராணச் சுருக்கம்

"அந்நாளி னந்தாத நந்தனவனம்பூவி லம்பற்றுவாட விமையோர்
மன்னான விந்திரன் வருந்தா விருந்திட"

"இதுநிற்க முனமைங் கரப்பிள்ளை தள்ளு மெழில்கொண்ட
நதிவந் திருங்காழி தன்னிற்,
பொதுளுற்று மெலிகின்ற நவநந்தனத்திற் புகுதத்தழைப்ப"

எனக்கூறியபடி, தேவேந்திரன் நந்தவனம் வாடியிருக்க அகஸ்தியரது கமண்டலஜலத்தைக் கவிழ்த்து அவனது நந்தவனத்தைச் செழிக்கச் செய்தபக்தானுகூலன் விநாயகப்பெருமானுகையாலும், தனது நூலும் முட்டின்றி முடியுமாறும், அந்நூல் முட்டின்றி முடிந்து என்றும் நிலவுமாறும், அப்பெருமான் திருவடிகளைத் தனது மனதில் சிந்தித்து சோணசைலப் பெருமானைத் துதிப்பேன் என்பார், 'உளத்தேகொண்டு சோணசைலற் றுதிப்பன்' என்றார்.

## விநாயக புராணம்

"திங்களணி சடைப்பெருமான் பூசையாற்றித்
திரிமதிலுங் கடந்திடமுன் னின்றான் யாவன்"

என்பதனுல் விநாயகப்பெருமான் பேராற்றல் உணர்க. பூலோக சரஸ்வதியாகிய ஔவைப்பிராட்டியார், நக்கீரதேவர், கபிலதேவர், நளன், சந்திராங்கதன், சண்முகப்பெருமான், ஆதிசேடன், புருசுண்டிமகரிஷி முதலியோர் விநாயகப்பெருமானைப் பூசித்து நற்பேறு பெற்றவர்களாகும்.

விநாயகப்பெருமானை மனதில் சிந்தித்து சோணசைலப் பெருமானைத் துதிப்பேன் என்பது கருத்து.

விநாயகரை மூத்தபிள்ளையாரென்றும், சுப்பிரமணியரை இளைய பிள்ளையாரென்றும் கூறுவது சைவசாம்பிரதாயம்.

## விநாயகர் வரலாறு

கயமுகாசுரன் என்னும் ஒரு அசுரன் அநேககாலம் சிவபெருமானை நோக்கித் தவம்செய்ய, சிவபெருமான் அவன் தவத்திற்கிரங்கி பார்வதி சமேதராய் இடபவாகனத்தின்மேற் காட்சிகொடுத்து யாது வேண்டுமென்று கேட்க, அவன் தான் எவர்களாலும் எந்த ஆயுதங்களாலும் என்றைக்கும் சாகாமல் உயிருடன் வாழவேண்டுமென்று வரம் கேட்க, அவ்வாறே அவனுக் களித்துவிட்டு அந்தர்த்தானமாயினர். அவன் பெற்ற வரத்தின் பலத்தால் தேவர்களைப் பலவாறு வருத்தவும் அத்தேவர்கள் சிவபெருமானிடம் முறையிடச் சிவபெருமான் அத் தேவர்களை நோக்கித் "தேவர்களே! உங்கள் துன்பங்களை நீக்க ஒரு புத்திரனை யருளிச்செய்து கயமுகாசுரனைக் கொல்லும்படி அனுப்புகிறேம்" என்று திருவாய்மலர்ந்தருளினர். இவ்வாறு திருவாய்மலர்ந் தருளியபிறகு பார்வதியுடன் அப்பர்வதத்திலுள்ள சித்திரச்சாலையை யெய்தி, அங்கு விச்சுவகன்மனல் எழுதப்பட்டுள்ள மந்திரவடிவமாகிய சித்திரங்களைப் பார்வதிதேவியாருக்குக் காட்டி, "பெண்ணே! முதலிலுள்ள பிரணவாகாரமாகிய இரண்டு யானைகளில் முற்பட்டது திரிமூர்த்திகளைத் தந்தது அஃதெம் வடிவம். அடுத்தது சத்திகள் மூவரையும் தந்தது. அஃதுன்வடிவம். ஆதலின் யாம் அப்பிரணவ சித்திரங் களின் வடிவமாகுதும்" என்று திருவாய்மலர்ந்தருள, உமாதேவியாரும் அக்கருத்துக்கிசைந்தனர். அப்பொழுது இறைவர் ஆங்கோர் திருவிளையாடலைச் செய்ய, அதனல் அப்பிரணவ வடிவத்தினின்றும் விநாயகர் திருவவதாரம் செய்தனர். பிறகு தேவர்கள் கயமுகாசுரன் கொடுந் துயர் பொறுது விநாயகக்கடவுளை யுபாசிக்க, அவர் அவனுடன் அமராற்றி அவன் எவ்வகை யாயுதங்களாலும் இறவாதவனுகலின் தனது திருக்கோடொன்றை முறித்து அவன்மீது எறிந்தமாத்திரத்தில் அவன் மூஷிக-(பெருச்சாளி) வடிவாயினன். அதனை விநாயகர் வாகனமாகக் கொண்டனர். இதனை,

**விநாயகபுராணம்:** *கயமுகனுற்பத்திபடலம்*

*"வான நாட்டுறை யும்பரான் மன்னுமா னிடராற்*
*றான வர்குலத் தவர்களான் மற்றுளோர் தம்மாற்*
*கான கத்துறு விலங்கினுற் கருதுயி ரிறந்தே*
*யீன முற்றிடா வகையுமெற் கீந்தரு ளென்றான்"*

*"மும்ம தம்பொழி கறையடிக் கைம்மலை*
*முகமுடை யசுரன்றான்*
*றம்மு ருத்தனில் விளிந்திடா வரமெமைக்*
*கேட்டில னதுதன்னுற்*
*றெம்மு னைக்கடி னின்னையா தியர்களாற்*
*றீர்கிலாத் தீயோனைச்*
*செம்மை மிக்குயர் கரிமுகத் திறைவனுய்ச்*
*சென்றடு கிற்பேமால்."*

*"நின்றவன் றன்னை நோக்கி நெடியபல் படைக ளேவிற்*
*சென்றிவன் றன்னைக் கொல்லாச் சிவனருள் வரத்தின் சீரா*
*லின்றினிச் செய்வ தென்னென் றிறைவரை யுன்னி யெந்தை*
*தன்றிருக் கோட்டி லொன்று தடக்கையின் முறித்துக் கொண்டான்."*

*"தடக்கையி லேந்துங் கோட்டைத் தந்தியா மவுணன் மீது*
*விடுத்தலு மனையான் மார்பை வெய்தெனக் கீண்டு போகி*
*யுடற்படி மிசையே வீழ்த்தி யொல்லையி லோடித் தெண்ணீர்க்*
*கடற்படிந் தமலன் மைந்தன் கரத்தில்வந் திருந்த தன்றே."*

என வருவனவற்றா னுணர்க. கந்தபுராணத்தில் விநாயகர் வரலாறு விநாயகபுராணத்தில் கூறியதனின்று சிறிது மாறுதலாக இருக்கும்.

விநாயகக்கடவுள் ஐந்தாம் வேதமாகிய பாரதத்தை மேருமலையில் தனது திருக்கோட்டை எழுத்தாணியாகக்கொண்டு எழுதியருளினர்.

இதனை, **பாரதம்**

*"நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே*
*வாடாத தவவாய்மை முனிராசன் மாபார தஞ்சொன்னநாள்*

ஏடாக மாமேரு வெற்பாக வங்கூரெ ழுத்தாணிதன்
கோடாக வெழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு கூர்வாமரோ."

என்பதனு லறிக. இன்னும் அநேக சரிதங்கள் உள; விரிக்கிற் பெருகும்.

### விநாயகமூர்த்தங்களில் முக்கியமானவை

| | |
|---|---|
| 1 வக்ரதுண்டவிநாயகர் | 7 தூமகேதுவிநாயகர் |
| 2 சிந்தாமணிவிநாயகர் | 8 கணேசவிநாயகர் |
| 3 கஜானனவிநாயகர் | 9 கணபதிவிநாயகர் |
| 4 விக்கினவிநாயகர் | 10 மகோற்கடவிநாயகர் |
| 5 மயூரேசவிநாயகர் | 11 உடுண்டிவிநாயகர் |
| 6 பாலசந்திரவிநாயகர் | 12 வல்லபைவிநாயகர் |

யானை திறைகொண்ட விநாயகர் திருவண்ணுமலையிலுள்ள ஸ்தல விநாயகர். இதனை, சைவ எல்லப்பநாவலர் இயற்றிய,

### அருணுசல புராணம்

"மதமூன்று மாருக வருங்களிற்று முகத்தானை
மனத்தி லேதான்
பதமூன்று மருந்தவர்க்குப் பதமூன்றுங் கடந்தபதம்
பாலிப் பானை
விதமூன்று புறங்கடிந்தா ரளித்தருளு மொருமுதலை
வேரோ டேசஞ்
சிதமூன்று பிறப்பொழிக்கு மானைதிறை கொண்டவனைச்
சிந்தை செய்வாம்."

### அண்ணுமலைச்சதகம்

"அண்டமனைத் தும்பரவு மண்ணு மலைச்சதக
மொண்டமிழாற் பேதையே னோதவே—தொண்டர்பணிந்
தெண்ண வரந்தருநல் யானைதிறைக் கொண்டருண்முக்
[illegible]"

அஷ்டாவதானம் சபாபதிமுதலியார் இயற்றிய,

## ஸ்ரீ அருணசலேசுவரர் பதிகம்

"சீர்வளருஞ் செய்ய திருவருணை நாதர்மேல்
தார்வளருஞ் செந்தமிழ்க்குத் தந்துதவும்—நீர்வளங்கூர்
தேனைநிறை வண்டுண்டு தென்பாடுந் தென்னருணை
யானைதிறை கொண்டா னருள்."

என்பனவற்று னறிக. இவ்வாறே ஒவ்வொரு ஸ்தலத்திலும் ஒவ்வொரு விநாயகர் விளங்கிவருகிறார். திருவொற்றியூரில் குணாலய விநாயகரென்றும், திருமயிலையில் கற்பக விநாயகரென்றும், திருவான்மியூரில் திருமுடி விநாயகரென்றும், வேதாரணியத்தில் வீரகத்திச்சேதக விநாயகரென்றும், காஞ்சிபுரத்தில் விகடசக்கிர விநாயகரென்றும், ஒவ்வொரு ஸ்தலத்திலும் ஒவ்வொரு நாமத்துடன் விளங்கி வருகிறார். அந்த அந்த ஸ்தல விநாயகர்களின் சரித்திர விவரங்களை அந்த அந்த ஸ்தல புராணங்களிற் கண்டுகொள்க.

யானைகளைக் கப்பமாகக் கொண்டமையால் திருவண்ணமலையிலுள்ள விநாயகருக்கு யானை திறைகொண்ட விநாயகரெனத் திருநாமம் அமைந்தது.

## விநாயகப்பெருமான் யானை திறைகொண்ட வரலாறு

தலேச்சுரம் என்னும் அருமைத் திருநாமமுடைய திருவண்ணமலையில் நமச்சிவாயமூர்த்தி யென்றொரு சித்தர் இருந்தார். அச்சித்தர் அத்திருவண்ணமலையின்மேற் குகைசெய்து நிஷ்டைபுரிந்துகொண்டிருந்தமையால், எல்லோரும் அச்சித்தமூர்த்திகளை குகைநமச்சிவாய தேசிகர் எனக் கூறி மகிழ்வாராயினர். அருணகிரியந்தாதி தனி வெண்பா மாலை முதலிய நூல்களை குகைநமச்சிவாயதேசிகர் இயற்றி நன்மாணக்கர்களுக்கு உபதேசம்செய்துகொண்டும் நிஷ்டையிலமர்ந்துகொண்டும் காலங்கழித்து வருவாராயினர். கன்னடதேசத்தவரான இக் குகைநமச்சிவாயதேசிகர் மல்லிகார்ச்சுனத்திலிருந்து தன் குருமூர்த்தியிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு தெற்கேயுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு வருகையில் திருவண்ணமலைக்கு வந்தனும்

அருணாசலேஸ்வரர் தன் குருவாக எழுந்தருளி அனுக்கிரகம் செய்ய, ஆனந்தமேலீட்டினால் அத்திருவண்ணாமலையை விட்டு நீங்க மனம் இல்லாதவராய் அப்பதியிலேயே குகையினிடத்தே மகிழ்ச்சியோடு நிஷ்டைகூடி சிவானுபூதிச் செல்வரா யமர்ந்திருந்தனர். அநேகம் தனிப்பாடல்களும் அவ்வவ் வமையத்துக் கூறியுள்ளார். இவர்பால் உபதேசம் பெற்றவர்கள் எண்ணிறந்தோர். ஆயினும் அவர்களுள் தலைமைவகித்தவர் குருநமச்சிவாயர் என்பவர். இக்குருநமச்சிவாயர் சிதம்பரத் திருப்பணி செய்தவர். ஆகையால் இவரை சிதம்பரத் திருப் பணி செய்த குருநமச்சிவாயர் என்றும், இவரது பரமாசாரியமூர்த்தி களை குகைநமச்சிவாயமூர்த்திகளென்றும் கூறிவந்தார்கள்.

இது இப்படியிருக்க, வடதேசத்தினின்றும் வந்து திருவண்ணா மலையில் வசித்திருந்த முகிலன் என்னும் அரசன் அந்நகரவாசிகளுக் கும் சிவனடியார்களுக்கும் பலவாறு இடையூறு செய்துகொண்டிருக்க, அந்நகரவாசிகள் தமது பதியில் வசிக்கும் குகைநமச்சிவாயதேசிகரிடம் தெரிவிக்கவும் அவர் சற்றுநேரம் மோனநிலைகொண்டு பிறகு,

"சூலங் கரத்திருக்கச் சோதிமழு வாளிருக்க
வாலமுண்ட காலத் தருளிருக்க—மேலே
யெரித்த விழியிருக்க விந்நாட் சோணேசர்
தரித்ததென்ன காரணமோ தான்."

என்று திருவண்ணாமலையிற் றிருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக் கும் ஸ்ரீ அருணாசலேஸ்வரரைத் தோத்தரித்தவுடன், அருணாசலேஸ் வரர் தமது மூத்த குமாரராகிய விநாயகமூர்த்தியிடம் அந்நகரவாசி களின் துன்பத்தை நீக்கும்படி கட்டளையிடவும், சிவபெருமானது கட் டளையைப் பெற்றவராகிய விநாயகக்கடவுள் அன்றையதினம் இராத் திரியில் முகிலனென்னும் அவ்வரசனைப் பெரும் பயமுறுத்தினர். அவ் வரசன் (முகிலன்) பயந்து விநாயகப்பெருமானென்று அப்பெருமான் அருளாலுணர்ந்து அப்பெருமான் திருவடிகளை யுள்ளன்போடுவணங்கி உத்தம இலக்கண மமைந்த அரசுவாபோன்ற சில யானைகளை அபராத க்ஷமாபணத்திற்கு அறிகுறியாக கப்பமாகக் கொடுத்துப் பலவாறு வந்தனை வழிபாடு செய்ததின் காரணமாக அந்த விநாயகர் அந்நாட்

டொடங்கி இந்நாள்காறும் 'யானை திறைகொண்ட விநாயகர்' என்னும் திருநாமம்பெற்று விளங்கி வருகின்றார். இச்சரிதத்தை குகைநமச்சி வாயதேசிகர் சரித்திரத்தா னறிந்துகொள்க.

'கொண்டவன்' என்பது தெரிநிலை வினையாலணையும் பெயர் களுள், உயர்திணை யாண்பா லொருமைப் படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலை வினையாலணையும் பெயர். என்னுளத்தே என்பதில் என் + உளத்து என்பது "தனிக்குறில் முன்னொற்று" என்னும் சூத்திரப்படி நிலைமொழியீற்று னகர மெய்யிரட்டித்து, 'உடன்மே லுயிர்வந்து' என்னும் சூத்திரவிதியால் இரட்டித்த னகர மெய்யின் மேல் விகுதி உகர வுயிரேறி முடிந்தது. கொண்டு-இறந்தகால வினை யெச்சம்: கொள் என்னும் பகுதியும் உ என்னும் வினையெச்ச விகுதி யும், அவைகளுக்கு இடையே இறந்தகாலம் காட்டும் டகரவிடைநிலை யும் பெற்று, பகுதியீற்று ளகரமெய் ணகரமெய்யாகத் திரிந்து "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலை டகர மெய்யின்மேல் விகுதி உகர வுயிரேறி முடிந்தது. குதிரை யானை இரண்டும் பால்பகாவஃறிணைப் பெயர்கள்.

இச்செய்யுள் இருவிகற்ப நேரிசைவெண்பா; ஒருவிகற்ப நேரிசை வெண்பாவும் உண்டு. வெண்பாக்கள்: நேரிசை, இன்னிசை, குறள், சிந்தியல், பஃறொடை முதலியனவாகும். அவற்றின் இலக்கணங்களை யாப்பிலக்கணக் காரிகையில் காண்க. வெண்பாப் பாடுதலில் சிறப்புற்ற வர் புகழேந்திப்புலவர். இதனை "வெண்பாவிற் புகழேந்தி" என்பதனு னறிக. புகழேந்திப்புலவராற் பாடப்பெற்றது நளவெண்பா முதலியன. இந்நூலின்புறமாக முதலிற் கூறிய காப்புச்செய்யுளாகிய இந நேரிசைவெண்பா ஒன்றும், இறுதியிற் கூறும் தற்சிறப்புப்பாயிரச் செய்யுளாகிய நேரிசைவெண்பா ஒன்றும் நீங்கலாக நூறு செய்யுள் உடையது.

## நூல்

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அண்ணன்மா புகழ்மூ வரும்புனை யரும்பா
வன்றியென் கவியுநின் றனக்காம்
பண்ணுலா மிருவ ரிசைகொணின் செவியிற்
பாணிமா னொலியுமேற் றிலையோ
விண்ணுலா முடியின் மேருவின் வடபால்
வெயிலொரு புடையுற வொருபாற்
றண்ணிலா வெறிப்ப வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(**பதவுரை**) வடபால் - வடதிசைக் கண்ணுள்ள, விண் உலாம்-ஆகாயத்தை யளாவிய, முடியின்-உச்சியையுடைய, மேருவின்-மேரு மலையைப்போல, வெயில்-சூரியன், ஒரு புடை உற - ஒரு பக்கத்தில் கிரணத்தைவீச, தண் நிலா-குளிர்ச்சிபொருந்திய சந்திரன், ஒரு பால் எறிப்ப-ஒருபக்கத்தில் சந்திரிகையை வீச, வளர்ந்து எழும்-ஓங்கி வளர்ந்திருக்கிற, சோணசைலனே - சோணசைல வடிவமானவரே கைலை நாயகனே-திருக்கைலாய மலைக்குத் தலைவரே! இருவர்-தும்புரு நாரதரென்னும் இருவர்களுடைய, பண் உலாம் இசை கொள்-பண் அமைந்த (இனிமையான) இசையினைக் கேட்கின்ற, நின் செவியில்-தேவரீருடைய திருச்செவியில், பாணி மான் ஒலியும்-(தேவரீரது) திருக்கரத்திலுள்ள மானின் ஒலியையும், ஏற்றிலையோ-(தேவரீர்) அங்கீகரித்துக்கொள்ள வில்லையோ! (அக்காரணத்தினால்,) அண்ணல்-பெருமை பொருந்திய, மா புகழ்-மிகுந்த புகழினையுடைய, மூவரும்-திருஞானசம்பந்தர் முதலாகிய மூவர்களும், புனை அரும்பா அன்றி-அணிந்த (பாடிய) அருமையான திருப்பாடல்களே யல்லாமல், என் கவியும்-(புல்லறிவினனாகிய) அடியேன் பாடலும், நின்றனக்கு ஆம்-தேவரீருக்கு அங்கீகரித்துக் கொள்ளக்கூடியதாகவே யிருக்கும்; எ-று.

(**விருத்தியுரை**) இச் செய்யுள் இந்நூலின் முதற்பாடல். இச் செய்யுள்களில் முதலிரண்டு அடிகளில் நூலாசிரியரது வேண்டு கோளும் பின்னிரண்டடிகளில் மலையின் சிறப்பும் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறே ஏனைய செய்யுள்களிலும் கூறப்பட்டுள்ளது. அவற்றை அவ்வச் செய்யுள்களில் காண்க.

சோணசைல மாலையாகிய இந்நூலைக் கற்கப் புகுவதற்குமுன் நூல் என்ற பெயர்க்குப் பொருளுணரவேண்டியது ஆவசியகமாதலால் அதற்குப் பொருள் யாதோவெனின்? நூல்போறலின், நூலென்ப; பாவைபோல்வாளைப் பாவை யென்றதுபோல. என்னை? நுண்ணிய பல வாய பஞ்சின் நுனிகளாற் கைவல்மகடூஉத் தனது செயற்கை நலம் தோன்ற ஓரிழைப்படுத்தலாம். உலகத்து நூல் நூற்ற வென்பது: அவ் வாறே, சுகிர்ந்து பரந்த சொற்பரவைகளாற் பெரும்புலவன் தனது உணர்வு மாட்சியின் நூற்கப்படலி னென்பது. இனி, ஒரு சாரார், நூல்போலச் செப்பஞ்செய்தலின் நூலென்ப. இனி, **தந்திரம்** என் னும் வடமொழிப் பொருளை நூலென வழங்குதல் தமிழ்வழக்கெனக் கொள்க. இனி, நூல் என்ற பெயரை 'ஸூத்ரம்' என்றும் வட மொழியின் பொருளமைந்த தென்பாருமுளர். சொற்களே பஞ்சு ஆகவும், செய்யுளே இழையாகவும், செவ்வையாகிய சொற்களையறிந்த புலவனே நூற்கின்ற பெண்ணாகவும், வாயே கையாகவும், அறிவே நூற்கும் கதிராகவும் குற்றமில்லாத கல்வி நூலானது முடியுந்தன்மை. ஆதலால், நூல் என்பது உவமையாகுபெயர் எனக் காண்க. பஞ்சு கொண்டு இழைத்து நூற்கப்படும் நூல்போலச் சொற்கொண்டு தொடுத்து அமைக்கப்படுவது நூலென்க. இதுவன்றி, அறிவின் வளத்தை வளர்வித்து அறியாமையின்மிகுதியை நீக்கி, கெட்ட மரத் தினது மிக்க கோணலைப் போக்குகின்ற எற்றுநூலின் அம்மாட்சி போலவே கல்விநூலின் மாட்சிமை மனிதரது மனத்தின் கோணலைப் போக்கும். இதனாலும், நூல் என்பது உவமையாகுபெயர் எனக் காண்க. மரம் முதலியவற்றின் கோணலைத்தீர்த்துச் செப்பஞ் செய் யும் எற்று நூல்போல மனத்தின் கோணலைத்தீர்த்துச் செவ்வை செய்வது நூலென்க. இதனை,

நன்னூல்

"பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—வெஞ்சாத

கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு." எனவும்,

"ஊரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு."

எனவும் வருவனவற்று னறிக. அண்ணல்—"பெருமையிற் சிறந் தோன் அண்ண லென்ப" என்பது சூத்திரம். உயர்திணை யாண்பாற் சிறப்புப்பெயர். "கிளையெண்குழூஉ முதல்" என்னும் சூத்திரத்துள் 'இன்னன' என்றதனால் கொள்ளப்பட்டது.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனூர், திருநாவுக்கரசு நாயனூர், சுந்தரமூர்த்தி நாயனூராகிய சமயாசாரியர்கள் மூவரும் பெருமையிற் சிறந்தவர்களாய்த் தமக்கு ஒப்பாரும் மிக்காருமின்று விளங்குபவர்க ளாகலின், 'அண்ணல்' என்றூர்.

திருக்குறள்

"தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று."

எனக் கூறியபடி புகழ்ச்சியில்லாமல் உலகத்தில் வாழ்தல் பிரயோசன மில்லையாகலின் ஒவ்வொருவரும் புகழ்பெற விரும்பினும் அப்புகழ் அவர்களுக்குக் கிடைப்பது அருமையினும் அருமையாக சமயா சாரிய மூர்த்திகளாய மூவர்களுக்கு புகழ்ச்சி அவர்கள் முயற்சியின்றி இயற்கையா யமைந்த புகழ்ச்சி யெனவும் அப்புகழ்ச்சியும் மிகுந்த புகழ்ச்சியாகலின் 'மா புகழ்' என்றூர். இதனை,

நால்வர் நான்மணிமாலை

"இடுகாட்டுண் மாத ரெலும்பிற் புரண்மால்
சுடுகாட்டு ளாடுவாற் சுட்டி—நெடுகாட்டுஞ்
சம்பந்தா வென்புநின்பாற் றந்தாக்கிக் கொண்டிலனென்
கும்பந்தா மென்னுமுலைக் கொம்பு."

"பயனுகு நல்லாண் பனைக்குவிடத் திற்கு
மயிலாகு நோய்க்கு மருந்தா—முயிராகுஞ்
சிந்து மெலும்பிற்குச் சிரபுரத்து காவலன்சம்
பந்த னியம்புதிருப் பாட்டு."

"அருகக் கடல்கடந் தேறிய தோசிலை யம்பியெனப்
பெருகக் கடல்கடந் தேறிய தோசொல் பெருமிடறு
கருகக் கடல்விட முண்டோ னடியிற் கசிந்துமன
முருகக் கடலன்பு பெற்றசொல் வேந்த வுனக்கரிதே."

"பெற்று னிளைப்பெற் றவர்போற் பெறலும் பிறப்பதுண்டே
னற்று ரணியி னிளைப்போற் பிறப்பது நல்லகண்டாய்
செற்றுர் புரமெரி செய்தவில் வீரன் றிருப்பெயரே
பற்று மறிவெண் டிரைக்கட னீந்திய பாலனே."

"படியிலா நின்பாட்டி லாரூர னனிவிருப்பன்
பரம னென்ப
தடியனே னறிந்தனன்வான் றெழுமீச னிளைத்தடுத்தாட்
கொண்டு மன்றித்
தொடியுலா மென்கைமட மாதர்பா னினக்காகத்
தூது சென்று
மிடியிலா மனைகடொறு மிரந்திட்டு முழன்றமையால்
விளங்கு மாறே."

"அறிந்து செல்ல முடையானு மளகைப் பதியாற் றேழமைகொண்
டுறழ்ந்த கல்வி யுடையானு மொருவன் வேண்டு மெனவிருந்து
அறந்த முனிவர் தொழும்பரவை துணைவா நினைத்தோ ழமைகொண்டா
சிறந்த வறிவு வடிவமாய்த் திகழு நுதற்கட் பெருமானே." [ன்

"போத முண்ட பிள்ளை யென்பு பொருகண் மாது செய்ததோ
காதல் கொண்டு சொல்லின் மன்னர் கன்மி தப்ப வுய்த்ததோ
வாய்தி றந்து முதலை கக்க மகனை நீய ழைத்ததோ
யாது நம்பி யரிது நன்றெ னக்கி யம்ப வேண்டுமே."

அரசன் பரிமேல் வரநெடுநல் யானை யெருத்தத் தமர்ந்துபோய்
வரதன் கைலை மலையடைந்த மணியே மணிநீ ரிடுபசும்பொன்
றிரைசங் கெறியுங் குளத்துவரச் செங்கற் செம்பொ னுப்பாடும்
பரிசின் றெனக்குன் செம்பவளத் திருவாய் மலர்ந்து பகர்வாயே."

என வருமாற்று னறிக. பெருமைவாய்ந்த மிக்க புகழினையுடைய சமயாசாரியரான மூவர்பாடலுக்கு தும்புரு நாரதராகிய இருவர் இசையையும், தன்னுடைய பாடலுக்கு மானிறெலியையும், சோணசைலத்திற்கு மேருமலையும் உவமைகளாக்கப்பட்டன. தும்புருநாரதர் இசைக்கும் மானினது கத்தலுக்கும் எவ்வளவு ஏற்றத்தாழ்வு உண்டோ அவ்வளவு ஏற்றத்தாழ்வு தன் பாடலுக்கும் மூவர் பாடலுக்கும் உளதெனத் தன்னை யிழிவுபடுத்திக் கூறினர். மூவர் சொலுந்தமிழ் கேட்கும் திருச்செவியில் அடியேன் பாடலையும் அங்கீகரித் தருளுவீரென்ற ஒரு நம்பிக்கை என்மனதில் உண்டு. அந்த நம்பிக்கை எதனாலேற்பட்டதெனின், தும்பு நாரதரின் இசையைக் கேட்ட தேவரீரது திருச்செவி மானினது கத்தலையும் அங்கீகரித்துக்கொண்ட காரணத்தினாலென்க. மூவர் பாடலை 'அரும்பா' என்று கூறவே, தன் பாடல் 'புன்பா' வெனப் பெறப்பட்டது. இருவர் என்பதற்கு கம்பள, அசுவதரர் என்னும் இரண்டு கந்தருவர் என்று கூறினும் பொருந்தும். 'என் கவியும்' என்பதிலுள்ள உம்மை இழிவு சிறப்பும்மை. 'பண்ணுலாம்,' 'விண்ணுலாம்' என்பவைகளிலுள்ள உலாம் என்றது முதலில் உலாவும் என இருந்தது: 'உலாவும்' என்பது உலாம் என வந்தது, "செய்யுமென் னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்" என்னும் சூத்திர விதிப்படி யென்க. இதுபோலவே, ஆகும் பொருள் - ஆம்பொருள் என்றும், போகும்போது-போம்போது என்றும் வரும்.

'மேருவின்' என்பதில் இன் என்பது ஐந்தாம் வேற்றுமையுருபு ஒப்புப்பொருளில் வந்தது; காக்கையிற் கரிது களம்பழம் என்பது போல களம்பழம் உவமேயம்; உவமேயத்திலுந் தன்னிலுமுள்ள பொதுத்தன்மை கருமை; அதனல் உவமானமாகிய பொருள் காக்கையாதலாற் 'காக்கை' ஒப்புப்பொருள். இதனை உவமைப்பொருவு என்பர்.

சூரியநேத்திரம் ஒருபால் வெயிலை வீசவும், சந்திரநேத்திரம் ஒருபால் சந்திரிகையை வீசவும் சோணசைலமே நெற்றிக்கண்ணாக விளங்குகின்ற தென்னும் கருத்துத்தோன்ற 'வெயில் ஒருபுடையுற வொருபாற் றண்ணிலா வெறிப்ப' எனக்கூறினார். மேருமலை வடக்கின்கண்ணே யுள்ளதாகலின் 'வடபான் மேரு' என்றார். 'வடபால் மேருவின்' எனக்கூறியதனால் சோணசைலம் தென்பால் மேருவெனப் பெறப்பட்டது. கம்பளன் அசுவதரன் என்னும் பெயருடைய இரண்டு கந்தருவர்கள் சிவபெருமானை நோக்கித் தவமிருந்து அச்சிவபெருமானருளினால் தோடு என்னுங் காதணியாகி இடைவிடாமல் இசைபாடிக் கொண்டிருந்து சிவபெருமானை மகிழ்விக்கின்றார்கள்.

## தேவாரம்

"தோடுடைய செவியன் விடையேறி" எனவும்,

வருதல் காண்க. கைலை - கயிலை, மொழி முதற்போலி, கைலாயமலையானது இந்திரன்முதலிய தேவர்களுடைய விண்ணுலகமும், பிரமதேவன் வாழும் சத்தியலோகமும், விஷ்ணுவாழும் வைகுந்தமும் அழிந்துபோகும் பேரூழிக் காலத்தினும் தனது வலிமைகுன்றாது நின்றும் வளர்ந்தோங்கும் மலையாகலின் திருக்கயிலை 'ஊழிதோறும் ஓங்குமோங்கல்' என அருமைத் திருநாமமுற்றது. இதனை,

## திருவிளையாடற் புராணம்

"புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்
பரந்த வான்பதஞ் சக்கரப் படையுடைப் பகவன்
வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநா
ளுரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ் வோங்கல்"

என்பதனா னுணர்க. அரும்பா என்பது அருமையான பாடல். அதாவது:—

## நன்னூல்

"பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினில்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்"

எனக் கூறியுள்ளபடி (தோல், இரத்தம் இறைச்சி எலும்பு முதலிய) எழுவகைத் தாதுக்களினாலே உயிருக்கு இடமாகச் செய்யப்பட்ட உடம்புபோல பலவகைச் சொற்களாலும் பொருளுக்கு இடமாக கல்வி யறிவினால் பாடல் பாடும் வல்லமை யமைந்தோரால் அலங்காரம்பெற செயப்படுவது பாட்டாகும். இதில் குறித்ததற்கு மாறுதலாயுள்ளது அரும்பா வாகாமல் புன்பா வாகும். அத்தகைப் புன்பாட்டைச் சேர்ந்தது தாம்பாடும் நூல் என்பார், 'அரும்பாவன்றி யென் கவியும்' என்றார். கவி என்பது குரங்கு முதலிய பொருள் குறிக்கும் திரி சொல்லாயினும் ஈண்டு செய்யுள் என்னும் பொருண்மேனின்றது.

மேருமலையானது பொன்மலையாகலானும் இந்திரன், முதலிய திக்குப்பாலகர்களும் திரிமூர்த்திகளும வசிக்கும் தானமாயிருத்தலினா னும், மேருமலையின் தென்புறத்திலிருக்கும் நாவல்மரங்களின் சாறு ஓர் நதியாய் அம் மேருமலையைச் சூழ்ந்து வடதிசை நோக்கிச் சாம் பூநத ஆறு என்னும் பெயருடன் செல்லுவதனாலும், அதன் சலத்தை யுண்பவர் சுவர்ணமயமாய்ப் பதின்மூவாயிர வருடம் வாழ்வராகலானும் மேருமலையைச்சூழ்ந்த நவகண்டங்களுள் பாதகண்டம் நீங்க ஏனைய எட்டுக் கண்டங்களில் வசிப்போரும் நீடித்த ஆயுளும் ஒருவகை யுணவு முடையவராய் நரை திரை மூப்பிகழ்ந்தவராயிருப்பார்களாகலானும் சோணசைலத்தை மேருமலையோடு உவமித்தார் எனக்கூறுதலே சாலச் சிறப்புடைத்து. மேருமலையின் சிறப்பைப்பற்றியும், சாம்பூநத நதியைப் பற்றியும், அந்நதியின் ஜலமருந்துதலின் பலனைப்பற்றியும், எவை போகபூமி யென்பதைப்பற்றியும் எவை போகபூமி யன்றென்பதைப் பற்றியும் **சீவதருமோத்தரம்-கோபுரவியலிற்** பாக்கக் காண்க. விரி வஞ்சி இம்மட்டோடு விடுத்தாம்.

அன்றி-எதிர்மறைக் குறிப்பு வினையெச்சப் பகுபதம், அல்-என் னும் பகுதியும், றி - என்னும் குறிப்பு வினையெச்ச விகுதியும் பெற்று பகுதியீற்று லகரமெய் னகரமெய்யாகத் திரிந்து முடிந்தது. செவி பாணி (கை)—சினைப் பெயர்கள். நின் செவி-ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். பாணிமான்-ஏழாம் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். பால், புடை-ஏழாம் வேற்றுமை உருபுகள். நாயகன்

என்பதற்குத் தலைவன் என்பது பொருள். கைலைநாயகன் என்றால் கைலாய மலைக்குத் தலைவன். நாயகன்-கணவன் என்றும் பொருள். நமக்கெல்லாம் சிவபெருமானே கணவன். சிவபெருமா னொருவனே நாயகன். ஏனையோரெல்லாம் வடிவுமாத்திரையின் புருஷர்களாய் அமைந்திருப்பினும் மனைவிக்குப் புருஷனாக விளங்கினும் அவ்வாடவனுக்குஞ் சிவபெருமானே நாயகனாகும். இதனை,

திருவிளையாடற் புராணம்

"நாயகன் கவிக்குங் குற்ற நாட்டிய கழக மாந்தர்'

என்பதனா லறிக.

மகாராஜாதுறவு

"நின்னுடைய நாயகனை நினதுள்ளே யுறநோக்கி நிற்க மாட்டா
துன்னுடைய நாயகனென் றென்றனையே கருதிநீ யுழல்வ தென்னே
மின்னனைய விடையாய்கே ளனைவருக்கு நாயகனோர் மேலா மீசன்
அன்னவனை யேதேடிப் போகின்றே னெனவரசற் கரிவை சாற்றும்."

எனவும், மூவர்பாடல் அரும்பாடல் என்றும் தனது பாடல் புன்பாடலென்றும் இழித்துக் கூறியதுடன் தனது புன்பாடலையும் பெருமான் அங்கீகரிப்பர் என்னும் நம்பிக்கையுள்ள தென்றும், அந்த நம்பிக்கை தனக்கு எதனா லேற்பட்டதெனின் தும்புருநாரதர் இசையைக் கேட்ட பெருமான் திருச்செவி மானினது கத்தலையும் கேட்டதனாலென்க என்று கூறியருளினர். மூவர் பாடலுக்கும் தனது பாடலுக்கும் உள்ள உயர்ச்சி தாழ்ச்சியை இந்நூலாசிரியர் மீண்டும்,

திருவேங்கைக் கலம்பகம்

கூடற் பதியிற் சமணிருளைக்
குலைத்துத் திருவெண் ணீற்றொளி
கொடுத்துக் கருத்திற் குடிபுகுந்தென்
குலத்தைத் தொழும்பு கொளுங்கோவு
மாடற் பரியிற் சேரமா
னனையக் கயிலைக் கிரிமீதி
லானைக் கழுத்தி லிவர்ந்தனையு
மாசுந் திருநா வுக்கரசு

நாடப் பசும்பொன் னிடைபதித்த
நாக மணியிற் றமதுதமிழ்
நாட்டப் படுநின் றனதுதிரு
நாமத் தினைப்புன் மதியாலென்
பாடற் பதிப்ப திரும்பிலதைப்
பதிக்குந் தகைமை போலுங்காண்
பதியாய் வெங்கைப் பதியாளும்
பகராக் கருணைப் பெருமானே"

எனவரும் பாடலினாலே வற்புறுத்துதல் காண்க. (1)

துவக்கற வறிந்து பிறக்குமா ரூருந்
துயர்ந்திடா தடைந்துகாண் மன்று
முவப்புட னிலைத்து மரிக்குமோர் பதியு
மொக்குமோ நினைக்குநின் னகரைப்
பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற்
படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கல நடத்த வுயர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) பவம் கடல் கடந்து-பிறப்பாகிய கடலைத் தாண்டி, முத்தி அம் கரையில்-மோட்சமாகிய அழகிய கரையில், படர்பவர்-செல்ல முயலுவோர், திகைப்பு அற - (செல்லுங் காலத்தில் இடையில் நிகழும்) கலக்கம் நீங்க, நோக்கி-இதுவே செல்லு மிடமெனப் பார்த்துத் துணிந்து, தவம் கலன்-தவமாகிய கப்பலை, நடத்த-நடத்தும் பொருட்டாக, உயர்ந் தெழும் - ஓங்கி வளர்ந்திருக்கின்ற, சோண சைலனே - சோணசைல வடிவமானவரே!, கைலைநாயகனே-திருக்கைலாயமலைக்குத் தலைவரே!, துவக்கு அற-உடம்பு நீங்கும்படி, அறிந்து - (இனிமேலாயினும் பிறவாமைக்குரிய வழியை) தெரிந்து, பிறக்கும்-பிறப்பதற்கு விரும்புகின்ற, ஆரூரும்-திருவாரூரும், துயர்ந்திடாது-(மீண்டும் பிறவித்) துன்ப மெய்தாதபடி, அடைந்து காண் மன்றும்-சென்று தரிசனம் செய்யவிரும்பும் தில்லையம்பலமும், உவப்புடன் நிலைத்து-மகிழ்ச்சியுடன் தங்கியிருந்து, மரிக்கும் - (பிறவியறுதற்காக) இறக்க விரும்பும், ஓர் பதியும் - (உவமை சொல்லுதற்கரிய) காசி நகர

மும், நினைக்கும் நின் நகரை-நினைத்தவளவில் முத்தி பாலிக்கவல்ல தேவரீர் திருநகரமாகிய திருவண்ணுமலையை, ஒக்குமோ-நிகராகுமோ (ஆகாது) எ-று.

(வி-ரை.) இச் செய்யுளில் முத்தி யடைதற்குரிய வழிகள் நான்கு கூறப்பட்டுள்ளன. அவை திருவாரூரில் பிறத்தலும், சிதம்பரத்தில் நடராஜப் பெருமானைப் போய் அன்புடன் தரிசித்தலும், காசிப்பதியில் இறத்தலும், திருவண்ணுமலையை மனதில் நினைத்தலுமாம். இவற்றுள், திருவாரூரில் பிறத்தல்தானே நேர்படினன்றி நமது முயற்சியா லாவதன்று. சிதம்பரத்தைத் தரிசித்தல் எளிதாயினும் இருக்கும் இடத்தைவிட்டுச் சென்று மனச்செம்மையுடன் காணுதல் வேண்டும். காசிப்பதியில் இறத்தல் வேண்டின் பிறர் பொருளை விரும்பாது, அறவழியா லீட்டிய பொருள்கொண்டு, இடைவழியிற் குளிர், நோய்முதலிய துன்பங்கள் வாராமற் சரீரத்தைப் பாதுகாத்து அந்நகரடைந்து நல்லொழுக்கத்தின் வழுவாது வாழ்ந்து காலம் கழிக்கவேண்டும். ஆகலின் அதுவும் எளிதின் முடிவதொன்றன்று. இருந்தவிடத்தி லிருந்தவாறே எண்ணுதல் யாவர்க்கும் எளிதாகலின் அவ்வா றெண்ணியவர்க்கு முத்திதர வல்ல திருவண்ணுமலையே சிறப்புடைமையின் "ஒக்குமோ நினைக்கு நின் நகரை" என்முர். திருவாரூர் முதலிய க்ஷேத்திரங்களில் பிறத்தல் முதலியவற்ருல் முத்தி யென்பதனை,

**வேதாரணிய புராணம்**

"காசியி லிறக்க முத்தி கமலையில் பிறக்க முத்தி
தேசுறு சிதம்ப ரத்தைத் தரிசிக்க முத்தி யாகும்
மாசிலா மேன்மை பூண்ட மறைசையம் பதியோ கூறில்
ஆசறு தீர்த்தந் தன்னி லாடவே யளிக்கு முத்தி" எனவும்,

**திருவருணைக் கலிவெண்பா**

"தேயுலிங்க சோணகிரிச் சிற்பரனே காய
மிறக்கமுத்தி நல்குதிரு வாரூர்—அறத்தாற்
றனைப்பார்க்க முத்திதரு தில்லை யிவைக்கு
னினைக்கமுத்தி நல்கருணை நின்முய் அனைத்தாறுய்"

என்பதனு லுணர்க. ஜெனன மரணம் ஆன்மாக்களை விடாமல் தொடர்ந்து கொண்டே வருவதனாலும், ஜெனன மரணதுன்பத்தை அனுபவிப்பது தேகமே யாதலானும், தேகசம்பந்தத்தால் பந்தபாச முண்டாவதாகலானும், உடலொழிந்து முத்தியடைதல் முக்கிய மாத லானும் 'துவக்கு அற' என்றார். பிறத்தலினாலேயே முத்தி கொடுப் பது திருவாரூராகலின், தேகம் ஒழிதற்பொருட்டு அத்திருவாரூரில் பிறக்க விரும்புவார்களாகலின் 'பிறக்கு மாரூரும்' என்றார். தரிசிப் பதனாலே முத்தி கொடுப்பது திருச்சிற்றம்பலம் (கனகசபை) ஆகலின், சரீரம் நீங்கும்பொருட்டு அத்திருச்சிற்றம்பலத்தை தரிசிக்க விரும்பு வார்களாகலின் 'அடைந்துகாண் மன்றும்' என்றார். இறப்பதினாலே முத்திகொடுப்பது காசிக்ஷேத்திர மாகலின், சரீரம் நீங்கும் பொருட்டு அக்காசிப்பதியில் மகிழ்வுடன் வசித்து இறக்க விரும்புவார்களாகலின் 'உவப்புட னிலைத்து மரிக்கு மோர் பதியும்' என்றார். நினைத்தல் மாத்திரையானே முத்திகொடுப்பது திருவண்ணாமலை யாகலின் அத் திருவண்ணாமலைக்கு, பிறத்தலினாலேயே முத்திகொடுக்கும் திருவா ரூரும், தரிசிப்பதனாலேயே முத்திகொடுக்கும் திருச்சிற்றம்பலமும், இறத்தலினாலேயே முத்திகொடுக்கும் காசிக்ஷேத்திரமும் நிகராகாது. ஆகையால், 'ஒக்குமோ நினைக்கு நின்னகரை' என்றார். ஆகவே பிறத்தல், தரிசித்தல், இறத்தல் என்னும் மூவகைக் கஷ்டமுமில்லா மல் இருந்த இடத்தில் இருந்துகொண்டே ஒருதடவை சிந்தித்த மாத் திரையின் அநாயாசமாக முத்தியைப் பாலிப்பது இத் திருவண்ணாமலை க்ஷேத்திரம் என்க. திருவாரூர் என்பது சோழவம்சத் தரசர்கள் பழமையாய் அரசு செய்தற்குரிய இடமென்பது மநுநீதிகண்ட சோழ சரிதத்தாலும் ஏனைய சரிதத்தாலுங் காண்க. இதனை,

**திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்**

"ஒருவனு யுலகேத்த நின்றநாளோ ஒருருவே மூவுருவமான நாளோ
திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே"

என்பதனு லறிக. மேலும் இந்த க்ஷேத்திரம் இலக்குமிதேவி பூசித்த க்ஷேத்திரம் அதன் வரலாறு:—

திருமால் திருப்பாற்கடலின்கண் அனந்தசயனத்தில் நெடுங்காலந் தனதுளத்தில் சிவபெருமானையும், சுப்பிரமணியக்கடவுளையும், உமா

தேவியாரையும் தியானித்து மூவுலகங்களையும் வெல்லும்படியான மிகுந்த அழகினையும் புஷ்பபாணங்களையும் உடைய ஒரு புதல்வனைக் கருதித் தவஞ் செய்தனர். அத்திருமாலின் தவம் காரணமாக சிவ பெருமான் வெளிப்பட்டுத் தன்னை வணங்கிநின்ற திருமாலுக்கு அவர் கேட்டவரத்தைக் கொடுத்தனர். அருகிருந்த தேவியார் தம்மை வணங்காத காரணத்தால் கோபித்து அப்புதல்வன் இப்பெருமானது நெற்றிவிழியாற் சாம்பராகுக என சபித்தனர். அஃதுணர்ந்த இலக் குமி மனோவியாகூலமடைந்துச் சிவபெருமானையும் பிராட்டியாரையும் வணங்கி அப்புத்திர னிறந்தாலுந் திரும்ப உயிர் வாழ்வானுயிருக்கும் படி வரம்பாலிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டு அவன் சாம்ப ராயினபின்பு திருவாரூரையடைந்து அங்கு புற்றிடங்கொண்ட பெரு மானைப் பூசித்தாள் என்பது சரிதம். இலக்குமி (கமலை) பூசித்தமை யால் அந்த க்ஷேத்திரத்திற்குக் கமலை என்று ஒரு அருமைத்திருநாம முள்ளது. இதனை,

பெரியபுராணம் திருவாரூர் சிறப்பு

"சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது
மன்னு மாமல ராள்வழி பட்டது"

எனக் கூறியவாற்று னறிக. இந்த திவ்ய க்ஷேத்திரத்தின் வைபவங் களைத் **திருவாரூர்ப் புராணத்திலும் திருவாரூர்த் தியாகராஜலீலை** யிலும், **திருவாரூர் நான்மணிமாலையிலும், திருவாரூருலாவிலும்** காண்க. மன்று - சபை. சிவபெருமானுக்கு உரியதான ஐந்து சபைகளில் இங்கே குறித்த மன்று திருத்தில்லையாகிய கனகசபை யென்றறிக. ஐந்து சபை விவரம்:—திருவாலங்காடு-இரத்தின சபை, திருத்தில்லை-கனக சபை, திருவாலவாய்-வெள்ளி சபை, (மதுரை) திருநெல்வேலி-தாமிர சபை, திருக்குற்றாலம்-சித்திர சபை, இவைகள் நடராஜப் பெருமானது பஞ்சசபைகளாகும். இதனை,

இரட்டைப் புலவர்

"குடதிசை யதனின் மருவுகுற் றாலங்
கோதறு சித்திர சபையாங்

குற்றமில் குணக்கில் பழயனூர் மன்றங்
குலநவ ரத்னமன் றென்ப
ரடல்விடைப் பாக னெல்லையம் பதியி
லம்பலந் தாமிர சபையாம்
ஆலவாய் மதுரை வெள்ளியம் பலமே
யணிதில்லைச் செம்பொனம் பலமே"

எனக் கூறுமாற்றா னுணர்க. மன்று என்பது அம் சாரியை பெற்று, மன்றம் எனவும் வரும்; குன்றம் என்பதுபோல. கனகசபை தரிசன மாத்திரையான் முத்திகொடுக்கும் க்ஷேத்திரம். இந்த க்ஷேத்திரம் ஆதியில் தில்லைமரம் அடர்ந்த காடாக இருந்தமையால் இதற்குத் **தில்லைவனம்** என்று பெயர் வழங்கிவந்தார்கள். இப்போதும் **திருத் தில்லை** என்ற நாமம் பெற்று விளங்குகின்றது. இந்த க்ஷேத்திர வைபவங்களைச் **சிதம்பர புராணம், தில்லைப் புராணம், கோயிற் புராணம், புலியூர் புராணம்** முதலியவைகளில் பரக்கக் காணலாம். சரீரம் ஒழிதற்பொருட்டு மகிழ்வுடன் வசித்து இறத்தற்குரிய தொரு பதி என்றது காசிக்ஷேத்திரத்தைக் குறித்ததென்றறிக. தன்னிடத்தில் மரித்தவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பது காசிக்ஷேத்திரம் என்பதனை,

**திருவிளையாடற் புராணம்**

"புதிய தாமரை மேவிய பழமறைப் புத்தேள்
விதியி னூற்கடு நடைப்பரி மகஞ்செய்வான் வேண்டி
**கதியை மாய்த்தவர்க் குதவுதன் னுறைகெழு காசிப்
பதி**யின் மைந்தரோ டெய்தினன் பண்டொரு வைகல்" எனவும்,

**காசிகாண்டம்**

"எறிநீர்க் கங்கை சூழ்கிடந்த வின்ன நகரி னெஞ்ஞான்றும்
பறவை யினமும் விலங்குகளு மிறக்குங் காலைப் படர்சடையெம்
மிறைவன் புகல்தா ரகப்பிரம வுபதே சத்தா லீறில்கதி
பெறுப வென்னி லீங்குறைவோர் பெறுபே றியாமோ பேசுவதே"

எனவும்,

"தூயசெழுங் கங்கையலை சுழித்தெறியும் புனலிலொரு
துளியுண் டோருந்
தாய்முலைப்பான் மீட்டருந்தாத் தன்மையா லாங்குடலந்
தனைவிட் டோர்க்கு
வேயனைய தோளிபங்கன் றாரகத்தை வலச்செவியில்
விளம்ப றன்றோ
சேயுயர்விண் ணவருலகோ காசிநகர்க் கிணையாகச்
செப்பு மாறே"

எனவும் வருவனவற்றா னறிக. இக் காசிக்ஷேத்திரத்திற்கு வாரணாசி என்ற ஒரு திருநாமமும் உண்டு. வாரணாசி=வரணை + அசி என்னும் இவ்விரண்டு நதிகளுங் கலக்குந்தானம் என்பது பொருள். இதனை,

**காசிகாண்டம்**

"ஆதலாற் றீமை யோர்கட் கடையொணு வசியி னோடு
மேதகு வரணை யாறும் விழைதக வொழுகு மாற்றான்
மாதவக் கிழமை பூண்ட முனிவர வளங்கொள் காசிக்
கேதமி னுமம் வார ணசியென் றிசைந்த தாமால்"

என்பதனு னறிக. இச்சொல் வாரணாசி வாராணசி வாரணவாசி வாரணசி எனவும் வரும். காசிப்பதியினை நினைப்போரும், தரிசிப்போரும், அதன்கண் வசிப்போரும் சாலோக சாமீப சாரூப சாயுச்சிய பதவிகளைப் பெறுவார்கள். இதனை,

**காசி ரகசியம்**

"வார ணசி யுளநினைத்தோர் வளமார் சிவசா லோக்கியரே
வார ணசி வாய்மொழிவோர் வளமார் சிவசா மீப்பியரே
வார ணசி தரிசித்தோர் வளமார் சிவசா ரூப்பியரே
வார ணசி வசித்தமர்வோர் வளமார் சிவசா யுச்சியரே"

என வருமாற்றா னறிக. மேலும், இக்காசி க்ஷேத்திரம் முத்தி கொடுக்கும் க்ஷேத்திரங்களில் ஒன்று. முத்திகொடுக்கும் க்ஷேத்திரங்கள் ஏழு, அவையாவன:—அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பன. இதனை,

காசிகாண்டம்-சத்தபுரியின் சிறப்புரைத்த அத்தியாயம்

"காசிமா யாபுரி யவந்தி காஞ்சிமற்
றேசைகொ ளயோத்திவண் டுவரை யொப்பறு
மேசிலா மதுரையென் றிசைக்கு மேழ்பதி
மாசறு முத்தியை வழங்கு மென்பவே"

என்பதனு னறிக. காசி முத்திக்ஷேத்திரத்தி லொன்றென்பதற்கு அநேக சரிதைகள் காசி காண்டத்தில் உள்ளன. உதாரணமாக மாகனந்தன் என்னும் வேதியன் சரிதையைப் பார்க்க. அச்சரிதை காசிகாண்டத்தில் முத்தி மண்டபத்தின் கதையுரைத்த அத்தியாயத்தி லுள்ளது. இன்னும் அநேக சரிதைகள் உள அந்நூலைப் பார்த்துணர்க.

இந்த காசிக்ஷேத்திர வைபவங்களை காசிகாண்டம், காசிரகசியம் முதலிய நூலிற்காண்க. விரிக்கிற் பெருகும். கடலில் அகப்பட்டுக் கொண்டவர்கள் கரையைச் சேருவதென்றால் மிகவும் கஷ்டம். கரையைச் சேருவதற்கு மரக்கலம் வேண்டும். அதுபோல பிறவியாகிய கடலிலகப்பட்டுக் கொண்டவர்கள் முத்தியாகிய கரையில் அடைய விரும்புவார்களாகலின் 'பவக்கடல்கடந்து முத்தியங் கரையிற் படர் பவர்' என்றார். முத்தியாகிய கரையை யடைய விரும்புவோர்களுக்கு தவமாகிய மரக்கலம் அத்தியாவசிய மாகலானும், அத்தவக்கலமே முத்தியாகிய கரையைச் சேர்க்குமாகலின், 'தவக்கல நடத்த' என்றார்.

கடலில் மரக்கலம் ஓட்டுவோர்கள் தமக்கேற்படக்கூடிய கலக்க மானது நீங்கும்படி செலுத்துவதற்குக் கரையில் ஓர் அடையாளம் வைத்துக்கொண்டு செல்லுவதைப்போல இச் சோணசைலத்தை ஒரு குறியாக (அடையாளமாக) கொண்டு தவமாகிய மரக்கலம் நடத்துவார் களாகலின் 'திகைப்பற நோக்கித் தவக்கல நடத்த' என்றார்.

ஈண்டு திகைப்பு என்பது மாயை யென்னும் அந்தகாரம் என்க. பிறவிப் பெருங்கடலைக் கடந்து முத்தியாகிய கரையைச் சேரவிரும் பின், தவமாகிய கப்பலைக் கொண்டேயடைய முடியுமேயன்றி வேறு எந்த வழியானும் முத்தியங் கரையை யடையமுடியாதென்பதும் அத் தவமாகிய கலனை நடத்துவோர்க்கு இந்த திருவண்ணமலை தரிசனம்

இன்றியமையாது வேண்டற்பால தென்பதும் இச் செய்யுளாற் பெறப் பட்ட தணர்க.

துவக்கு-தோல்: ஈண்டு கருவியாகுபெயராய் உடம்பைக் குறித் தது: கருவியின்பெயர் காரியத்திற்கு ஆவது திருவாசகம் படித்தான், திருவாய்மொழி ஓதினன், திருக்குறள் முற்றிற்று முதலியனபோல என்க. காரணவாகு பெயரெனினும் கருவியாகுபெய ரெனினும் ஒக்கும். ஒக்குமோ என்பதில் ஓகாரம் எதிர்மறைப்பொருளில் வந்தது. அவனோ கொண்டான் என்புழி அவன் கொண்டிலன் என்னும் எதிர்மறைப்பொருள் ஓகாரம் தருதலைபோல என்க. படர் பவர்-வினையாலணையும் பெயர். திகைப்பு என்னுந் தொழிற் பெயர்ப் பகுபதம், திகை என்னும் பகுதியும், பு என்னுந் தொழிற்பெயர் விகுதி யும் பெற்று "இயல்பினும் விதியினும் நின்ற வுயிர்முன்" என்னும் சூத் திர விதியால் விகுதிப் பகர மிகுந்து முடிந்தது. கடல் கடந்து- இரண்டாம் வேற்றுமைத்தொகை நீத்தற்பொருளில் வந்தது. 2

நீங்கருந் துயர்செய் வளிமுதன் மூன்ற
    னிலையுளே னவைதூரந் திடுமுன்
வாங்கிநின் றனிவீட் டுறைகுவான் விரும்பி
    வந்தன னின்குறிப் பறியே
னுங்குறை மதியே தாங்கியென் றுலக
    மறைகுறை யறநிறை மதியுந்
தாங்கிய முடியோ டோங்கிய சோண
    சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) குறை ஆம் மதியே-கலைகள் நிரம்பாது குறையாகவுள்ள பிறைமதியையே, தாங்கி என்று-தாங்கினவ னென்று, உலகம் அறை- உலகத்தார் சொல்லுகின்ற, குறை அற-குறைபாடுநீங்க, நிறை மதி யும்-எல்லாக்கலைகளும் நிறைந்த முழுமதியையும், தாங்கிய முடியோடு- தரித்திருக்கின்ற சென்னியுடனே, ஓங்கிய - உயர்ந்து வளர்ந்திருக் கின்ற, சோண சைலனே-சோணசைல வடிவமானவரே!, கைலை நாய கனே-திருக்கைலாயமலைக்குத் தலைவரே!, நீங்கு அரும்-விட்டு விலக முடியாத, துயர் செய்-துன்பத்தைச் செய்கின்ற, வளிமுதல் மூன்றன்

நிலை-வாதம், பித்தம், சிலேஷ்மம் என்னும் மூன்றுக்கும் இருப்பிட மாகிய உடம்பில், உள்ளேன்-இருக்கும் அடியேன், அவை தூரந்திடு முன்-அம்மூன்றும் அடியேனை ஓட்டிவிடுமுன்னே, நின் தனி வீடு- தேவரீரது (முத்தி யெனப்படும்) தனி வீட்டை, வாங்கி-உரியதாகப் பெற்றுக்கொண்டு, உறைகுவான்-அதில் வாழும்படி, விரும்பி வந்த னன்-ஆசைகொண்டு வந்தேன், நின் குறிப்பு அறியேன்-தேவரீரது திருவுள்ளக்கருத்து இன்னதென் றறிகிலேன். எ-று.

(வி-ரை.) வாத பித்த சிலேத்துமம் என்னும் மூன்றுக்கும் இருப் பிடமாகிய உடம்பில் இருக்கும் அடியேனை அவ்வாத முதலியவைகள் ஓட்டிவிடுமுன்னே முத்தி யெனப்படும் தேவரீருடைய தனிவீட்டை உரியதாகப் பெற்றுக்கொண்டு அதில் வாழும்பொருட்டு விருப்பமுற்று அடைந்தேன் தேவரீர் திருவுள்ளம் எவ்வாறோ என்று அறிவித் தருளினார். வாதம் முதலிய மூன்றும் வெகுண்டவழி உயிர் உடம்பில் தங்குத லரிதாகலின், அவ்வாத முதலியவற்றால் தூரத்தப்படுவதற்கு முன், யாதொரு துன்பமுமில்லாத முத்தி யெனப்படும் தனிவீட்டை உரியதாகப் பெற்றுக்கொண்டு அதில் வாழ விரும்புகின்றா ராகலானும், அது அவனருளன்றிக் கூடாதாகலானும், "அவை தூரந்திடு முன் வாங்கிநின்றனி வீட்டுறைகுவான் விரும்பி வந்தனன் நின் குறிப்பறி யேன்" என்றார். உறைகுவான் என்பது எதிர்கால வினையெச்சப் பகுபதம்; உறை என்னும் பகுதியும், வான் என்னும் எதிர்கால வினை யெச்ச விகுதியும், அவைகளுக் கிடையே குச்சாரியை பெற்று முடிந் தது. வந்தனன் என்னும் இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்றுப் பகுபதம், வா என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக் கிடையே இறந்தகாலம் காட்டும் தகரவிடை நிலையும், இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையே அன் சாரியையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னும் சூத்திர விதியால் இடைநிலைத் தகர மிகுந்து, "வலித்தன் மெலித்தல்" என்னும் சூத்திர விதியால் மிகுந்த தகர வல்லொற்று மெல்லொற்றாக விகாரப்பட்டு, அச்சூத்திரத்து "குறுக்கல்" என்னும் விதியால் பகுதி முதல் குறுகி, "உடன்மேலுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத்தகர மெய்யின்மேற் சாரியை அகரவுயிரேறி, இன்னும்

அச்சூத்திர விதியாற் சாரியை யீற்று னகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி முடிந்தது.

நின்குறிப்பு-ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். 'நின் னீரியல்பா முறவே' என்றதனு லியல்பாயிற்று. அறியேன் - எதிர் மறைத் தெரிநிலை வினைமுற்றுப் பகுபதம். அறி என்னும் பகுதி யும், ஏன் என்னும் விகுதியும், அவைகளுக்கு இடையே எதிர்மறை ஆகார விடைநிலையும் பெற்று, அவ்விடைநிலை கெட்டு "இ ஈ ஐ வழி" என்னும் சூத்திரவிதியால் யகரவுடம்படு மெய்தோன்றி, "உடன்மே லுயிர் வந்து" என்னும் சூத்திரவிதியால் அம்மெய்யின்மேல் விகுதி ஏகாரவுயிரேறி முடிந்தது. உலகம்-இடவாகுபெயர். "உலகமென்ப துயர்ந்தோர் மாட்டு" என்பது சூத்திரம். அறைகுறை-வினைத்தொகை.

சிவபெருமான் குறைமதி சூடின வரலாறு:—பிரமதேவனது மாநதபுத்திரர் (ஸப்தருஷிகள் நாரதன் கர்த்தமன் தக்ஷன்) பதின் மரிலொருவனுகிய தக்ஷப்பிரசாபதி பெற்ற அச்சுவினி முதலிய நட்சத் திரங்களாகிய இருபத்தேழு பெண்களையும் அத்திரிமுனிவர் மனைவி யாகிய அநசூயை பெற்ற சந்திரன் அழகிற் சிறந்தவனுயிருத்தல் கருதி மணம்புணர்த்தி அவனை நோக்கி, "இந்த இருபத்தேழு பெண்களிடத்திலும் ஒரே மாதிரி யன்பாயிருக்கவேண்டும்; அதை விடுத்து ஒருத்தியுடன் பிரீதியாயிருப்பதும் மற்றொருத்தியினிடம் பிரீதியில்லாமலும் நடந்து கொள்ளப்படாது என்று திட்டமாகச் சொல்லவும் சந்திரன் அப்போது தக்கன் வார்த்தைக்குச் சம்மதித்துச் சிறிதுகாலம் அவர்களிடம் பாரபக்ஷமின்றி நடந்துகொண்டு அதன் பிறகு அவர்களில் அதிரூபமுள்ள கிருத்திகை உரோகிணிப் பெண்க ளிடத்தில் மிகுந்த அன்பு செலுத்தி மற்றவர்களிடம் பிரியமில்லாம லிருக்கவும் அந்த இருபத்தைந்து பெண்களும் தந்தையாகிய தக்ஷப் பிரசாபதியிடம் முறையிட்டனர். அதன்மேல் தக்கன் சந்திரனுக்குப் பலவாறு புத்திகூறி எல்லோரிடமும் பாரபக்ஷமில்லாமலிருக்கும்படி யாகச் சொல்லியும் சந்திரன் தக்கன் சொல்லைப்போல நடக்காமையால் தக்கன் சந்திரனைப் பார்த்து, "உன் கலைகள் நாளொரு கலையாய் குறைக" எனச் சாபம் கொடுத்தான். அச் சாபத்தினுல் சந்திரன்

தனது சோடசகலைகளுள் பதினைந்தினை யிழந்து ஒருகலையும் இழப்பதன் முன் பிரமதேவன்பா லோடி முறையிட்டனன். பிரமன், "சந்திரா! தக்கன் என் குமாரனுயிருந்தாலும் கூட என் சொல்லைக் கேளான்; யானும் மகனென்று அவனிடத்தில் போகமாட்டேன்; ஆதலின், பெருங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமானிடத்தில் சென்று முறையிடுவையேல் உன் சாபம் நீங்கும்" என்று சொல்ல வெள்ளிமலையை யடைந்து திருநந்திதேவரிடம் விடைபெற்றுக் கொண்டு திருச்சந்நிதானத்தினுட் சென்று பெருமானிடம் விண்ணப்பம் செய்து பணிய, பெருமான் மனமுருகி எஞ்சிய ஒரு கலையைச் சடையிற்றரித்து உனது கலைகளிலொன்று என்முடிமீ திருத்தலினுல் நாளுக்கொரு கலையாக வளர்ந்தும், தக்கன் சாபத்தால் நாளுக்கொரு கலையாகக் குறைந்தும் இருக்க ஒரு கலையென்று மகலாது" என அனுக்கிரகித்தனர். இதனை,

**கந்தபுராணம்**

"தீர்ந்தன வன்றியே திங்க டன்னிடை
யார்ந்திடு கலையினை யங்கையிற் கொளா
வார்ந்திடு சடைமிசை வயங்கச் சேர்த்தினுன்
சார்ந்தில தவ்வழித் தக்கன் சாபமே."

"எந்தை யவ்வழி மதியினை நோக்கிநீ யாதுஞ்
சிந்தை செய்திடே லெம்முடிச் சேர்த்திய சிறப்பா
லந்த மில்லையிக் கலையிவ ணிருந்திடு மதனுல்
வந்து தோன்றுநின் கலையெலா நாடொறு மரபால்."

"நின்ன தொல்கலை யைந்துமுப் பகலிடை நிரம்பிப்
பின்ன ரவ்வழி தேய்ந்துவந் தோர்கலை பிரியா
தின்ன பான்மையே நிகழுமெக் காலமு மென்றுன்
முன்னை யாவிதோ நிருந்தெலா மியற்றிய முதல்வன்."

என்பதனுனுமுணர்க. தக்ஷயாகத்திற் சென்றிருந்த சந்திரன் வீர பத்திர மூர்த்தியால் சிவாபராதியாய் மதிக்கப்பட்டு நிலமிசை வீழ்த்தித் திருவடியால் தரையோடு தேய்க்கப்பட்டவனுயினும் தக்ஷ சாபத்தால் நிலைமாறி அபயமென வந்தடைந்தபோது இறைவர்

கருணைமூர்த்தியை அனுக்கிரகஞ் செய்தமைபோல, அடியார்கள் அறியாமையாற் செய்த குற்றத்தையு மன்னித்தருள்வாரென்னுங் கருத்துத் தோன்ற "ஆங்குறை மதியேதாங்கி" என்றார். (3)

**கனிமலை துவர்வாய்க் கோதையர்க் குருகுங்**
**கன்மனக் கொடிய னுக் கென்னீ**
**துனிமலை பிறவி தவிர்த்தனை யெனநிற்**
**சுளிபவ ரிலையெனக் கிரங்காய்**
**பனிமலை கதிர்வந் துறநிலை யாடி**
**பயின்றபீ டிகையென வுதயத்**
**தனிமலை யிருப்ப வளர்ந்தெழுஞ் சோண**
**சைலனே கைலைநா யகனே.**

**(ப-ரை.)** தனி உதய வரை-(கீழ்த்திசையிலுள்ள) ஒப்பற்ற உதய கிரியானது, பனிமலை கதிர்வந்து உற-(தன்னிடத்திற்) பனியைக் கெடுக்கின்ற சூரியன் வந்து தோன்றுதலால், நிலை ஆடி பயின்ற-நிலைக்கண்ணாடியைப் பதித்து வைத்திருக்கின்ற, பீடிகை என இருப்ப-பீடம் போலத் தோன்ற, வளர்ந்தெழும்-தலைமைபெற்று உயர்ந்து வளர்ந்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே—, கனிமலை-கொவ்வைக் கனியுடன் மாறுபடுகின்ற, துவர்வாய்-பவளம் போன்ற வாயையுடைய, கோதையர்க்கு-மகளிர்பொருட்டு, உருகும்-வருந்திநிற்கும், கல்மனம்-கல்லைப்போன்ற மனத்தையுடைய, கொடியனுக்கு-கொடியவனுக்கு, நீ-தேவரீர், துனிமலை பிறவி-துன்பத்தை மிகுதியாகவுடைய பிறவியை, தவிர்த்தனை-நீக்கினாய், என் என-இதற்குக் காரணம் யாது என்று, நின் சுளிபவர் இல்லை-தேவரீரைக் கோபிப்பவர் ஒருவருமிலர், எனக்கு இரங்காய்-(ஆதலின்) தேவரீர் அடியேனுக்கு அருள்புரிவீராக. எ-று.

**(வி-ரை.)** கொவ்வைக்கனியையும் கீழ்ப்படுத்தும் பவளம்போன்ற வாயையுடைய மங்கையர் பொருட்டு உருகுவேன் என்பார் "கனிமலை துவர்வாய், கோதையர்க்குருகும்" என்றார். சிவபெருமானிடத்தில் உருகுதலில்லாத கல்போன்ற மனதையுடையவனென்பார், 'கன்மனக் கொடியன்" என்றார். "தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு

மதியுண்டாமோ'' எனக் கூறியபடி காமத்தால் அறிவு மயங்கிக் கடவுளை மறந்துநிற்கும் மூடர்களுக்கு இறைவனருள் கூடுதல் இயலாதென்றாலும், அவ்விறைவன் அருள்புரிவானாயின் அவன்மேல் கோபித்துக்கொள்பவ ரொருவருமில்லையென்பார், 'என்னை நனிமலை பிறவி தவிர்த்தனையென நிற்சுளிபவரில்லை' என்றார். மாதர்களுக்கு உருகும் தன் மனம் சிவபெருமானிடத்தில் உருகாதிருக்கின்றதினால் 'கன்மனக் கொடியன்' என தன்னை இழித்துக் கூறினார். கன்மனக் கொடியனென்பதனை,—

**தாயுமானவர்**

''கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்கன்
னெஞ்ச முருக விலையே''

என்று கூறியவாற்றானுணர்க. சிவபெருமான்பால் கன்மனக்கொடியனாக இருந்தாலும் அப்பெருமான் மனமிரங்கி பிறவியை ஒழித்து முத்தியைப் பாலிப்பாராயின், ''நீர் இவ்வாறு செய்தல் தக்கதோ'' என அப்பெருமானைக் கேட்பாரும் அப்பெருமான்மேல் கோபிப்பாரும் ஒருவருமில்லாமையால் அடியேனுக்கு அருள்புரிவீராக என்பார், 'சுளிபவரில்லை யெனக்கிரங்காய்' என்றார். மாதர் வாயிற்கு செவ்வல்லி மலரும், வீழிக்கனியும் கோவைக்கனியும் தாமரைமலரும், பவளமும், செவ்வந்தி மலரும், முருக்கம்பூவும், இலவம்பூவின் மெல்லிய இதழும், குல்லையும், கொடியிற் பழுத்த தூதுளம்பழமும், இந்திரகோபமும் உவமைப் பொருள்களாம். இதனை,

**உவமானசங்கிரகம்**

''ஏய்கிடை கோபந் துப்பிலவு முருக்கிதழாம்
வாய்குமுதம் வீழிதொண்டை வாரிசமாம்''

என்பதனாலறிக. கதிரவன் நிலைக்கண்ணாடிக்கும், உதயகிரி நிலைக்கண்ணாடி வைத்த பீடத்திற்கும் உவமையாயின. வாய்க்குப் பவளமும் கோவைக்கனியும் மற்றும் பல உவமைப் பொருள்களிருப்பினும் கோவைக்கனியினுஞ் சிறப்புடைமை தோன்ற 'கனிமலை துவர்வாய்' என்றார்.

சூரியன் பனியைக் கெடுப்பவனாகலின் 'பனிமலை துவர்வாய்' என்றார். ஈண்டு மலைதல்-கெடுத்தல். பெருமான் தனது அழகைப் பார்த்து சந்தோஷிக்கும்படி பெருமான் எதிரில் நிலைக்கண்ணாடி வைப்பது இயல்பாதலினாலே, 'நிலையாடி பயின்ற பீடிகையென உதயத் தனிமலை யிருப்ப' என்றார்.

உதயகிரி என்பது சூரியன் காலையில் உதயமாகும் மலை. அஸ்தகிரி என்பது சூரியன் மாலையில் அஸ்தமிக்கும் மலை. உதயகிரி கிழக்கி லுள்ளது; அஸ்தகிரி மேற்கிலுள்ளது. நிற்சுளிபவர் - இரண்டாம் வேற்றுமைத் தொகை 'நின்னீரியல்பாம்' என்ற சூத்திரப்படி இயல் பாக வேண்டியது அவ்வாறு இயல்பாகாது விகாரமாயது. இது இயல்பின் விகாரம் எனப்படும். 'வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப' என்பதுபோல. (4)

சுடரிலை நெடுவேற் கருங்கணார்க் குருகித்
துயர்ந்துநின் றலமரு மனநின்
னடநவில் சரண பங்கய நினைந்து
நைந்துநைந் துருகுநா ளுளதோ
மடலவிழ் மரைமாட் டெகினென வருகு
மதியுறக் கார்த்திகை விளக்குத்
தடமுடி யிலங்க வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** மடல் அவிழ்-இதழ்கள் விரிந்திருக்கின்ற, மரை மாட்டு-தாமரைப் பூவினிடத்தில், எகின் என-அன்னப்புள் தங்கி யிருத்தல்போல, அருகுமதியுற-தனது அருகில் சந்திரன் தோன்ற, கார்த்திகை விளக்கு-கார்த்திகைதீபமானது, தடம் முடி-விசால மாகிய திருமுடியில், இலங்க-விளங்கிக் கொண்டிருக்க, வளர்ந் தெழும்-உயர்ந்து வளர்ந்திருக்கின்ற சோணசைலனே! கைலை நாயகனே!—, சுடர் இலை நெடுவேல்-ஒளிபொருந்திய இலைவடிவ மான நீண்ட வேலைப்போன்ற, கருங்கண்ணார்க்கு - கருமையாகிய கண்களையுடைய மகளிர்களால், உருகித் துயர்ந்து நின்று, (காமவிகாரத்தால்) உருகித் துன்பமடைந்து நின்று, அலமரும் மனம்-

சுழலுகின்ற மனமானது, நின் நடம் நவில்-தேவரீருடைய பஞ்சகிருத்தியக் கூத்தாடுகின்ற, சரணபங்கயம்-திருவடித்தாமரைகளை, நினைந்து-எண்ணி, நைந்து நைந்து-மிகக் கசிந்து, உருகும் நாள்-உருகும்படியான நாளும், உளதோ-அடியேனுக்கு உளதோ? (உண்டாகும்படி அருள் பாலிப்பீராக); எ-று.

(வி-ரை.) மாதரார் கண்ணுக்கு கருவண்டும், தாமரைமலரின் இதழும், கருங்குவளை மலரின் இதழும், இயமனது அஸ்திரமும் காக்கணம் பூவும், மாம்பிஞ்சும், வேலாயுதமும், சமுத்திரமும் விஷமும், அமிர்தமும், வாளாயுதமும், சேல்மீனும், பெண்மானும், குடங்கையும், செவ்வல்லிப்பூவும் முதலியன உவமைப் பொருள்களாம். இதனை,

**உவமானசங்கிரகம்**

"மேவிற் புருவம் விழிக்குவண்டுந் தாமரையுங்
காவியுங்கூற் றம்புங் கருவிளையு-மாவடுவும்
வேலுங் கடலும் விடமுமமு தும்வாளுஞ்
சேலும் பிணியுமிணை செப்பு."

**இரத்தினச்சுருக்கம்**

"வேல்வாள் கணைவண்டு வேலை விடமமுதஞ்
சேல்பங் கயங்குடங்கை செங்காவி-காலன்
வடுமான் கருவிளையை வண்டு சகோரத்தை
யடுமாங் குழையை யடர்ந்து."

என்பனவற்றால் கண்ணிற்கு உவமைப் பொருள்களாகக் கூறிய வற்றுள் ஒன்றான வேலாயுதத்தை மாதரார் கண்ணுக்கு உவமைப் படுத்திக் கூறினார். பகைவர்களை வாட்டுகின்ற வேலாயுதத்தைப் போல மாதரார்கண்கள் ஆடவர்களின் உயிரைக் கவர்ந்து அவர்களை வருத்து மியல்புடைமையால் 'சுடரிலை நெடுவேற் கருங்கணார்' என்றார்.

"நித்தம் பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சே
கறந்திடத்தை நாடுதே கண்"

எனப் பட்டினத்தடிகள் கூறியபடி மாதரார் மயக்கத்திலே யாழ்ந்து விரும்பிய மாதரார்கள் கிடைக்கப் பெறவில்லையே யென்றும், அம் மாதர்கள் கிடைப்பதற்குப் பணம் இல்லையேயென்றும், அப்பணத்தை எவ்வாறு சம்பாதிக்கலாம் என்றும், பலவாறு பணம் சம்பாதிக்க முயன்றும் ஒன்றும் பலனில்லாமல் போவதாலும் மாதரார் மையல் முன்னிட்டு மனம் பலவாறு சஞ்சலத்தை யடைந்து சுழலாநிற்குமாக லின், 'கருங்கணார்க் குருகித் துயர்ந்துநின் றலமரு மனம்' என்றார்.

> "வரிக்கோல வேல்விழி யாரனு ராக மயக்கிற் சென்று
> சரிக்கோது வே னெழுத்தஞ்சும் சொல்லேன்"

என்ற திருவெண்காடர் அமுத வாக்கின்படி செவ்வரிகளை யுடைய அழகிய வேலாயுதம் போன்ற கண்களையுடைய பெண்களி னுடைய காமமயக்கத்தில் போய் அவருடன் நட்புகொண்டுலாவுதற்கு காமநூல்களை யோதிக்கொண்டு வாணாளை வீணாளாக்குவர். அதுபோல யானும் என்மனதை மாதரார் மயக்கிலே போக்கினே னல்லாமல் பஞ்சகிருத்தியக் கூத்தாடுகின்ற செந்தாமரை மலர்போன்ற திருவடி களை நினைந்து மிகக்குழைந்து உருகின்ற காலமும் உளதோ வென்பார், 'நின்னடவில் சரண பங்கய நினைந்து நைந்து நைந்துருகு நாளுளதோ' என்றார். ஆகையால், மாதரார் மயக்கத்தை நீக்கி திருவடி பத்தியுண்டாக்கவேண்டும் என்பது கருத்து.

சோணசைலப்பெருமான் விசாலித்த திருமுடி சந்திரமண்டலம் வரை அளாவியிருக்கின்றது எம்மாதிரி யிருக்கின்றதென்றால் செந்தா மரைமலரினருகே அன்னந்தங்கி நின்றாற்போலிருக்கின்றது என உருவகிப்பார், 'மடலவிழ் மரைமாட்டெகினென வருகுமதியுறக் கார்த் திகை விளக்குத் தடமுடியிலங்க வளர்ந்தெழும் சோணசைலன்' என்றார். அலமரும் என்பது பெயரெச்சம். அலமா-பகுதி, உம்- பெயரெச்சவிகுதி, ருகரத்தோற்றமும் பகுதியீறு ஆகாரம் கெடுதலும் விகாரம். சிவபெருமான் திருவடிகள் பஞ்சகிருத்தியத் திருநட னத்தை யெக்காலத்தும் இயற்றுகின்றனவாகலின், 'நின்னடனவில் சரண பங்கயம்' என்றார். இதனை,

உண்மைவிளக்கம்.

“தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்-ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.”

“ஆடும் படிகேணல் லம்பலத்தி லையனே
நாடுந் திருவடியி லேநகாம்-கூடு
மகா முதரம் வளர்த்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.”

என்பதனுனறிக. இதன் விரிவை சீவபராக்கிரமம் ஸ்தாநந்ருத்த மூர்த்தியிற் காண்க. மரை-தாமரை: இவ்வாறு வருவது முதற்குறை எனப்படும். “ஒருமொழி மூவழிக்குறைதலு மனைத்தே” [நன்: உயிரீற்றுப்புணரியல். சூ. 6.] “மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி” என்பதுபோல. ஆன்மாக்கள் மலத்தொடக்கொழிந்து முத்தியடைதற் பொருட்டே எம்பெருமாட்டி ஆனந்தத்திருநடனம் காணுதல். இதனை

உண்மைவிளக்கம்.

“உரையுணர்வுக் கெட்டா வொருவன்மிகு பஞ்சாக்
கரத்தால் வரைமகடான் பாதி—பரையிடமாக்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு”

என்பதனுனுணர்க. ஆன்மாக்கள் நிமித்தம் தமருகந்தாங்குந் திருக்கரத்தால் சிருட்டியும், அபயாஸ்தத்தால் திதியும், அக்கினியேந்துந் திருக்கரத்தால் சங்காரமும், ஊன்றிய திருப்பாதத்தால் திரோபவமும், தூக்கிய திருவடியால் அனுக்கிரகமும் ஆக பஞ்சகிருத்தியத் திருத்தாண்டவம் புரிவர். இதனை,

உண்மைவிளக்கம்.

“சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகர மபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கி நகர மடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்”

தமரதருபரசுவாமிகள்

"பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பி னுனில வளாகமும்
ஏனைய புவனமு மெண்ணீங் குயிரும்
தானே வகுத்ததுன் றமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
யனைத்தையுங் காப்பதுன் னமைத்தகைத் தலமே
தோற்றுபு நின்றலத் தொல்லுல கடங்கலு
மாற்றுவ தாரழ லமைத்ததோர் கரமே
யீட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே
யடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பங்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே" என்பனவற்றானறிக.

மரைமாட்டு என்பதில் மாடு என்பது ஏழாம் வேற்றுமையுருபு' **நாலடியார்** "அகடுற, யார்மாட்டு நில்லாது செல்வம்" என்பதுபோல. மரை - முதலாகுபெயர்; அதாவது:—முதற் பொருளின் பெயர் அதன் சினைப்பொருளுக்காவது: தாமரை என்னும் கொடியின் பெயர் அதன் மலருக்கு ஆயிற்று. (ஆம்பல்வாய் முதலியனவும் இதற்கு உதாரணம்.) [சினை-உறுப்பு, அவயவம். முதல்-உறுப்பை யுடையது, அவயவி] முதலாகு பெயரெனினும் பொருளாகுபெய ரெனினும் ஒக்கும். மதி-சந்திரன்; யாவராலும் நன்கு மதிக்கப் படுவது என சந்திரனுக்குக் காரணப்பெயர். (5)

அருங்கவி வாத வூரனே முதலோ
ரன்பிலே மென்றது வேண்டி
யிரங்குதல் பொய்ம்மை யன்பிலே னையா
னியம்பிலே மெய்யெனக் கருளாய்
கருங்கட முமிழு மீர்ங்கவுட் பனைக்கைக்
கரியுரிக் கஞ்சுகங் கடுப்பத்
தரங்கமுண் டெழுகார் முகில்பயில் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) கருங்கடம் உமிழும்-கருமை நிறமாகிய மதநீரைப் பொழிகின்ற, ஈர்கவுள்-குளிர்ச்சியமைந்த கன்னத்தையும், பனைகை-பனைமரத்தைப் போன்ற கையையும் உடைய, கரி உரி கஞ்சுகம் கடுப்ப-யானைத்தோலாகிய அங்கியை (இம்மலை உருவத்தும் அமைந் திருத்தல்) போல, தரங்கம் உண்டு-அலைகள் நிரம்பிய கடல்நீரைக் குடித்து, எழுகார் முகில்-மேலே எழுகின்ற கருமையான மேகங்கள், பயில்-படிந்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, அருங் கவி-(சொற்சுவை பொருட்சுவை முதலிய எல்லாம் சுவைகளும் நிறைந்த) அரிய திருப்பாடல்களைப் பாடிய, வாதவூரனே முதலோர்-திருவாதவூரடிகள் முதலிய பெரியோர்கள், அன்பு இலேம் என்று-(தேவரீரிடத்தில் கரை கண்ட அன்புடையவரா யிருந்தும்) ஒரு சிறிதும் அன்பிலோம் என்று சொல்லி, அதுவேண்டி-அவ்வன்பைப் பெற விரும்பி, இரங்குதல் பொய்ம்மை-வருந்தி முறையிடுவது பொய் யாகும் (உண்மையன்று), அன்பு இலேன் என- அன்புடையவ னல் லேனென்று, யான் இயம்பலே மெய்-அடியேன் சொல்லி முறையிடு வதே உண்மை, எனக்கு அருளாய்-(ஆகலின்) அடியேனுக்கே அந்த அன்பினை யருள்வீராக; எ-று.

(வி-ரை.) திருவிளையாடற்புராணம்

"பழுதி லாதசொன் மணிவினைப் பத்திசெய் தன்பு
முழுது மாகிய வடத்தினான் முறைதொடுத் தலங்க
லழுது சாத்துமெய் யன்பருக் ககமகிழ்ந் தையர்
வழிவி லாதபேர் மாணிக்க வாசக னென்றார்" என்று கூறியபடி,

குற்றமற்ற சொல்லாகிய மணியினை பூரணவன்பாகிய கயிற்றினால் முறையாகக் கட்டப்பட்ட பாமாலையைஅழுகையுடன் சாத்துதலினாலே பரமாசாரிய மூர்த்தியாய் எழுந்தருளின சிவபெருமானால் மாணிக்க வாசகனெனத் திருநாமமிடப்பெற்றவராகலானும், சிவபதமளிக்கும் தகுதியுடைய திருப்பாடல்களாகிய திருவாசகத்தையும், திருக்கோவை யாரையும் தமது திருக்கரத்தினால் எழுதினாராகலானும் "அருங்கவி வாதவூரனே" என்றார். உயர்நிலையில் வாழ்வோர்கள் என்றும் தம்மை இழித்துக் கூறுதல் மரபாகலின், அம்முறையே வாதவூரடிகண் முத லோர்களும் தம்மை யிழித்துக் கூறினார்களே அன்றி உள்ளவாறன்று

என்பதை விளக்குவான் வேண்டி, 'வாதவூரனே முதலோர் இரங்குதல் பொய்ம்மை' என்றார். முதலோர் என்பதனால் ஏனைய திருஞான சம்பந்தர் முதலிய பெரியாரையும் குறிக்கும் என்க.

மேகங்கள் தவழும் சோணசைலமாகலின், 'கார் முகில்பயில் சோணசைலன்' என்றார். எனவே, சோணசைலம் மேகமண்டலம் வரையில் அளாவியிருத்தல் குறித்தாரென்க. அலைகளையுடைய கடல் நீரைப் பருகி எழுகின்ற கரிய மேகங்களாகலின் 'தரங்கமுண் டெழுகார் முகில்பயில்' என்றார். சோணசைலத்தின்மேல் மேகங்கள் சஞ்சரிப்பது யானையினது தோலாகிய சட்டையை அணிந்திருத்தல்போ லிருக்கின்றது என்று உவமை கூறினாரென்க. தரங்கம்-இருமடியாகு பெயர்: அலையின் பெயர் கடலுக்காய்க், கடலின் பெயர் நீருக் காதலால் இருமடியாகுபெயர். இவ்வாறே, புளி முளைத்தது என்புழிப், புளியென்பது, சுவைப்பெயர் பழத்திற்காய்ப், பழத்தின் பெயர் மரத்திற் காதலால் இருமடியாகுபெயர். மும்மடியாகுபெயர், நான்மடியாகுபெயர் வந்தவழிக் கண்டுகொள்க.

யானை மதஜலம் பொழிவதாலும், குளிர்ந்த கன்னங்களை யுடைமையாலும், பனைமரம்போலும் துதிக்கை யுடைமையாலும், 'கருங்கட முமிழு மீர்ங்கவுட் பனைக்கைக் கரி' என்றார். கரி-யானை; கரத்தையுடைமையால் 'கரி' என யானைக்குப்பெயர் வந்தது. ஆகலின், கரி யென்பது காரணப்பெயர். கடம்-மதஜலம். யானைக்கு மும் மதங்களுள்ளன. அவை: கன்னமதம், கபோலமதம், பீஜமதம் என்பன. ஒட்டக்கூத்தர் என்னும் புலவர் தான் ஒரு யானையாகவும் தான் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ் ஆகிய மும்மதம் பொழிவதாகவும் கூறியுள்ளார். அவ்வாறு கூறியுள்ளதை,

"மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் ததிர்த்த வரடா" என்பதாற் காண்க. (6)

புரத்து று மவுணக் குழாமும்வண் டிசைகூர்
பூங்கணை மதனுமுன் பெறுநின்
சிரித்தவெண் ணகையு நுதல்விழி நோக்குஞ்
சிறியனே னிருண்மலம் பெறுமோ

கருத்தினுங் கருத வரியநுண் ணியனென்
கடனற வுலகெலாங் காண்பான்
றரித்ததி தூல வடிவுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) கருத்தினும்-மனதினாலும், கருத அரிய-நினைக்க முடியாத, நுண்ணியன் என் கடன் அற-மிகவும் நுட்பமான உருவமுடையவன் எனக் கூறுகின்ற முறைமை நீங்க, உலகு எல்லாம் காண்பான்-உலகமுற்றும் எளிதாகக் காணும்படி, அதிதூல வடிவு-மிகப் பெரிய திருவுருவத்தை, தரித்து உறும்-தாங்கியிருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, புரத்து உறும்-திரிபுரத்தில் வசித்து வந்த, அவுணக் குழாமும்-அசுரர் கூட்டமும், வண்டு இசை கூர்-வண்டுகள் இசையை மிகுதியாகப் பாடுகின்ற, பூங்கணை மதனும்-மலரம்புகளையுடைய மன்மதனும், முன் பெறும்-(தேவரீரிடமிருந்து) முன்பு பெற்ற, நின் சிரித்த வெண்ணகையும்-தேவரீரது சிரித்த வெண்மையான நகைப்பையும், நுதல் விழி நோக்கும்-நெற்றிக் கண்ணினுடைய பார்வையையும், சிறியனேன்-மிகக் கடையேனான அடியேனது, இருள் மலம்-ஆணவமலம், பெறுமோ-பெறுமா? (பெற வேண்டுமென்பதே அடியேன் விருப்பம்); எ-று.

(வி-ரை.) வாக்கு மனங்கட்கு அப்பாற்பட்டு நிற்பதே முதல்வன் சிறப்பியல்பாகலின், 'கருத்தினுங் கருதவரிய நுண்ணியன்' என்றார். மனத்தினாலும் நினைக்க முடியாத அதிசூக்கும சரீரி எனக் கூறுகின்ற முறைமை நீங்க உலகமுற்றும் எளிதாகத் தரிசித்து உஜ்ஜீவிக்குமாறு கொண்ட திருவருள் வடிவமே சோணசைலமென்பார், 'கருத்தினுங் கருத வரியநுண் ணியனென் கடனற வுலகெலாங் காண்பான் தரித்ததி தூல வடிவுறும் சோணசைலனே' என்றார். உலகம்-இடவாகுபெயர். கருத்தினும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பு.

காண்பான் என்பதில் காண்-பகுதி. பான்-எதிர்கால வினையெச்ச விகுதி. காண்பான் என்பது எதிர்கால வினைமுற்றுப் பகுபதமாகவும் வரும். அப்போது, காண் என்னும் பகுதியும், ஆன் என்னும்

ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே எதிர்காலம் காட்டும் பகரவிடைநிலையும் பெற்று, "உடன்மேலுயிர் வந்து" என்னும் சூத்திரவிதியால் இடைநிலை மெய்யின்மேல் ஆகாரவுயிரேறி முடியும். திரிபுரங்களைச் சிரிப்பாலும் மன்மதனை நெற்றிக்கண்ணாலும் அழித்தது போல மிகக் கடையேனை அடியேனது ஆணவமலத்தையும் அழிக்க வேண்டுமென்பார் 'புரத்துறு மவுணக் குழாமும்வண் டிசைகூர் பூங்கணை மதனுமுன் பெறுநின் சிரித்தவெண் ணகையு நுதல்விழி நோக்குஞ் சிறியனே னிருண்மலம் பெறுமோ' என்றார்.

மலங்கள் மூன்றனுள் ஆணவமலம் (செம்பினிடத்துக் களிம்பு உடனாய் நிற்றல்போல்) காரணமின்றி ஆன்மாவுடன் அநாதியாகவே உடனாய் (அத்துவிதமாய்) நிற்றலால் **சகலமலம்** எனப்படும். ஆணவ மலத்தால் அறிவு தடைப்பட்டு நின்ற ஆன்மாவின் அறிவை விளக்கும் பொருட்டு இறைவர் மாயா மலத்தையும் கன்மமலத்தையும் கூட்டுதலால் இவ்விரண்டு மலங்களும் **ஆகந்துக மலங்கள்** எனப் படும். (ஆகந்துகம்-இடையில் கூடுவது) சகசமலம் எனப்படும் ஆணவமலத்தின் இலக்கணம்:—இது ஞானதிரோதகமாய் (அதாவது உயிரின் அறிவை மறைப்பதாய்), செம்புள்ளபோதே அதனோடு களிம்பாகிய குற்ற மிருப்பதுபோல் வேறு காரணமின்றி உயிருள்ள வன்றே அதனோடு உடனாய் நிற்கும் குற்றமாய், இருள் பல கண்களை மறைத்தும் தான் ஒன்றாயிருப்பதுபோல் எண்ணிறந்த உயிர்களோடு கூடி அவற்றின் அறிவு; இச்சை செயல்களை மறைத்துக் கொண் டிருந்தும் தான் ஒன்றாயிருப்பதாய், உயிர்களை விஞ்ஞானகலர், பிரள யாகலர், சகலர் என முத்திறப் படுத்துவதாய், உயிர்கள்தோறும் தனித்தனி வெவ்வேறாய் மறைந்துநின்று தத்தங் கால வெல்லையில் நீக்குவனவாகிய பல்வேறு சக்திகளை யுடையதாய், உயிர்கள் கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்றவத்தைகளை யடைதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய் வியாபகமாகிய உயிர் அணுத்தன்மையடையுமாறு செய்வதாயிருப்பதாம். வியாபகமாகிய உயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின் ஆணவம் எனவும், உயிருக்குப் பசுத்துவத்தைச் செய்தலால் பசுத்துவம் எனவும், உயிரின் அறிவை மறைத்தலால் பசுநீகாரம் எனவும், உயிரை

ஜீவிக்கவொட்டாது செய்தலால் மிருத்தியு எனவும், மயங்கிக் கிடக்கச் செய்தலால் மூர்ச்சை எனவும், அசுத்தமாக்கலால் மலம் எனவும் இருள்போல் நிற்றலால் அஞ்சனம் எனவும், அறியாமையைச் செய்தலால் அவித்தை யெனவும், உயிரை மறைத்தலால் ஆவிருதி எனவும் பல பேர்களைப் பெற்றது. இதனை,

### சிவஞானபோதம்.

"அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சககமலத் தணரா
தமைச்சரா சேய்ப்பதின் றஞ்சவத் தைத்தே."

### சிவஞான சித்தியார்.

"ஒன்றதா யநேக சக்தி யுடையதா யுடனு யாதி
யன்றதா யான்மா வின்ற னறிவொடு தொழிலை யார்த்து
நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்திச்செம் பினிற்க ளிம்பேய்ந்
தென்றுமஞ் ஞானங் காட்டு மாணவ மியைந்து நின்றே."

என்பனவற்றாலறிக. புரத்துற மவுணக்குழாம் சிரித்த வெண்ணகை பெற்ற வரலாறு:—தாரகாசுரன் தனயராகிய தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி யென்னும் அசுரர் மூவரும் விச்சுவகன்மன் நிருமித்துக் கொடுத்த பொன் வெள்ளி இரும்புகளாலாகிய மதில்களிலிருந்து சிவபத்தி யொழியாதவராய் அரசாண்டு கொண்டிருக்கும் காலத்தில், இந்திரன் முதலிய தேவர்கள் அவர்களிடம் தோல்வியடைந்து அத் திரிபுரர்கள் செய்யும் துன்பத்தைச் சகிக்கமுடியாது விஷ்ணு விடம் முறையிட, அவர் ஒரு யாகம் செய்து அதிற்றோன்றிய பூதங்களை அவர்களை யழிக்கும்படி கட்டளையிட்டனுப்ப, அவை அவர்களுடன் போர் செய்தொழிந்தன. அவர்கள் அசுரராயிருப் பினும் சிவபக்தி யுடையவராயிருத்தலின் அவர்களைச் செயித்தல் அருமையென்று கருதி, விஷ்ணு தனது அமிசமாகப் புத்தனைத் தோற்றுவித்து அவன்பால் ஒரு நூலைக் கொடுத்து, "இதனால் திரிபுரத்தவர் மதியை மயக்குக" என்று நாரதமுனிவரையும் துணை கூட்டி யனுப்ப, அக்கொள்கையில் மயங்கிச் சிவபத்தியில் வெறுப்புற்ற

ஞான்று, சிவபெருமான் தேவர்களின் வேண்டுகோளுக் கிரங்கி, பூமியே தேராகவும் சூரிய சந்திரர்களே இருசக்கரமாகவும், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களே நான்கு குதிரைகளாகவும், பிரமனே இரத சாரதியாகவும், பிரணவமே குதிரை தூண்டும் கோலாகவும், மேருமலையே வில்லாகவும், வாசுகியே நாணகவும், திருமாலே பாணமாகவும், வாயுவே அம்பிற் கட்டிய சிறகாகவும், அக்கினியே அம்பின் 'கூர்வாயாகவும் மற்ற தேவர்கள் பல வேறு கருவிகளாகவுஞ் செய்தனர்.' இதனை,

"மேருவி லாயதி ஞணா வாயொரு வெங்கணை மாலரியாய்
விரிதலை யுலகந் தேரா யதிலுறு மிருசக டிருசுடராய்
ஆரண நாலும் பரியா யம்புய னமைவுறு சாரதியாய்
அதினீ யுற்றிக வழியா முப்புர மட்டிடு மந்நாளில்
சீருறு மூவர்க ளழியா துன்னடி சேரா நின்றனரால்"

என்னுஞ் **சிதம்பர சுவாமிகள்** திருவாக்கானுணர்க. இறைவர் இவ்வகையுணர்ந்து அவர்கள் வேண்டுகோளின்படி மேருமலையை வில்லாக வளைத்து, அத் தேரிலேறிச் செலுத்துகையில், தேவர்கள் ஒவ்வொருவரும் தம்மாலேயே திரிபுரவிஜயம் நிகழ்வெய்துகிறதென தருக்குற்றனர். அதனை யுணர்ந்த சிவபெருமான் அவர்கள் இறுமாப்பு ஒழியும்வண்ணம் அதன் அச்சு முறியச்செய்து திரிபுரத்தைச் சிரித்தெரித்தனர் என்னுஞ் சரிதத்தாலுணர்க. இதன் விரிவை **சிவபராக்கிரமம் திரிபுராந்தக மூர்த்தியிற்** காண்க.

பூங்கணை! மதன் நுதல் விழிநோக்குப் பெற்ற வரலாறு:— உமாதேவி பர்வதராஜனுடைய அருந்தவப் புதல்வியாய் வளர்ந்து வருகையால், சிவபெருமானிடம் சனகன், சனந்தனன், சனாதனன், சனற்குமாரன் என்னு மகரிஷிகள் சென்று, ஐயனே! விரிந்தலையும் எங்கள் மனம் ஒடுங்கும்படி ஞானோபதேசஞ் செய்யவேண்டுமென்று விண்ணப்பம் பண்ணினார்கள். நான்கு மகரிஷிகளும் விண்ணப்பஞ் செய்து கொண்ட வளவில் சிவபெருமான் நகை செய்தருளி யாதொரு வார்த்தையும் சொல்லாமல், அம்முனிவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்யவிக்கவேண்டி தக்ஷிணாமூர்த்தி திருக்கோலங்கொண்டு

தமதிடக்கரத்தைத் திருமார்பிற் சேர்த்து வலத் திருக்கரத்துள்ள ஐந்து திருவிரல்களுள் அங்குட்டத்தையும் தற்சனியையுஞ் சேர நிறுத்தி, மற்றைய கனிட்டை, அநாமிகை, மத்திமை யென்னு மூன்று திருவிரல்களையும் விரித்துச் சின்முத்திரைகாட்டி யோகத்தி லிருந்தருளினார். அதுசமயம் சூரபன்மனால் துன்புற்ற தேவர் வேண்டுகோளின்படி பிரமதேவன் மன்மதனை நினைக்க, அம்மன்மத னும் வந்தான். வந்த மன்மதனைப் பார்த்து, "சிவபெருமான் யோகம் நீங்கி உமையவளிடத்துச் சேருமாறு புஷ்பபாணமேவி வருவா" யென்று சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்டவுடன் மன்மதனானவன் கைகளால் இரண்டு காதுகளையும் மூடிக்கொண்டு அரகராவென்று சிவநாமஞ்சொல்லி, சிவபெருமானிடஞ் சென்று, பாணப்பிரயோகஞ் செய்யப் பயந்து அநேகவிதமாக மறுத்துச் சொல்லப் பிரமன் கோபித்துச் சொன்ன வார்த்தை தடுத்தால் சாப மிடுவோமென்று சொல்ல், மன்மதன் நின்பால் சாபம்பெறுவதிலும் சிவபிரான் முன்சென்று இறப்பதே நலம் என்று சொல்லிவிட்டு விடைபெற்றுக்கொண்டு தனதுலகு அடைந்து அம்பறாத்தூணி கட்டி, தாமரை, மா, அசோகு, முல்லை, நீலமாகிய ஐந்து மலர்க் கணைகளும், கரும்பு வில்லும், மாந்தளிராகிய வாளும், குயிலாகிய எக்காளமும், முரசமாகிய கடலொலியும், சந்திரனாகிய குடையும், மீனக்கொடியுங்கொண்டு கிளியாகிய குதிரை பூட்டிய தென்றற் றேர்மீது இரதியுடன் ஏறித் திருக்கைலாயமலையை யடைந்து, திரு நந்திதேவரிடம் உத்தரவு பெற்றுச் சிவபெருமான் யோகத்திருத் தலைக்கண்டு நடுநடுங்கி மூர்ச்சித்து வீழ்ந்தனன். இரதி அவனை யுபசரிக்க மன்மதன் மூர்ச்சை தெளிந்து இறக்கத் துணிந்து கரும்பு வில்வளைத்து, சுரும்பு நாணேறிட்டுப் பஞ்சபாணங்களைச் சிவ பெருமான்மீது விடுத்தனன். அந்தக் கணைகள்போய் யோகத்தி லிருக்கும் சிவபெருமானிடத்தில் பொருந்தினவளவில் அவர் நெற்றியிலிருக்கும் நெருப்புக் கண்ணைத் திறந்து பார்த்தார். பார்த்தவுடன் மன்மதன் சாம்பராயினன். இரதி பலவகையாகப் புலம்பிப் பெருமானைத் துதிக்க, சிவபெருமான் இரதியைப் பார்த்துப் பார்வதியைத் திருமணஞ் செய்துகொண்டு உன் கணவ

ஞவியைத் தருகின்ரும் என்றனுக்கிரகித்து விடுத்து, சத்தருஷி களால் உமையம்மையை மணம்பேசி மணந்தனர். அப்பொழுது இரதி சிவபெருமானிடம் வந்து என் கணவனாகிய மன்மதனை யருள்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தவளவில், சிவபிரான் மன்மதன் உயிர்பெற்றெழும்படி திருவுளத்தில் சிந்தித் தருளினவுடன் தேவர்களஞ்சும்படி மன்மதன் தோன்றினன். மன்மதன் முகத்தைநோக்கி இரதியினுடைய பார்வைக்கு மாத்திரம் உருவமா யிருக்கக் கடவை. மற்றவர்களுக்கெல்லாம் உருவம் தோன்ருமல் அருவமா யிருந்துகொண்டு உன்னரசு செலுத்தக் கடவையென்று இரதியுடன் அவனைச் செல்லும்படி கட்டளையிட் டருளினர். இதனை,

**கந்தபுராணம்-காமதகனப்படலம்**

"விட்டவெம் பகழி யைந்தும் வியத்தகு விமலன் மெய்யிற்
பட்டலுஞ் சிறிதே வேளைப் பார்த்தனன் பார்த்த லோடுங்
கட்டழல் பொதிந்த நெற்றிக் கண்ணது கடிதே காமற்
சுட்டது கயிலை முற்றுஞ் சூழ்புகை பரவிற் றன்றே."

"செம்பதுமைத் திருக்குமரா தமியேனுக் காருயிரே
திருமான் மைந்தா
சம்பரனுக் கொருபகைவா கன்னல்வரிச் சிலைபிடித்த
தடக்கை வீரா
வம்பவளக் குன்றனைய சிவன்விழியால் வெந்துடல
மழிவுற் ருயே
யும்பர்கடம் விழியெல்லா முறங்கிற்ரு வயனுரு
முவப்புற் ருரோ."

"பொன்செய்தார் முடிகாணே னழகொழுகுந் திருமுகத்துப்
பொலிவு காணேன்
மின்செய்பூ ணணிகுலவும் புயங்காணே னகன்மார்பின்
மேன்மை காணேன்
கொன்செய்பூங் கணைகாணேன் சிலைகாணே னுடல்புரி
கோலங் காணேன்

என்செய்வே னென்கணவா வென்னையொழித் தெவ்விடத்தே
யிருக்கின் றாயே."

கந்தபுராணம்-மோனநீங்கு படலம்

"இனைய கூறின ளிரதிவேண் டிடுதலு மினைதீர்ந்த
புனித நல்லரு ளெய்தியே மங்கைநீ புலம்பாய்கேள்
வனைக ருங்குழற் கவுரியை மேவியாம் வரைபோதி
லுனது கேள்வனை யளிக்குதும் போதியென் றுரைசெய்தான்."

கந்தபுராணம்-திருக்கல்யாணப் படலம்

"எரிபுனை நமது நோக்கா லிறந்தநின் னுடல நீறாய்
விரைவொடு போயிற் றன்றே வேண்டின னிரதி யன்னாட்
குருவமா யிருத்தி யேனை யும்பரோ டிம்பர்க் கெல்லா
மருவினை யாகி யுன்ற னரசியல் புரிதி யென்றான்."

என வருவனவற்றா னறிக. இதன் விரிவைச் சிவபராக்கிரமம் - காமதஹந மூர்த்தத்திற் காண்க. (7)

ஆர்த்தெழு திரைகள் சுருண்டெறி கடனஞ்
சமுதுசெய் பெரும்புகழ்த் தனிமை
தீர்த்திட வுளங்கொண் டவலனென் றனைநின்
றிருவடிக் கன்பனுக் கிலையே
கார்த்திகை விளக்கு மணிமுடி சுமந்து
கண்டவ ரகத்திரு ளனைத்துஞ்
சாய்த்துநின் றெழுந்து விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) கார்த்திகை விளக்கு - கார்த்திகையில் ஏற்றப்படும் தீபத்தை, மணிமுடி சுமந்து-அழகிய திருமுடியில் தாங்கி, கண்டவர்-மலையுருவாகிய தேவரீரையும், அத்தீபத்தையும் தரிசித்தவர்களுடைய, அகத்து இருள் அனைத்தும்-மன இருளாகிய ஆணவ முதலிய எல்லாவற்றையும், சாய்த்து நின்று - கெடுத்து நின்று, எழுந்து விளங்குறும் - எழுந்து விளங்குகின்ற, சோண சைலனே கைலை

நாயகனே!—, ஆர்த்து எழுதிரைகள்-ஆரவாரித்து எழுகின்ற அலைகள், சுருண்டு எறி-மடங்கி மடங்கி வீசுகின்ற, கடல் நஞ்சு-கடலில் உதித்த "ஆலகாலம்" என்னும் விடத்தினை, அமுது செய்-அமுதமாக ஏற்றுக்கொண்ட, பெரும் புகழ்த்தனிமை-யாவராலும் அடைதற்கரிய பெரிய புகழினது தனிமையை, தீர்த்திட உளங்கொண்டு-நீக்குமாறு திருவுள்ளத்தில் எண்ணி, அவலனேன்றனை - ஒன்றுக்கும் உதவாத வீணனாகிய அடியேனை, நின் திருவடிக்கு - தேவரீருடைய திருவடிகளுக்கு, அன்பன் ஆக்கிலை-அன்புடையவனாகச் செய்கின்றீரில்லை. எ - று.

(வி-ரை.) உலகத்திலுள்ள எல்லா விளக்குக்களும் புறவிருளை நீக்கும். ஆனால், 'அகவிருளை நீக்கும் ஆற்றல் உலகத்தில் எந்த விளக்கிற்கும் இல்லை' என்று சொல்லுவோர் நாணுறும்படி கார்த்திகையில் ஏற்றப்படும் தீபத்தை அழகிய திருமுடியில் தாங்கி அத்தீபத்தையும் அதனைத் தாங்கிய பெருமானையும் தரிசித்தவர்களுடைய மன இருளாகிய ஆணவமுதலிய எல்லாவற்றையும் கெடுத்து உயர்ந்தோங்கி விளங்குகின்ற சோணசைலம் என்பார் 'கார்த்திகை விளக்கு மணிமுடி சுமந்து கண்டவ ரகத்திரு ளனைத்துஞ் சாய்த்துநின் றெழுந்து விளங்குறும் சோணசைலனே' என்றார். தேவர்களும் அசுரர்களும் கூடித் திருப்பாற்கடல் கடைந்தபோது அதிலிருந்து ஆலஹாலம் என்னும் கொடிய விஷம் உண்டாக, அதனால் எல்லோரும் அஞ்சி சிவபெருமானிடம் சரணடைந்து முறையிட, பெருமான் ஒருவராலும் ஏற்றுக்கொள்ள முடியாத அவ்விஷத்தை ஏற்றருளித் தேவர்களைக் காத்துப் பெரும் புகழ் படைத்தார். அப்புகழ் ஒன்றோடு, அவ்விஷம்போன்ற கொடியனாகிய தன்னையும் திருவடித் தொண்டனாக்கின் புகழ் ஒன்றாக இராமல் இரண்டாக இருக்குமென்பார் 'ஆர்த்தெழு திறைகள் சுருண்டெறி கடனஞ்சமுதுசெய் பெரும்புகழ்த் தனிமைதீர்த்திட வுளங்கொண்டவ லனேன்றனை நின்றிருவடிக் கன்பனாக்கிலேயே' என்றார். முடிசுமந்து - ஏழாம் வேற்றுமைத்தொகை. அகத்திருள் என்பதில் அகம் என்பது இடவாகுபெயர். என்னை? அகம் என்னும்

உள்ளிடப்பெயர் அங்கிருக்கின்ற மனதிற்கு ஆதலால் என்க. "அகமன மனையே பாவ மகலிட முள்ளுமாமே' சூடாமணி நிகண்டு.

திருக்குறள்

"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்"

என்பதிலும் அகம் - இடவாகுபெயர். இடவாகு பெயராவது:— இடத்தின் பெயர் அவ்விடத்திலுள்ள பொருளுக்கு ஆவது. 'ஊர் வந்தது' என்புழி, ஊர் என்றும் இடத்தின்பெயர் அதிலுள்ளவர்க்கு ஆயிற்று. நாடு களித்தது, உள் மகிழ்ந்தது, வான் உவந்தது முதலியனவும் இடவாகு பெயருக்கு உதாரணமாம். அகம் + அத்து + இருள் = அகத்திருள் (அத்து-சாரியை) 'அத்தி னகர மகர முனையில்லை' என்னும் நன்னூல் சூத்திரப்படி புணர்ந்தது. திரை-அலை. திறை-கப்பம் (இரண்டுக்கும் பேதமுணர்க) திரை என்பது வினைமுதற் பொருட்பெயர்ப் பகுபதம், திரை என்னும் பகுதியும், இ என்னும் வினைமுதற் பொருள்விகுதியும் பெற்று, அவ்விகுதி கெட்டு, முடிந்தது. காய், தளிர், பூ, கனி, நுரை, அலை முதலி யனவும் இவ்வாறே முடிக்க. கார்த்திகை விளக்கின் வரலாறு வெளிப் படை. இதனை அருணாசலபுராணத்தில் காண்க. (8)

தொடையுடைத் திரடோ ணமன்புறத் துடலந்
தொலைக்குமு னகத்துட றொலைத்துத்
தடையறத் திகழ்பே ரறிவுரு வாகத்
தமியனேற் கருளுநா ளுளதோ
புடையினிற் கரிக்கோ டிளம்பிறை புரையப்
பொங்குசோ தியங்கொடி விரித்த
சடையெனப் படர்ந்து கிடந்தொளிர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) புடையினில் - பக்கத்திற் கிடக்கின்ற, கரிக் கோடு-யானையின் கொம்பானது, இளம் பிறை புரைய-கலைகுறைந்த பிறைச் சந்திரனைப் போன்றிருக்க, பொங்கு சோதி அம் கொடி - ஒளி மிக்க

அழகிய சோதிக் கொடியானது, விரித்த சடையென - விரிக்கப்பட்டிருக்கின்ற சடையினைப்போல, படர்ந்து கிடந்து ஒளிர்-பாவிக் கிடந்து விளங்குகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, தொடை உடைத்திரள் தோள் - மாலையை யணிந்த திரண்டதோள் களையுடைய, நமன்-இயமன், புறத்துடலம் - தூல வுடம்பாகிய இச் சரீரத்தை, தொலைக்கும் முன்-அழிப்பதற்குமுன், அகத்து உடல்- சூக்கும சரீரமாகிய புரியட்டக வுடம்பை, தொலைத்து-அழித்து, தடையற - மலத்தினாலாகிய எல்லாத் தடைகளும் நீங்க, திகழ்பேர் அறிவு உருவாக-விளங்குகின்ற பெரிய ஞான உருவமாகும்படி, தமியனேற்கு-தனித்தவனாகிய அடியேனுக்கு, அருளும் நாள் உளதோ- திருவருள் புரியும்நாளும் உண்டோ? (அவ்வாறு ஆகும்படி திருவருள் புரிவாயாக) எ-று.

(வி-ரை.) மலைப்பக்கங்களின் யானைக்கோடும் சோதிக்கொடியும் விளங்குதல், சிவபெருமான் மலையுருவங்கொண்ட ஞான்றும் பிறையும், சடையு மணிந்ததுபோலத் தோன்றுகின்ற தென்பதாம்.

"வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்" எனவும்,

"படுமழை மொக்குளிற் பலகாலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்-தடுமாற்றந்
தீர்ப்போம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை
சேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்" எனவும்,

"நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்-நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று."

எனவும் கூறியபடி நில்லாததாக லாதலானும்,

பட்டினத்தார் பாடல்

"காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய்ப் படுமுன்னே-மேல்விழுந்தே

உற்று ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு."

அருணகிரியந்தாதி

"காய நெகிழாமுன் கண்க ளிருளாமுன்
வாயிலுள்ள பல்லும் வழுவாமுன்-காயம்பார்த்
தோடிநமன் வாராமுன் னுள்ளமே சோணகிரி
நாடிநம வென்றே நட."

எனக் கூறியபடி இவ்வுடலம் அழியுமுன்னரே இறைவனருளைப் பெறுதல் வேண்டப் படுவதாகலானும், புறவுடல் நீங்கியபின் எய்தல் கூடாதாகலானும், புரியட்டக வுடம்பு அழியின் ஆன்மா அறிவுரு வாக விளங்கு மாகலானும், அஃதும் "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என **மாணிக்கவாசகர்** கூறியபடி இறைவன் திருவருளா லல்லாமல் கைகூடுதல் அரிதாகலானும், "தொடையுடைத் திரடோ ணமன்புறத் துடல் தொலைக்குமு னகத்துடல் தொலைத்துத் தடை யறத் திகழ்பே ரறிவுரு வாகத் தமியனேற் கருணநா ளனதோ" என் றார். இயமன் வெற்றிமாலையை யணிந்த திரண்டதோள்களை யுடைய னாகலின் 'தொடையுடைத் திரடோணமன்' என்றார். இவ்வாறு கூறினமையின் அவன் புஜபல பராக்கிரமம் தோன்றுகின்றது. சரீரம் எழுவகைத் தாதுக்களால் கட்டப்பட்டதாகலின் 'யாக்கை' எனப் பேர் பெற்றது. தொடை என்பது செயப்படுபொருட் பெயர்ப்பகுபதம், தொடு-என்னும் பகுதியும், ஐ - என்னுஞ் செயப் படுபொருள் விகுதியும் பெற்று, பகுதியீற்று உகரங்கெட்ட வழி நின்ற டகரமெய்யின் மேல்விகுதி ஐகார வுயிரேறி முடிந்தது. எனவே தொடுக்கப்படுவது தொடை (மாலை) என்க. உடலம் என்பதில் அம் சாரியை. தொடையுடை-இரண்டாம் வேற்றுமைத் தொகை உடைமைப்பொருளில் வந்தது. தோணமன்-இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன்றொக்கதொகை. கரி-கரத்தை யுடைமையால் கரியெனப்பட்டது காரணப்பெயர். வடமொழிச் சொல். பிறை புரைய-இரண்டாம் வேற்றுமைத்தொகை ஒக்கப்படு பொருளில் வந்தது. (9)

கண்புன றுளிப்ப வழற்படு மிழுதிற்
கரைந்துகு நெஞ்சினின் றனையே
பெண்பயி லுருவ மொடுநினைந் தெனது
பெண்மய லகற்றுநா ளுளதோ
வண்புனல் வேந்த னார்கலிக் குடத்து
மணிமுகிற் கலயத்தின் முகந்து
தண்புன லாட்ட வாடுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வண் புனல் வேந்தன் - வளம் நிறைந்த நீருக்குத் தலைவனான வருணன், ஆர்கலி குடத்து - மிக்க ஒலியையுடைய கடலாகிய குடத்திலிருந்து, மணிமுகில் கலயத்தின்-நீலமணிபோன்ற மேகமாகிய கலசத்தினால், முகந்து - மொண்டு, தண்புனல் ஆட்ட-குளிர்ந்த நீரால் அபிடேகஞ்செய்ய, ஆடுறும் - நீராடுகின்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, கண்புனல் துளிப்ப - கண்கள் நீர்த் துளியைச் சிந்த, அழல்படும் இழுதின் - அக்கினியிற்பட்ட நெய் போல, கரைந்து உகும் - இளகி உருகுகின்ற, நெஞ்சின்-மனத்தில், நின்றனை - தேவரீரை, பெண் பயில் உருவமொடு - இடப்பாகத்திற் கொண்ட உமையம்மையுடன் கூடிய திருவுருவத்துடன், நினைந்து - தியானஞ்செய்து, எனது பெண்மயல் - அடியேனுடைய பெண்க ளிடத்துள்ள ஆசையாகிய மயக்கத்தை, அகற்றும் நாள் உளதோ - நீக்கக்கூடிய நாள் உண்டாகுமோ? எ-று.

(வி-ரை.) தாயுமானவர் பாடல்

"உடல்குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்க
ளூற்றென வெதும்பியூற்ற
வூசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
யோருறவு முன்னியுன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப்
பாடியாடிக் குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பி யார்த்தார்த்தெழுந்து

மடலவிழு மலரனைய கைவிரித்துக் கூப்பி
வானேய வானிலின்ப
மழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தியேத்தும்
கடன்மடை திறந்தனைய வன்பரன் புக்கெளியை
கன்னெஞ்சனுக் கெளியையோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே"

எனக் கூறியுள்ளபடி கண்கள் ஆனந்தபாஷ்பம்கொள்ள அக்கினியில் பட்ட நெய்போலக் கரைந்து உருகுகின்ற நெஞ்சிலே தியானிக்க வேண்டுமென்பார் 'கண்புன றுளிப்ப வழற்படு மிழுதிற் கரைந்துகு நெஞ்சில்' என்றார். கண்புனல் - ஆனந்தபாஷ்பம் என்பர்.

தாயுமானவர்

"என்பெலா நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
லிளகமன தழலின்மெழுகா
யிடையறா துருகவரு மழைபோ லிரங்கியே
யிருவிழிக ணீரிறைப்ப
வன்பினுள் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே
யமிர்தசஞ் சீவிபோல்வந்
தானந்த மழைபொழிவை"

எனக் கூறியபடி என்பெல்லாம் நெக்குடையவும், உடல் புளகாங் கிதம் கொள்ளவும், மனம் அழலிற்பட்ட மெழுகுபோல உருகவும், இருவிழிகளும் ஆனந்தக்கண்ணீர் சொரியவும் தன்வசங்கெட்டுப் பரவசப்பட்டவர்களாகிய அன்பர்களுக்கு அனுக்கிரகிக்கும் பெருமானாகலின், அவ்வடியார்களுக்கு உள்ளதாகிய அன்பின் மேலீட்டினால் உண்டாகும் குணங்களெல்லாம் தனக்கும் உண்டாகுமென்பார் 'கண்புன றுளிப்ப வழற்படு மிழுதிற் கரைந்துகு நெஞ்சில்' என்றார் எனினும் அமையும். இழுது-வெண்ணெயுமாம். பெண்பயிலுருவம்- அர்த்தநாரீச்சுவர வடிவம். இதனை அர்த்தநாரீசுவர மூர்த்தி என்பர்.

இஃது அஷ்டாஷ்ட மூர்த்தங்களாகிய அறுபத்துநான்கு சிவமூர்த் தங்களில் ஒன்று. இதனை,

காஞ்சிபுராணம்

"உமையுந் தானும் வேறன்மை யுருவி னிடத்துத் தெளிப்பான்போல்
இமைய மயிலை யொருபாதி வடிவி னிறுவி நாற்கரத்து
மமைய வனசந் திரிசூல மபய வரத மிவைதாங்கி
நமையு முய்யக் கொண்டருளு நாரி பாகன் றிருவுருவம்"

என்பதனானுணர்க. எனவே, பாதிசரீரம் வாமபாகத்திற் பார்வதி தேவியாரும், பாதி சரீரம் வலப்பாகத்திற் சிவபெருமானுமாக வீற் றிருக்கும் அருமைத் திருக்கோலமே அர்த்தநாரீசுவர மெனப்படும். இதன் விரிவை சிவபராக்கிரமம் அர்த்தநாரீசுவர மூர்த்தியிற் காண்க. நினைப்பதற்குரியவன் சிவபெருமானே எனவும், மற்றத் தேவர்கள் நினைப்பதற் குரியவர்க ளல்லரெனவும், அத்தேவர்களும் வணங்கும் முழுமுதற்கடவுள் இவனேயாம் எனவும், இம்முழுமுதற் கடவுளைத்தவிர மற்றைய தேவர்களை வணங்கேனென்பதும் தோன்ற, 'நெஞ்சி னின்றனையே' என்றார். இதனை,

திருவாசகம்

"உள்ளேன் பிறதெய்வ முன்னையல்லா தெங்களுத்தமனே" எனவும்,

தேவாரம்

"செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ
அத்த னென்றரி யோடு பிரமனும்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே" எனவும்,

அருணகிரியந்தாதி

"அல்லதொரு தெய்வ மறியே னறிந்தாலும்
நல்லதென்று நெஞ்சகத்தி னாடேன்யான்—சொல்லரிய
அண்ணா மலைமேவு மண்ணலையு மண்ணலிடத்
துண்ணா முலையாளை யும்"

எனவும் கூறியதனு னுணர்க.

### சௌந்தரியலகரி

"சிவமெனும் பொருளுமாதி சத்தியொடு சேரி
  னெத்தொழிலும் வல்லதாம்
இவள்பிரிந்திடி னியங்குதற்கு மரிதரி தெனு
  மறை யியம்பும்" எனவும்,

### திருவாசகம்

"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ" எனவும்,

### சிவப்பிரகாசம்

"பரந்தபரா பரையாதி பரன திச்சை
  பரஞானங் கிரியைபர போக ரூபந்
தருங்கருணை யுருவாகி விசுத்தா சுத்தத்
  தனுகரண புவனபோ கங்க டாங்க
விரிந்தவுபா தானங்கண் மேவி யொன்றாய்
  விமலமா யைந் தொழிற்கும் வித்தாய் ஞாலத்
தரந்தைகெட மணிமன்று ளாடல் காணு
  மன்னையருட் பாதமலர் சென்னி சேர்ப்பாம்" எனவும்,

### திருக்களிற்றுப்படியார்

"ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
போகங்க ளெங்கே புணர்ப்பெங்கே - பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு" எனவும்,

சத்தியாதிக்யம் கூறியதனாலும் 'நெஞ்சினின்றனையே பெண்பயி லுருவமொடு நினைந்து' என்றார். பெண் மயக்கத்தை ஒழிப் பதற்கு ஞானசத்தியுடன் கூடிய இறைவன் திருவுருவத்தைத் தியா னிப்பதே உபாயமாகலின், 'பெண்பயி லுருவமொடு நினைந்தெனது

பெண்மய லகற்றுநாளுளதோ' என்றார். மிகப்பெரிய திருவுருவமாகிய மலையுருவத்திற்கு வருணனலன்றி மற்றையோர்களால் நீராட்டுதல் ஆகாது என்பார் 'புனல்வேந்த னாட்டவாடுறும்' என்றார். ஆர்கலி - சமுத்திரம். (10)

வேலையந் துகில்சூழ் மலர்தலை யுலகின்
மெய்யினைப் பொய்யெனு மவர்க்கே
யேலவந் தருள்வ தன்றிமெய் யினைமெய்
யெனுமெனக் கருள்புரிந் திடாயோ
காலநன் குணர்ந்து சினகரம் புகுந்து
காண்பரி தெனுதுல கனைத்துஞ்
சாலநின் றுழியே கண்டிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) உலகு அனைத்தும்-உலகத்தார் யாவரும், காலம் நன்கு உணர்ந்து-தரிசனஞ் செய்தற்குரிய காலத்தை நன்றாக அறிந்து, சினகரம் புகுந்து-கோயிலை யடைந்து, காண்பு அரிது எனு-தரிசனஞ் செய்தல் அரிதென்று வருந்தாவண்ணம், நின்றுழியே-நின்ற இடத்திலிருந்தபடியே, சால கண்டிடும்-கண்களாரக் கண்டுகளிக்கும் படியான (அதிதூல வடிவங்கொண் டெழுந்தருளிய), சோணசைலனே! கைலைநாயகனே!—, அம் வேலைத் துகில் சூழ் - அழகிய கடலானது ஆடையாகச் சூழ்ந்திருக்கப்பெற்ற, மலர்தலை உலகின்-விரிந்த இடத்தையுடைய இவ்வுலகத்தில், மெய்யினைப் பொய் எனும் அவர்க்கே - மெய்யென்னும் பெயர்பெற்ற இவ்வுடம்பைப் பொய் யென்று மதிப்பவர்கட்கே, வந்து ஏல அருள்வ தன்றி - எழுந்தருளி வந்து மிகுதியாகத் திருவருள் புரிவதே யல்லாமல், மெய்யினை மெய் யெனும் எனக்கு-மெய்யாகிய இவ்வுடம்பை மெய்யென்று மதிக்கின்ற அடியேனுக்கு, அருள் புரிந்திடாயோ-திருவருள் செய்யமாட்டாயோ? (அடியேன் அறிகிலேன்); எ-று.

(வி-ரை.) திருக்குறள்

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு." எனவும்,

"நீரில் எழுத்தாகும் யாக்கை" எனவும்,

"வருகணத்து வாழ்ந்திடுமோ வீழுமோ இந்தமலக்கூடு" எனவும்,

"நேற்றுளா ரின்றுமாளா நின்றனர்" எனவும்,

ஆன்றோர்கள் அனுபவத்தாற் கூறிய மெய்ப்பொருளை நன்றாக உணர்ந்து மெய்யினிடத்திற் கொண்ட யானெனும் ஆசையைத் தொலைத்த உண்மை ஞானிகட்கே திருவருள் கைகூடுமாகலின், அந்நிலையைத் தானடையுமாறும், அதற்குத் தடையாய் நிற்கின்ற தேகாபிமானம் நீங்குமாறும் வேண்டுகின்றார் என்பது கருத்து. ஆலயத்திற்குச் சென்று இறைவனுடைய பூசைக்காலங்களில் தரிசனம் செய்வது மிக்க பலன் தருமேனும் ஒருசிலர்க்கு அதுவும் முடியாமற் போகுமாகலின் அவர்களும் உய்ய வேண்டுமென்ற பெருங் கருணையோடு யாவரும் எக்காலத்தும் எளிதாகக் கண்டு பெரும் பயனைப் பெறுமாறு மலையுருவமாக எழுந்தருளி யிருக்கின்றாராகலின், "நின்றுழியே கண்டிடுஞ் சோணசைலனே" என்றார். பொய்யை மெய்யென்றது மங்கலவழக்கு. மங்கலவழக்காவது மங்கலமில்லாததை யொழித்து மங்கலமாகக்கூறுவது. செத்தாரைத் துஞ்சினாரென்றும், ஓலையைத் திருமுகம் என்றும், காராட்டை வெள்ளாடு என்றும், இடுகாட்டை நன்காடு என்றும், தாலியறுந்ததை தாலிபெருகிற்று என்றும் வருபவைகளெல்லாம் மங்கலவழக்கு. உலகு-இடவாகுபெயர். காண்பு - தொழிற்பெயர். காண் - பகுதி, பு - தொழிற்பெயர் விகுதி. சமுத்திரமாகிய அழகிய ஆடைசூழ்ந்ததும் பரந்த இடமுடையதும் இவ்வுலகமாகலின் 'வேலையந் துகில்சூழ் மலர்தலை யுலகு' என்றார். மலர்தலை-விரிந்த இடம். கண்ணகன் என்பதும் இப்பொருள் குறிக்கும். மலர்தலை என்பது 'மலர்தலை யுலகத்துப் பலபலமாக்கள்' என, பட்டினத்தார்பாடலிலும், 'மலர்தலை யுலகின் மல்கிருளகல' என நன்னூலிலும், இன்னும் பிறநூலினும் கூறப்பட்டிருத்தல் காண்க. உலகில், என்னும் நிலைமொழியும் மெய்யினை என்னும் வருமொழியும் புணரும் போது நிலைமொழி யீற்று லகரம் னகரமானது 'மெலிமேவினணவும்' என்னும் நன்னூல்சூத்திர விதியானென்க. மெய் என்னப் பெயர் பெற்ற தேகம் நிலையற்றது என்று உணர்ந்தவர்களுக்கே பெருமான்

திருவருள் புரிவாராகலின், 'மெய்யினைப் பொய்யெனு மவர்க்கே யேல வந்தருள்வது' என்றார். (11)

மயலினு லழுந்தும் பிறவியா மளற்றை
வளர்தரு நின்பெருங் கருணை
வெயிலினு லுலர்த்தி யெனதுளக் கமலம்
விரிக்குமொண் பரிதிநீ யலையோ
பயிலுமா லயமோர் சைலமோர் சைலம்
பகைப்புல முருக்குகார் முகமோர்
சைலமா தலனு மெனக்கொளுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) பயிலும் ஆலயம்-எப்பொழுதும் நீங்காமல் எழுந்தருளியிருக்கும் ஆலயமும், ஓர் சைலம் ஆம்-ஒரு மலையாகும், பகைப்புலம்-பகைவராகிய அசுரர்களுடைய இடமாகிய திரிபுரத்தையும், முருக்கு கார்முகம் - அழிக்கும் வில்லும், ஓர் சைலம் ஆம் - ஒரு மலையாகும், மாதுலன்-மாமனும், ஓர் சைலம் ஆம் என-ஒரு மலையாகும் என்று, கொளும்-அவைகளுக்கு ஏற்ப மலையுருவத்தைக் கொண்டிருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, மயலினுல் - மயக்கத்தினுல், அழுந்தும்-அழுந்துதற்குரிய, பிறவி ஆம் அளற்றை-பிறப்பென்று சொல்லப்படுகின்ற சேற்றை, நின்-தேவரீருடைய, வளர்தரும் - எக்காலமும் குறைவில்லாமல் வளர்கின்ற, பெருங்கருணை-(கைம்மாறற்ற) பெருங் கருணையாகிய, வெயிலினுல் உலர்த்தி-வெயிலால் உலரும்படிசெய்து எனது உளக் கமலம் - அடியேனுடைய மனமாகிய தாமரையை, விரிக்கும்-மலரும்படி செய்கின்ற, ஒண் பரிதிநீ அலையோ - ஒளிமிக்க சூரியன் தேவரீர் அன்றோ? (ஆகலின் அடியேனுக்குத் திருவருள் பாலிப்பீராக); எ-று.

(வி-ரை.) திருக்குறள்

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலமும்
ஒண்டொடியார்க் கண்ணே யுள."

என்றுகூறியபடி ஐம்புல ஆசையே மயல் என்க. ஆதலின் மாதரைக் காண்டல், சிந்தித்தல், அவர்சொற் கேட்டலாதிய ஐம்புல ஆசையும் மாதரார் இடத்தில் உள்ளது.

திருப்போரூர்ச் சந்நிதிமுறை

"மாதர்மய லுமவர்தம் மைவிழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரகம்-ஓதிலதில்
வீழ்ந்தோர்க்கு மேற விதியில்லை போரூரைத்
தாழ்ந்தோர்க்கு மில்லை தவறு." எனவும்,

"ஓரிரண்டு வாழைக் கிடையிருந்த ஊரரவின் வாய்படார்
பீழைக் கிடைவருந்தார் பின்" எனவும்,

பட்டினத்தார்

"பட்டப்பகலில் வெளிமயக்கே செயும் பாவையர்மே
லிட்டத்தை நீதவிர்ப்பா யிறைவாகச்சி யேகம்பனே"

"தோகையர் மாயையிலே செல்லாமற் செல்வம்
தருவாய் சிதம்பர தேசிகனே"

"மாலையுபாதி துயில்காம மிவைமாற்றி விட்டே"

"இங்கிளைத் துமின்னு ரைக்கே யவலக்குழியருகே
யசும்பார்ந் தொழுகும்
புழைக்கே யுழலுந்தமியேனை யாண்டருள்"

"நாறுங் குருதிச் சலதாரை தோற்புழை நாடொறுஞ்சீ
யூறு மலக்குழி காமத்து வார மொளித்திடும்புண்
தேறுந் தசைப்பிளப் பந்தரங் கத்துள சிற்றின்பம்விட்
டேறும் பதந்தரு வாய்திருக் காளத்தி யீச்சுரனே"

எனப் பெரியோர் அமோகமாக மாதர்மயக்கம் நீக்குதற்கரியதென்றும் அம்மயக்கம் அவனருளின்றி நீங்கா தென்றும்,

"திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்
தங்கித் திரியும் சவலைப் பெருவழி"

எனக் கூறியபடி, சிவபெருமான் திருவருளில்லாதவர்கள் தங்கித்திரி கின்ற மெலிவாகிய பெரிய வழியாகிய யோனியுடையவர்கள் மாத ரார்களென்றும்,

திருவிளையாடற்புராணம்

"அரவகலல்குலார்பா லாசைநீத்தவர்க்கேவீடு
தருவமென்றளவில்வேத சாற்றியதலைவன்றன்னை"

எனக்கூறியபடி பாம்பின் படம்போலும் கடிதடமுடைய மாத ரிடத்தில் ஆசையை அகற்றியவர்களே மோக்ஷம்பெறுவார்களென்று கணக்கில்லாத வேதவாக்கியங்களில் சிவபெருமான் திருவாய்மலர்ந் தருளியிருப்பதனுலும், அம்மாதர்களின் இன்பம் காரணமாகக் கருதுகின்ற மயக்கமே பிறவி வளர்தற்குக் காரணமாகலானும் 'மயலினுலழுந்தும் பிறவி' என்றார். பிறவியி லகப்பட்டுக்கொண்டார் அதிலிருந்து 'கரையேறுதல் அரிதாகலானும், கரையேறுதற் குரிய முயற்சி செய்யினும், மீண்டும் தன்னிடமே புகும்படி உயிர் களைக் கவரும் ஆற்றலுடைமையானும் பிறவியை 'அளறு' என்றார். உளக் கமலம் - இருதயமாகிய தாமரை: அது மலர்வது திருவரு ளாலே யாவதாகலின் இறைவனைப் 'பரிதி' என்றார். ஐம்புல ஆசை காரணமாக அழுந்துதற்குரிய பிறப்பென்று சொல்லப்படுகிற சேற்றைத் தேவரீர் திருவருளாகிய வெயிலால் உலரும்படி செய்து அடியேனது மனமாகிய தாமரையை மலரும்படி செய்கின்ற ஒளிமிக்க சூரியன் தேவரீரே என்பார், 'மயலினுலழுந்தும் பிறவியா மவற்றை வளர்தரு நின்பெருங் கருணை வெயிலின லுலர்த்தி யென் னுளக் கமலம் விரிக்குமொண் பரிதிநீயலையோ' என்றார். எனவே, தேவரீரே அடியேனுக்குத் திருவருள் பாலிக்கவேண்டும் என்பது கருத்து. பயிலுமாலயம் ஓர் சைலம் என்றது கைலாயமலையை. கைலாயமலையை ஊழிதோ றுேங்கு மோங்கல் என்பர். இதன் விவரம் முன்னெரு செய்யுளில் கூறியுள்ளோம். இதனை,

### தேவாரம்

"ஊழிதோ றூழிமுற்று முயர்பொன் னெடிததான மலையைச
சூழிசை யின்கரும்பின் சுவைநாவ லூரன்சொன்ன
ஏழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையும்
ஆழிகட லறையா வஞ்சை யப்பர்க் கறிவிப்பதே"

என்பதனுனு முணர்க. ஓர் சைலம் பகைப்புல முருக்குகார்முகம் என்றது மேருமலையை. திரிபுர சம்மார காலத்தில் மேருமலையை வில்லாக வளைத்தமையாலென்க. ஓர் சைலம் மாதுலனும் என்றது- இமயமலையை. உமாதேவியைத் தவப்புதல்வியாக வளர்த்துச் சிவபெரு

மானுக்கு விவாகம் செய்து கொடுத்தமையாலென்க. அந்தியமும் துக்கரூபமுமான உலகத்தை மெய்யாகவும், இன்பமாகவும் கருதுகின்ற மயக்கமே பிறவி வளர்தற்குக் காரணமாகலின் 'மயலினுலமுழுந்தும்பிறவி' என்றார் எனினுமமையும். சிவபெருமானை 'பரிதி' என்றதற்கியையப் பிறவியை 'அளறு' என்றும், பெருமான் கருணையை 'வெயில்' என்றும், உள்ளத்தை 'கமலம்' என்றும் கூறினார். சூரியனுக்கு வெயிலைக் கொடுத்தலும், சேற்றை யுலரச் செய்தலும் தாமரை மலரை விகசிக்கச் செய்தலும் உளதாகலின் சிவபெருமானாகிய சூரியன் பிறவியாகிய சேற்றைக் கருணையாகிய வெயிலினா லுலரச் செய்து இருதய கமலத்தை மலரச் செய்வான் என்றார்.

கந்தபுராணச்சுருக்கம்

"தேவர்குலப் பெருங்கமல மிடுக்க ஞான
திமிரமகன் றளியோடு சிறந்து வாழ
மாவலிசே ரவுணர்குலக் குவளை வாடி
மண்ணினிடைச் சுருங்கியிட வந்த பானு" எனவும்,

"கடியதிரி மலவிருளைக் கடிய ஞான
காமுதவ வெதிர்செறிந்து கண்டோர் தங்கள்
வடிவுடைய விதயசரோ ருகங்க ளெல்லா
மலரவவ மதிகிலவு மழுங்கித் தாழப்
படியடியர் கண்டுதொழ யண்டு சீர்த்திப்
பரன்கமலை யெழுந்தவருட் பானு" எனவும்,

கூறியுள்ளனவும் ஈண்டு நோக்கத்தக்கது. (12)

புலம்புரி துயரங் கழன்றுநின் கழற்கால்
புந்தியஞ் சினகரத் திருத்தி
நலம்புரி புனிதர் பேரவை தமியே
னணுகுவா னருளுநா ளுளதோ
வலம்புரி மனிதர் கடலெனு வொலித்து
வளைவுற நடுவண்மந் தரம்போற்
றலம்புரி தவத்தி னின்றொளிர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வலம்புரிமனிதர்-வலமாகச்சூழ்ந்து வருகின்ற அன்பர்கள், கடல் என ஒலித்து-சமுத்திரம் ஒலிப்பதுபோலத் தேவரீர் புகழைப் பேசித் துதித்துக்கொண்டு, வளைவுற - நாற்புறமும் சூழ்ந்திருக்க, நடுவண்-நடுவில், மந்தரம்போல்-மந்தரமலைபோல, தலம்புரிதவத்தின்-உலகத்தார் செய்த தவத்தின்பயனாக, நின்று ஒளிர் - ஓங்கிநின்று விளங்குகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, புலம்புரி துயரம் கழன்று - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்னும் ஐம் புலன்களால் விளைகின்ற துன்பங்களினின்றும் நீங்கி, நின் கழல் கால்-தேவரீருடைய வீரக்கழலை யணிந்த திருவடிகளை, புந்தி அம் சின கரத்து - உள்ளமாகிய அழகிய கோயிலில், இருத்தி - எழுந்தருளச் செய்து, நலம்புரி-யாவருக்கும் நன்மையே செய்கின்ற, புனிதர் பேரவை-தூய்மையுடைய அடியவர்களது திருக்கூட்டத்தில், தமியேன்-(யாதொரு ஆதாரமுமில்லாதவனாகிய) அடியேன், நணுகுவான்-சேரும்படியாக, அருளும் நாள் உளதோ - திருவருள் செய்கின்ற நாளும் உண்டாகுமோ? எ-று.

(வி-ரை.) ஐம்புல விஷயங்களாகிய சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களாகிய துயரங்களினின்று நீங்குதல் வேண்டுமென்பார் 'புலம்புரி துயரங் கழன்று' என்றார். பெருமான் திருவடிகளைத் தனது மனமாகிய தாமரையில் இருத்திக்கொள்ள வேண்டுமென்பார் 'நின் கழற் கால் புந்தியஞ் சினகரத் திருத்தி' என்றார். சிவபக்தர்கள் திருக்கூட்டத்தில்தானும் அடையும்படி பெருமான் கிருபை செய்கின்றநாளும் உண்டோ என்பார் 'புனிதர் பேரவை தமியேனணுகுவா னருளுநாளுளதோ' என்றார். துயரம் என்பதில் அம்-சாரியை. நணுகுவான்-தெரிநிலை எதிர்கால வினையெச்சப் பகுபதம்.

பிரபுலிங்கலீலை

"அருளெனும் புனலினை யாட்டிச் சாந்தமாம்
வரைநறுஞ் சந்தொடு மருவ விந்திய
விரைமலர் புனைந்தறி வினைய ருத்துறிற்
பரமனை யவன்சிவ பக்த னாகுவான்"

எனச் சிவபக்த ரிலக்கணம் கூறிய வாற்றானும்,

பட்டினத்தார்

"நல்லா ரிணக்கமுந் நின்பூசை நேயமும் ஞானமுமே
யல்லாது வேறுநிலை யுளதோ" எனவும்,

திருக்குறள்

"மருவுக மாசற்றார் கேண்மை யொன்றீந்து
மொருவுக வொப்பிலார் நட்பு" எனவும்,

திருமந்திரம்

"ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்
றேடவல் லார்க்கருள் தேவர் பிரானொடுங்
கூடவல் லாரடி கூடுவன் யானே"

எனவும் கூறுதலானும், நம்பியாரூரரும் திருவாரூர்க் கோயிலை யடைந்து அடியார்களுக்கு அடியனாக வேண்டுமெனப் பெருமானை வேண்டியதாகப் பெரியபுராணம் கூறுதலானும், அடியார் கூட்டத்தை விரும்பிய தாமும் 'நலம்புரி புனிதர் பேரவை நணுகுவா னருளுநா ளுளதோ' என்றார். தேவர்களுக்கு மந்தரமலை அமுதளித்தது போலச் சோணசைலம் சூழ்ந்தவர்களுக்கு முத்தியின்ப மளிக்குமாதலின் 'வளைவுற நடுவண் மந்தரம்போல்' என்றார். தலம்-இடவாகு பெயர். உலகத்தார் செய்த தவத்தின் பயனாக ஓங்கி நின்று விளங்குகின்ற சோணசைல மாகலின், 'தலம்புரி தவத்தினின் றெளிர் சோணசைலனே' என்றார். (13)

நீரினி லெழுமொக் குளிலனழி யுடம்பு
நிலையென நிலைக்குமா னந்த
வாரிதி படிய வறிந்திடா தழலு
மடமையே னுய்யுநா ளுளதோ
வேரியல் பதமுன் றேடுமக் கேழ
லின்றுநா டியகிளைத் திடல்போற்
சாரலி னேன மருப்புழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) ஏர் இயல் பதம் - அழகு பொருந்திய தேவரீருடைய திருவடியை, முன் தேடும் - முன்னாளில் தேடிய, அக் கேழல்-அந்த (திருமாலாகிய) பன்றியானது, இன்றும்-இப்பொழுதும், நாடிய-தேடும் படியாக, கிளைத்திடல் போல்-பூமியை அகழ்தல் போல, சாரலின்- அடிப்பக்கங்களில், ஏனம்-பன்றியானது, மருப்பு உழும்-கொம்பினால் நிலத்தை உழப்பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, நீரினில் எழும்-தண்ணீரில் தோன்றுகின்ற, மொக்குளின்-குமிழியைப் போல, அழி உடம்பு - விரைவினழியக்கூடிய சரீரத்தை, நிலை என- என்றும் நிலையாயுள்ளதென வெண்ணி, நிலைக்கும் ஆனந்த வாரிதி- எக்காலத்தும் அழியாமலிருக்கிற பேரின்பக் கடலில், படிய அறிந்திடாது-முழுக அறியாமல், உழலும்-உலக இன்பத்திலேயே உழன்று கொண்டிருக்கிற, மடமையேன்-அறிவிலியாகிய அடியேன், உய்யும் நாள்-பிழைக்கும் காலமும், உளதோ - உண்டாகுமோ? (அடியேன் அறியேன்); எ-று.

(வி-ரை.) தண்ணீரில் தோன்றுகின்ற குமிழியைப்போல விரைவிலழியக்கூடியது சரீரமாகலின் 'நீரினி லெழுமொக்குளி னழியுடம்பு' என்றார். நீர்க்குமிழிபோலக் காலநியதியில்லாமல் அழியக் கூடியதேகத்தை நிலையுள்ளதென்று கருதுவேனென்பார் 'அழியுடம்பு நிலையென' என்றார். நிலையற்ற காயத்தை நிலையுள்ளதாக நினைத்து அதனால் அதனிடத்துள்ள ஆசையைப் போக்காமல் அழியாத் தன்மையுடைய பேரின்பத்தில் விழையாது விஷயவாசனையில் காலம் போக்கினேன் என்றும் அதனால் தவநாளை அவநாளாகப் போக்கினே னென்றும் கூறுவார் 'நிலைக்கு மானந்த வாரிதிபடிய வறிந்திடா துழலும்' என்றார். இறைவன் திருவருளை நாடுவோர்க்கே முத்தி சித்திக்கு மென்பதை யுணர்ந்திருந்தும் திருவருளை நாடாமலும் அத் திருவருள் நாடாமையால் முத்தி லபிக்க வழியில்லாமலிருந்தும் விஷய வாசனையில்மாத்திரம் உழலுகின்ற அறிவிலியாகிய அடியேன் பிழைக்கும் காலமும் உண்டாகுமோ என்பார் 'மடமையேன் உய்யுநாளுளதோ' என்றார். நாடிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். அக்கேழல் என்பதில் அகரம் சிறப்புப்

பொருளது. இன்றும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. (14)

கருத்திடை நினது கருணைமா மேனி
கண்டெழுத் தைந்துநா வியம்பச்
சிரத்தினி லமைத்த கரத்தொடு நினையான்
றினம்வலம் புரியுமா றருளாய்
வரத்திரு முடியின் மதிதிரு முடியின்
வனைந்துகந் தரத்தினி லிருள்கந்
தரத்தினி லிருத்தி விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வரம் திருமுடியின் மதி - மேன்மை பொருந்திய திருமுடியிலணிந்த பிறைமதியை, திருமுடியில் வனைந்து - அழகமைந்த உச்சியிற் புனைந்து, கந்தரத்தினில் இருள்-(முன்) கண்டத்தில் தரித்த விஷத்தினது கருமையான இருளை, கந்தரத்தினில் இருத்தி - (இம் மலையுருவத்தில்) குகைகளிடமாகத் தரித்திருக்கச் செய்து, விளங்குறும் - விளங்குகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, கருத்து இடை - மனதின்கண், நினது - தேவரீருடைய, கருணைமா மேனி - அருள்வடிவமாகிய பெருமை பொருந்திய திருவுருவத்தை, கண்டு - (இடைவிடாது) நினைத்து, நா-(அடியேனுடைய) நாவானது, ஐந்து எழுத்தும் இயம்ப-(தேவரீர் திருநாமமாகிய) திருவைந்தெழுத்தையும் உச்சரிக்க, சிரத்தினில் அமைத்த கரத்தொடு - சென்னியில் குவித்த கைகளுடன், யான் தினம் நினைவலம் புரியுமாறு-அடியேன் நாடோறும் தேவரீரை வலம் வரும்படியாக, அருளாய் - திருவருள் செய்வாயாக; எ-று.

(வி-ரை.) பெருமான் திருவுருவத்தை மனதின்கண்ணே தியானித்து, அவன் பஞ்சாக்கரத்தை நாவினால் உச்சரித்துச் சிரத்தின்கண் அஞ்சலியாகக் குவித்த கைகளோடு கிரிப்பிரதக்ஷிணம் நாடோறும் செய்யவேண்டுமென்பார் 'கருத்திடை நினது கருணைமாமேனி கண்டெழுத் தைந்து நாவியம்பச் சிரத்தினி லமைத்த கரத்தொடு நினையான் றினம் வலம்புரியுமாறு அருளாய்' என்றார். எனவே மனம்,

வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களாலும் வழிபட வேண்டுமென் பதே இவரது வேட்கையாம் என்க. இடை - ஏழாம் வேற்றுமை யுருபு. மதி தவழ்ந்து செல்லுதலை 'மதிதிருமுடியின் வனைந்து' என்றார். சிவபெருமான் தனது திருமுடியின்க ணணிந்திருந்த பிறைமுடியையும் கண்டத்தி லணிந்திருந்த விஷக் கருமையாகிய இருளையும் சோணசைல வடிவங்கொண்டபோதும் முறையே உச்சி யின்கண் சூடியும் குகைகளினிடமாக இருத்தியும் விளங்குவன் என்பார் 'வரத்திரு முடியின் மதிதிரு முடியின் வனைந்துகந் தரத் தினி விருள்கந் தரத்தினி லிருத்தி விளங்குறும் சோணசைலனே' என்றார். (15)

பாரெலா மிகழு மிகழ்ச்சியும் புகழ்ச்சிப்
பயனென வுணர்ந்துநா டொறுமா
ரூரனு ரவையி னிகழ்ந்தசொற் றுதியி
னுவக்குநின் பதந்தொழ வருளா
யேருலா மண்டச் சுவர்மதின் மிசைப்பா
லிலங்குறு மண்டகோ ளகையாச்
சாருமா லயத்தி லிலிங்கமாஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) ஏர் உலாம் - அழகு பொருந்திய, அண்டச் சுவர்மதில் (ஆக) - அண்டத்தின் சுவர்களே (நான்கு பக்கங்களிலுமுள்ள) மதி லாகவும், இலங்குறும் அண்டகோளகை - விளங்குகின்ற அண்டத்தின் முடியே, மிசைப்பால் ஆக-மேற்பகுதியாகிய விமானமாகவும், சாரும் ஆலயத்தில்-கொண்டிருக்கின்ற (இவ்வண்டமாகிய) திருக்கோயிலில், இலிங்கம் ஆம் - இலிங்கமூர்த்தியாக எழுந்தருளியிருக்கின்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, பார் எலாம் இகழும் இகழ்ச்சியும்- பூமி முழுதும் இகழ்கின்ற இகழுரையினைத்தையும், பயன் புகழ்ச்சி என உணர்ந்து-பயனைத்தரும் புகழ்ச்சி மொழியாகத் தேவரீர் ஏற்றுக் கொள்வீர் என அறிந்து, ஆரூரனூர்-நம்பியாரூர் (சுந்தரமூர்த்திநாய னார்), அவையின் இகழ்ந்த சொல் - பல ஆன்றோர் நிறைந்த சபையில் இழித்துக்கூறிய (பித்தனே) என்பன முதலிய சொற்களை, நாள் தொறும் - தினந்தோறும், துதியின் உவக்கும் - புகழுரைபோல

ஏற்று மகிழ்கின்ற, நின்பதம் - தேவரீருடைய திருவடியை, தொழ அருளாய் - வணங்கும்படியாக திருவருள் செய்வாய்; எ-று.

(வி-ரை.) பூமி முழுதும் இகழ்கின்ற இகழ்ச்சியும் புகழ்ச்சி மொழியாகப் பெருமான் ஏற்றுக்கொள்வானெனத் தெரிந்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல ஆன்றோர் நிறைந்த சபையில் இழித்துக் கூறிய சொற்களைத் தினந்தோறும் துதிபோல விரும்பி யருளுகின்றனன் அப்பெருமான் ஆகலான் 'பாரெலா மிகழு மிகழ்ச்சியும் புகழ்ச்சிப் பயனென வுணர்ந்துநா டோறுமா ரூரனைவயி னிகழ்ந்த சொற்றுதியி னுவக்கும்' என்றார். இகழ்ச்சியையும் புகழ்ச்சியாகக் கொள்ளுகிற கடவுள் தேவரீரைத் தவிர்த்து வேறொருவரையும் கண்டிலேமாதலால் தேவரீர் திருவடிகளைத் தொழத் திருவருள் பாலிக்கவேண்டுமென்பார் 'நின்பதம் தொழவருளாய்' என்றார். ஆரூரர் திருவெண்ணெய் நல்லூரில் மணப்பந்தரிலும், திருவொற்றியூரிலும், திருவாரூரிலும் இன்னும் பல இடங்களிலும் இகழ்ந்தமை பெரியபுராணத்தானும், தேவாரத் திருப்பதிகங்களானும் உணரக்கூடியதாகும். உதாரணமாக, 1. பித்தனோ மறையோவென்றான். 2. பித்தா பிறைசூடி. 3. மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய் முதலியவைகளான் அறிக. 'மிசைப்பாவு' எனப் பாடங்கொள்ளின் மேற்பரப்பு எனப் பொருளுரைக்க. சிவபெருமானுக்கு இகழ்ச்சி மொழியும் புகழ்ச்சிப் பொருளனவாம் என்பதனை,

**சிவநாம மகிமை**

"முந்தை யோர்சொன் மொழிந்து சிவனென
நிந்தை தானச் சிவனை நிகழ்த்தினும்
வந்த தீவினை மாற்றுவ தாதலாற்
சிந்தை யோடு சிவசிவ வென்மினே"

என்னும் செய்யுளானறிக. ஆலயத்துள் இலிங்க வடிவமாக எழுந்தருளிய சோணசைலனாகலின் 'ஆலயத்தி லிலிங்கமாஞ் சோணசைலனே' என்றார். இலிங்கம் என்றது அஷ்டாஷ்ட மூர்த்தங்களிலொன்றாகிய இலிங்கமூர்த்தியை. இவ்விலிங்க மூர்த்தியின் விரிவைச் சிவபராக்கிரமம் இலிங்கமூர்த்தியிற் காண்க. (16)

இந்தியங் கரண முடலம்வே ருக்கி
யிருண்மலப் படலமுங் கீறிக்
கந்தமு மலரு மெனநினை யென்னிற்
காண்பறக் காணுநா ளுளதோ
வந்தொரு களிறு முழுவையுங் கொன்ற
மலிபகை தவிர்ப்பவெண் ணிகந்த
தந்தியும் புலியும் வளர்த்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வந்த ஒரு களிறும் - எதிர்த்துவந்த ஒரு யானையையும், உழுவையும் கொன்ற-புலியையும் கொன்ற, மலி பகை - மிகுந்த பகையை, தவிர்ப்ப-நீக்கும் பொருட்டே, எண் இகந்த-அளவு கடந்த, தந்தியும் புலியும்-யானைகளையும் புலிகளையும், வளர்த்திடும்-வளர்த்து வருகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, இந்தியம்-(மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும்) ஐம்பொறிகளையும், கரணம்-(மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும்) அந்தக்கரணங்களையும், உடலம் - சரீரத்தையும், வேறு ஆக்கி - (நானென்று கருதிய மயக்க வுணர்ச்சி நீங்கி) என்னின் வேறென்று கண்டு, இருள் மலப் படலமும் கீறி-அஞ்ஞானத்தைத் தருகின்ற ஆணவமுதலிய மலக்கூட்டத்தையும் அழித்து, நினை என்னில் - தேவரீரை அடியேனிடத்தில், கந்தமும் மலரும் என - மணமும் மலரும் போல, காண்பு அறக் காணும் நாள்-வேறாகக் காணுதலின்றி ஒற்றுமையாகத் தரிசிக்கும் நாளும், உளதோ-உண்டாகுமோ? எ-று.

(வி-ரை.) இந்திரியங்களே ஆன்மா வென்பார் மதமும் அந்தக்கரணங்களே ஆன்மாவென்பார் மதமும், தேகமே ஆன்மா வென்பார் மதமும் ஆகிய இவையெல்லாம் பூர்வபக்கங்களாகலின், இந்நூலாசிரியர்க்கு உடன்பாடன் றென்பதைக் காட்டவே 'இந்தியங் கரணம் உடலம் வேறாக்கி' எனக்கூறினார். இருண்மலம் - ஆணவ மலம். இது சுத்த இருளாயிருப்ப தொன்றாகலின், 'இருண்மலம்' எனப்பட்டது. இதனை,

**தணிகைப்புராணம்**

"உறுதி பயக்குங் காரியங்க ளொருகா லத்துஞ் செயவொட்டா
திறுதி பயக்குங் காரியமே யெக்கா லத்து நிகழ்விக்குஞ்
செறியு முயிரி னல்லறிவை யெக்கா லத்துஞ் சிதைத்தவரு
மறிய வுயிர்க்குப் புகரறிவை யெக்கா லத்தும் வளர்ப்பிக்கும்"

"தூய நினைவைத் தூமொழியைத் தூய தொழிலைத் தோற்றாது
தீய நினைவைத் தீமொழியைத் தீய தொழிலைத் தவத்தோற்று
மாய தணியா ணவப்பகையி னசட்டை தணிப்ப வுயிரடுக்கு
மாயை யிரண்டு திறனுருஞ் சுத்தம சுத்தமென மாதோ"

"இருண்மல மொன்றே பற்று மிருவினை யடையேற் கந்தோ
மருண்மலி மாயை கன்மந் திரோதான கரியை மல்கும்
பொருண்மலி தருமா மாயைப் புகர்மல நான்குந் தந்து
மருண்மலி யருளிற் றீரா வற்புதத் தொழின்மை போற்றி"

**சிவப்பிரகாசம்**

"ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீனு
மெண்ணிய சத்தியதா யிருளொளிர விருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதான சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வரது பரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையா னடிக
ளணுகும்வகை கருணைமிக நயக்குங் காலே"

என்பனவற்றான் ஆணவமல தன்மையறிக. படலம் - மறைப்புமாம். உயிர்கள் இறைவனைக் காணமுடியாது இடையே தடுத்து நிற்பது மலமாகலானும் அம்மலமும் நெல்லின்க ணுமியும் செம்பின்கண் களிம்பும் எக்காலத்துள்ள வாயினவென்று ஆராயுங்கால், அந்நெல் லும் செம்பும் உளவாயினவன்றே உள்ளனவன்றி இடைவந்துள வென்பது கூறமுடியாது. அதுபோல மலங்களும் அநாதியேயுள்ளன. ஆகலின் அஞ்ஞானத்தைத் தருகின்ற ஆணவ முதலிய மலக்கூட்

டத்தையும் அழிக்கவேண்டுமென்பார் 'இருண்மலப் படலமுங்கீறி' என்றார். இதனை,

சிவஞானபோதம்

"நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்" எனவும்,

"மாயையெனுந் திரைநீக்கி நின்னையார் காண்கிற்பார்"

எனப் பிறர் கூறுவதானும் உணர்க. உயிருக்கும் கடவுளுக்கும் உள்ள இயைபு மலருக்கும் மணத்திற்கும் உள்ளதுபோல ஒற்றுமையுடைத் தென்றுணர்ந்து நினைப்பதே தகுதியாகலின், 'கந்தமு மலருமென்' என உவமை கூறப்பட்டது. 'காண்பு அறக்காணும்' என்பதற்கு ஊனக்கண்ணாற் காணுதலின்றி ஞானக்கண்ணாற் காண்டல் எனினும் அமையும். ஐம்பொறிகளையும் அந்தக்கரணங்களையும் சரீரத்தையும் வேறு ஆக்கி இருண்மலப்படலமும் அழித்துத் தேவரீரை அடியே னிடத்தில் மணமும் மலரும்போல ஒற்றுமையாகக் காணும் நாள் உண்டாகுமோ என்பார் 'இந்தியம் கரண முடலம் வேறாக்கி யிருண் மலப் படலமுங் கீறிக் கந்தமு மலரு மெனநினை யென்னிற் காண் பறக்காணு நாளுளதோ' என்றார். வந்த + ஒருகளிறு = வந்த வொருகளிறு என வரவேண்டியது வந்தொருகளிறு என வந்தமை யால் அகரம் தொகுத்தல் விகாரம்.

சிவபெருமான் களிற்றைக் கொன்ற வரலாறு:—முன்னொரு காலத்தில் கயாசுரன் என்னும் யானை வடிவேற்ற அசுரன் ஒருவன் மேருமலையின்மேல் பிரமதேவனை நோக்கி அநேககாலம் அருந்தவம் செய்தான். அவன் தவத்திற்கிரங்கிப் பிரமன் அவன் முன் தோன்றி 'உனக்கு என்ன வரம் வேண்டும்' என்று கேட்க, கயாசுரன் நெடுங்காலம் நான் ஜீவித்திருக்கவும் என்னை ஒருவரும் ஜெயிக்க முடியாதிருக்கவும் வரம் வேண்டும். என, பிரமன் அவ்வாறே அவனுக்கு அனுக்கிரகித்து, "ஆனால், சிவபெரு மான்முன் சென்றால் இவ்வரமழியும்" என்று கூறி மறைந்தனன்.

அதுமுதல் அவ்வசுரன் தனக்குற்ற வரத்தினால் மிகவும் தருக்கெய்தி, தேவர்களையும் மனிதர்களையும் துன்பஞ் செய்துகொண்டு வந்தனன். அவ்வசுரனது துயரத்தைச் சகிக்கமுடியாதவர்களான சில முனிவர்கள் காசி க்ஷேத்திரத்தை யடைந்தார்கள். கயாசுரன் முனிவர்கள் காசிப்பதியை அடைந்ததை யறிந்து ஆங்கும் அவர்களைத் தொடர்ந்து பின்செல்ல, அவர்கள் ஆண்டுள்ள மணிகன்னிகை என்னும் சிவாலயத்துட்சென்று அண்ணலைப் பணிந்து தமக்குற்ற அல்லலை அறைய, சிவபெருமான் அடைக்கலம் புகுந்த அருந்தவர்களுக்கு "அஞ்சாதீர்கள்" என்று அபயம் கூறி உக்கிரமான பெரிய வடிவந்தாங்கிப் புறம்போந்து கயாசுரனைத் தமது திருவடியாலுதைத் துத்தள்ள, அவன் விண்முகில்போல மண்மிசை வீழ்ந்தான். சிவபெருமான் தமது திருவடி மற்றொன்றினால் அவன் சிரத்தை மிதித்துத் திருநகங்களாற் பிளந்து அவன் தோலையுரித்து அதனைத் தமது திருமேனியில் ஆடையாகப் போர்த்துக்கொண்டு முன் போலவே ஆலயத்தில் எழுந்தருளி, அம்முனிவர்முதல் அனைவர்கள் அச்சத்தையும் நீக்கி யருளினர். இதனை,

### கந்தபுராணம் - ததீசியுத்தரப்படலம்

"மதித்து வேழமாந் தானவன் வருதலும் வடவை
யுதித்த வன்னியு மச்சுற வெரிவிழித் தொருதன்
கதித்த தாள்கொடு தள்ளவே கயாசுரன் கவிழ்ந்து
பதைத்து வீழ்தலு மிதித்தனன் சிரத்தையோர் பதத்தால்"

"ஒருப தத்தினைக் கவானுறு திருக்கரத் துகிரால்
வெரிநி டைப்பிளந் தீரிரு தாள்புடை மேவக்
குருதி கக்கியே யோலிட வவுணர்தங் குலத்துக்
கரியு ரித்தனன் கண்டுநின் றம்மையுங் கலங்க"

"ஐயன் மிக்கதன் கிரினைக் குருதிநீ ரொரீஇ
மையல் யானைவன் றோலைமேற் கொண்டனன் மலறத்தான்
செய்ய கோனொடு கரியகோ னிருவருஞ் செறிந்து
வெய்ய பானுவி னடுவுறக் கவர்ந்து மேவியபோல்" எனவும்,

கந்தபுராணச்சுருக்கம் - தக்ஷகாண்டம்

"ஈது நின்றிட யானை மேனியொ டூடு கொண்டக யாசுரன்
வேத னல்குவ ரத்தி னூலுயர் விண்ணு மண்ணுமு லைக்கவே
மாத வத்தின ராரு மஞ்சி வளங்கொள் காசியி லோடினார்
பாத கன்னவ ரைத்தொ டர்ந்து படர்ந்து காசிய டைந்தனன்
கண்டு மாதவர் காசி யின்மணி கன்னி யாகிய வாலயத்
தண்டர் நாத னருட் பதத்தி லடைக்க லம்புக வங்கவ
னெண்டி றற்கரி முன்ன ரேகி யுரித்து மேனித ரித்தனன்
றண்ட வாண்மதி போனுதற் பெறு தோகையும் பய மாகவே"

எனவும் வருவனவற்றானறிக. இதுவேயன்றி, இக்கயாசுர சம்ஹாரம் அஷ்டவீரத்து ளொன்றாகக்கொண்டு திருப்பழுவூர் வீரட்டானத்துள் நடந்ததாகக் கூறுவதும் வழக்கம். இதனை,

"பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சந்தர ணிற்குடி மாப்பழுவூர்
காமன் கொறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியிற்
றேமன்று கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே"

என்பதனானறிக. சிவபெருமான் மணிகன்னிகையினின்று தோன்றியபொழுது கயாசுரன் எதிர்க்க, அவனைத் தமது கைச்சூலத்தாற் குத்தி மேலேந்தினரெனவும், அவன் வேண்டுகோளுக் கிரங்கி அவன்றோலை யுடையாகப் போர்த்துக்கொண்டு, அவன் தசையைக் கிருத்திவாசேச லிங்கமாக வுருக்கொள்ளத் திருவருள் செய்தனரெனக் காசிகண்டத்துட் கூறப்பட்டுள்ளது. இதனை,

காசிகண்டம் - கிருத்திவாசேசன் றோன்றிய அத்தியாயம்

"வெருவவீ ரமர ரென்னு விடைக்கொடி யுயர்த்த வெந்தை
கருவரை நடந்த தென்னக் கயாசுரன் வருத னோக்கி
யெரியுமிழ்ந் தூன்வாய் பில்கி யிலகுமுத் தலைய வேலிற்
குருதியார் கலியிற் பொங்கக் குத்திமே லேந்தி னானே"

என்பதனானறிக. இவ்வாறு பலபேதப்படக் கூறியது கற்ப பேதமெனக் கொள்க. கயாசுரனாகிய யானையைத் தேவமானவர்களது துயரத்தை நீக்குதற் பொருட்டுக் கருணைமேலீட்டினால் அவ்வசுர

னிடம் போர்புரிந்து சங்கரித்தமையால், சிவபெருமானுக்குக் கஜயுத்த மூர்த்தி யென்பதொரு பெயர் வழங்குகின்றது. இம்மூர்த்தி அஷ்டாஷ்ட மூர்த்தத்துள் ஒன்று. இதன் விரிவை சிவபராக்கிரமம் கஜயுத்தமூர்த்தியிற் காண்க.

சிவபெருமான் உழுவையைக் கொன்ற வரலாறு:—தாருவன முனிவர் தங்களுடைய தவமே சிறந்ததென்றும், அம்முனிவர்களின் பன்னியர் தங்களுடைய கற்பே யுயர்ந்ததென்றும் கருதியிருத்தலை நீக்க எண்ணிச் சிவபெருமான் பிக்ஷாடன வடிவமும், திருமால் மோகினி வடிவமுங்கொண்டு தாருவன மடைந்தனர். முனிவர்கள் மோகினியைப் பார்த்து தவநிலை குலைந்து காமத்தாற் பிணிக்கப் பட்டனர். முனிவருடைய பன்னியர்கள் சிவபெருமானது பிக்ஷாடன வடிவத்தைக் கண்டு கற்புநிலை குலைந்தார்கள். பின் முனிவர்கள் இவ்வாறு செய்தவர் சிவபெருமானே என்றறிந்து பல சாபங்களை விடுத்தனர்: அவை பயன்படவில்லை. பின்னும் கோபம் மூண்டவ ராகி அபிசாரஹோமம் செய்ய அதினின்றும் புலி, பாம்பு முதலியன தோன்ற, சிவபெருமான் புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாகப் புனைந்தும், அரவைப் பூணாக அணிந்தும், மற்றவைகளை அடக்கியும் அவர்கட்கு அருள் செய்தார் என்பதாம். இதனை,

கந்தபுராணச் சுருக்கம்

"தீதில் மாதர்கள் கற்ப ழித்தவ னைச்செ குத்திடு வோமெனு
மாத ழற்கொண் மகப்பு ரிந்ததின் வந்து வந்துபி றந்திடுங்
காது வெம்புலி பரசு நவ்வி கடும்ப ணித்திரள் பூதர்கண்
மோது வெண்டலை திண்டி றற்றுடி முயல கன்றனை யேவினார்"

"வேங்கை தன்னையு ரித்து டுத்தனன் மிக்க சாரதர் தானையாய்
பாங்கு றும்படி யோதி னானொரு பாத வண்கம லத்தினே
லேங்கு றும்படி முயல கன்றனை யீடி ளேறுமி தித்தனன்
வாங்க ருங்கவி னுற்ற மேனியின் மற்றை யாவு மணிந்தனன்"

என்பதனானுணர்க. தாருவன முனிவர் தவத்தையும், அவர் மனைவி மார் கற்பையும் அழிக்கும்படி பெருமான் திகம்பரராய்ப் பிரமகபாலந்

தாங்கிப் பலியேற்கச் சென்ற கோலமே பிக்ஷா டனமூர்த்தமெனப் பெயர் பெறும். இது அஷ்டாஷ்ட மூர்த்தங்களில் ஒன்று. இதனை,

காஞ்சிபுராணம்

"அடியிற் றொடுத்த பாதுகையு மசைந்த நடையு மிசைமிடறும்
வடியிற் சிறப்ப நடந்தருளி மூழை யேந்தி மருங்கணைந்த
தொடியிற் பொலிதோண் முனிமகளிர் சுரமங் கையரை மயல்பூட்டிப்
படியிட் டெழுதாப் பேரழகாற் பலிதேர் பகவன் றிருவுருவம்"

என்பதனானறிக. தாருவன முனிவர் செய்த அபிசார வேள்வியிற் றோன்றி அவர்கள் ஏவலின்படி வந்த புலியைச் சங்கரித்து உடையாகப் போர்த்த கோலமே சார்த்தூலஹர மூர்த்த மெனப்படும். இம் மூர்த்தமும் அஷ்டாஷ்ட மூர்த்தங்களில் ஒன்று. இதுகாறும் கூறி வந்ததான சிவபெருமான் களிற்றைக்கொன்ற சரிதையையும், சிவபெருமான் உழுவையைக் கொன்ற சரிதையையும் முறையே **சிவபராக்கிரமம் பிக்ஷாடன மூர்த்தியிலும் சார்த்தூல மூர்த்தியிலும்** காண்க. (17)

முழங்குவண் டினங்கள் விருந்துணு மலங்கன்
மொய்குழன் மகளிர்தம் மயலாற்
புழுங்குமென் றனைநின் றிருவடி நிழலிற்
புகவிடுத் தளிக்குநா ளுளதோ
வழங்குவெண் டிரையா றவிர்சடை கரப்ப
மணிமுடி நின்றிழிந் திடல்போற்
றழங்குவெள் ளருவி யிழிந்தொளிர் சோண
சைலனே கைலைநா யகனே.

(**ப-ரை.**) வெள் திரை வழங்கும்-வெண்ணிறமாகிய அலைகளை வீசுகின்ற, ஆறு-கங்கா நதியை, அவிர் சடை கரப்ப-விளங்குகின்ற சடையில் மறைத்து வைக்க, மணிமுடி நின்று இழிந்திடல் போல்-அந்நதி அம்முடியிலிருந்து கீழிறங்குதல்போல, தழங்கு வெள் அருவி-ஒலியைச் செய்கின்ற வெண்மையான அருவிகள், இழிந்து ஒளிர்-கீழே இழிந்து விளங்குகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, முழங்கு வண்டினங்கள் - ரீங்காரஞ்செய்யும் வண்டின் கூட்டங்கள்,

விருந்துணும்-புதிதாக உண்ணுகின்ற, அலங்கல் மொய்குழல் - மலர் மாலையணிந்த கூந்தலையுடைய, மகளிர் தம் மயலால்-பெண்களிடத்துக்கொண்ட மயக்கத்தால், புழுங்கும் என்றனை - மனம் வெதும்புகின்ற அடியேனை, நின் திருவடி நிழலில்-தேவரீருடைய திருவடி நிழலில், புக விடுத்து-செல்லும்படியாகச் செய்து, அளிக்கும் நாள் உளதோ-காப்பாற்றுகின்ற நாளும் உண்டாகுமோ? எ-று.

(வி-ரை.) விருந்து-புதுமை: 'விருந்தே புதுமை' என்பது **தொல்காப்பியம்.** கடுங்கோடையில் வெயில் உடலைச் சுடுதல்போலக் காமமானது மயங்கினவர்களுடைய உளத்தையும் அறிவையும் சுடுமாதலின் 'மயலாற் புழுங்கும் என்றனை' என்றார். இதனை, இந் **நூலாசிரியர்,** 'காம வெட்டையிலே மதிமயங்கும் சிறுவருக்கு மணம் பேசி' என்பதனாலுணர்க. வெயிலால் இளைத்தவர்களுக்கு இன்பந் தருவது நிழல் ஆகலான் வினைவலியால் அலைப்புண்டவர்களுக்கு இன்பஞ் செய்வது திருவடிநிழல் ஆதலால் அத்திருவடி நீழலில் அடியேன் செல்லும்படியாகச் செய்து காப்பாற்றுகின்ற நாளும் உண்டாகுமோ என்பார் 'நின்திருவடி நிழலிற் புகவிடுத் தளிக்கு நாளுளதோ' என்றார். உச்சியிலிருந்து அருவி வீழ்தல், சடைமுடியில் மறைத்த கங்கை நீர்வீழ்ச்சிபோலத் தோன்றுகின்றதென்க. சடைமாத்திரம் மறையாநிற்க கங்காநதி மறைவின்றி அழகிய முடியிலிருந்து ஒழுகுதல்போல் அருவிகள் கீழே இழிந்து விளங்குகின்ற சோணசைலம் என்பார் 'வழங்கு வெண்டிரை யாறவிர் சடைகரப்ப மணிமுடிநின் றிழிந்திடல்போற் றழங்குவெள் ளருவியிழிந்தொளிர் சோணசைலனே' என்றார். சடை காணப்படுதலில்லாது அருவிமாத்திரம் காணப்படுதலால் இங்ஙனம் இயம்பினார். மயல் என்பது மையல் என்பதாகவும் வரும். இவைபோல வருவனவெல்லாம் முதற்போலியின் பாற்படும். அவிர்சடை-வினைத்தொகை. (18)

குன்றுதோ றாடுங் குமரனே யெனவுங்
கொடுஞ்சிலை மதனவே ளெனவும்
புன்றொழின் மனிதர்ப் புகழ்ந்துபாழ்க் கிறைகும
புலமைதீர்த் தெனக்கருள் புரியா

யொன்றொரு தினந்தோட் குட்குழைந் தனமென்
றுருதுநா டொறுமக மேரு
தன்றலை தாழ்ப்ப வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) ஒன்று ஒரு தினம் - முன் திரிபுர மெரிக்கப்புக்க ஒரு நாள், தோட்குஉள்-பரசிவப்பெருமானது தோளுக்குள்ளாக, குழைந் தனம் என்று-வில்லாக வளைந்தோம் என்று, உருது-அம்மாத்திரத் தில் நில்லாது, மகமேரு-பெரிய மேருமலையானது, நாள்தொறும்- எந்நாளும், தன் தலை தாழ்ப்ப - தனது தலையை வளைத்துக் குனியுமாறு, வளர்ந் தெழும் - ஓங்கி வளர்ந்திருக்கின்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, புன் தொழில் மனிதர்-அற்பமாகிய தொழிலையுடைய மனிதர்களை, குன்று தோறு ஆடும் - மலைகள் தோறும் நின்று ஆடல் புரிகின்ற, குமரனே எனவும்-குமாரக் கடவுளே என்றும், கொடுஞ் சிலை-வளைந்த வில்லைத்தாங்கிய, மதன வேள் எனவும்-மன்மதனே என்றும், புகழ்ந்து-துதித்து, பாழ்க்கு இறைக்கும் - வீணிற் போக்குகின்ற, புலமை தீர்த்து - புலமைத் தன்மையை நீக்கி, எனக்கு அருள் புரியாய் - (தேவரீருடைய பெருமையைப் புகழுமாறு) அடியேனுக்குத் திருவருள் புரிவாயாக; எ-று.

(வி-ரை.) திணை-நான்கு. அவை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்த லென்பன; அவற்றுள், மலையும் மலைசூழ்ந்த நிலமும் குறிஞ்சி. காடுங் காடு சார்ந்த பூமியும் முல்லை. வயலும் வயல் சூழ்ந்த நிலமும் மருதம். கடலுங் கடற்கரையும் நெய்தல் என்றறிக. பாலை என ஒன்றுகூட்டி ஐந்து என வழங்குவரே யெனின், “முல்லையும் குறிஞ் சியு முறைமையிற் றிரிந்து, பாலை யென்பதோர் படிவம் கொள்ளும்” என்றபடி, குறிஞ்சியும் முல்லையும் கூடியவழிப் பாலை யாதலின் அது சிறப்பிலதாயிற்று. குறிஞ்சித் திணைக்குரிய கடவுள் முருகப் பெருமானே என்ப துணர்த்தக் “குன்றுதோ றாடுங் குமரன்” என் றார். மேலும் ஆறு படைவீடுகளில் குன்றுதோறாடலும் ஒன்றாகலின் ‘குன்று தோறாடுங் குமரன்’ என்றார் எனினும் அமையும். கொடுஞ் சிலை-கருப்புவில். வேள்என்பதற்கு-வேட்கை யுண்டாக்குபவன் என்று

பொருள். எனவே, வேள் என்பது முருகக்கடவுளையும் மன்மதனை யும் குறிக்கும் பொதுப்பெயர். ஆதலின் அப்பெயரின் முன் அடைமொழி தந்து வழங்குகின் இருவரி லொருவரென்று உணர்ந்து கொள்ளுதல் எனவே, முதலில் 'குன்று தோறாடுங் குமரனே' என்று கூறிவிட்டது மன்றி 'கொடுஞ்சிலை மதன வேள்' எனக்கூறி மன்மதன் என்பது புலப்படுத்தினார். மனிதர்களைக் குமரனென்றும் மதனவேளென்றும் புகழ்தலாற் பெறத்தக்க பயன் சிறிது மில்லை யாகலானும், உளவாயினும் அப்பயனும் நிலையாமையுடைத் தாகலானும் 'மனிதர்ப் புகழ்ந்து பாழ்க் கிரைக்கும் புலமை' என்றார். மனிதரைப் புகழ்தல்கூடா தென்பதும், இறைவனைப் புகழ்தல் இம்மை மறுமை யின்பங்களை அளிக்கும் என்பதும்,

### தேவாரம்

"தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ்சார்விலுந்தொண்டர்தருகிலாப்
பொய்ம்மையாளரைப்பாடாதேயெந்தைபுகலூர்பாடுமின்புலவீர்காள்
இம்மையேதருஞ்சோறுங்கூறையுமேத்தலாமிடர்கெடலுமாம்
அம்மையேசிவலோகமாள்வதற்கியாதுமையுறவில்லையே."

என்னும் திருப்பதிகத்தா லுணர்க. குன்றுதோறும் என்ற இடத்தில் தோறும் என்பது இடப்பன்மை யுணர்த்துவதோ ரிடைச்சொல். இளமையும் அழகும்பற்றிக் குமரனும், வேளும் உவமையாக்கப் பட்டனர். முருகன்-கட்டிளமையுடையோன். மனிதர்ப் புகழ்ந்து என்பது 'பொதுப்பெய ருயர்திணைப் பெயர்களீற்று மெய்' என்னும் சூத்திரப்படி முடியாது இயல்பாகவேண்டிய இடத்து விகாரமாயிற்று; இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சி இயல்பின் விகாரம். 'மகமேரு தன்றலை தாழ்ப்ப' என்றது சோணைசலம் மேருவினும் உயர்வுடைய தென்ப துணர்த்துதற்கென்க. திரிபுர சங்கார காலத்தில் 'வலியிலே தோற்றுக் குழைவுற்றோம், இப்பொழுது வடிவிலே தோற்றுச் சிறுமை யுற்றோம்' எனத் தினமும் வெட்கத்தால் மேருதலை குனிந்து நிற்க, அதிக உன்னதமாக வளர்ந்தோங்கிய சோணைசலம் என்பார் 'ஒன்றொரு தினந்தோட்குட் குழைந்தன மென்றுருது நாடொறு மகமேரு தன்றலைதாழ்ப்ப வளர்ந்தெழுஞ் சோணைசலனே'

என்றார். குறிஞ்சித் திணைக்குக் கடவுள் முருகப்பெருமான் என்று கூறவே, மற்ற திணைகட்கும் கடவுளர் உண்டெனக் கொள்க. இதனை,

இரத்தினச் சுருக்கம்

"காடாகு முல்லை கழிநெய்த லாகுங் கல்லாங் குறிஞ்சி
நாடா மருத நடலைவெம் பாலையிந் நாட்டிற் றெய்வங்
கோடார் காவருணன் குக னிந்திரன் கூறு துர்க்கை
மாடாயர் மீன் புல்லர் குன்றவர் கானவர் மள்ளருமே"

என்பதனானறிக. (19)

வெண்டிரு நீறு புனையுமா தவர்க்கு
விருந்துசெய் துறும்பெரு மிடியுங்
கொண்டநல் விரதத் திளைக்கும்யாக் கையுமிக்
கொடியனேற் கருளுநா ளுளதோ
வண்டுழுங் குவளை மலர்தடஞ் சுனையின்
மற்றைவா னவர்க்குரித் தன்றிச்
சண்டியுண் மகிழ்ந்து கொளமலர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) தடஞ்சுனையில்-பெரிய நீர்ச்சுனைகளில், வண்டு உழும் குவளைமலர் - வண்டுகள் மொய்க்கின்ற நீலோற்பலமலர்கள், மற்றை வானவர்க்கு உரித்து அன்றி-மற்றைய தேவர்கட்கு உரியனவாகாமல், சண்டி உள் மகிழ்ந்து - சண்டேசுரநாயனார் மனமகிழ்ந்து ஏற்றுக் கொள்ளும்படி, மலர்-பூக்கப்பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, வெண்திரு நீறு புனையும் - வெண்ணிறமான விபூதியை அணிந்திருக்கிற, மாதவர்க்கு-பெருமை பொருந்திய தவத்தையுடைய அடியவர்களுக்கு, விருந்து செய்து-திருவமுது செய்வித்து, உறும் பெரு மிடியும் - அதனால் உண்டாகின்ற பெரிய தரித்திரமும், கொண்டநல் விரதத்து - கைக்கொண்ட நல்ல விரதங்களால், இளைக்கும் யாக்கையும்-மெலிவடைகிற உடம்பும், இக்கொடியனேற்கு-இக்கொடியேனாகிய அடியேனுக்கு, அருளும் நாள் உளதோ-கொடுத்தருளும் நாளும் உண்டாகுமோ? எ-று.

(வி-ரை.) செந்நிற விபூதி முதலியன அணிவதனால் நன்மை யுண்டாகாது; அன்றித் தீமையும் சிகழுமாதலின் அவற்றை யணிதல் கூடாதாகலானும், வெண்ணிற விபூதியே புண்ணியத்தை யளிக்கு மாகலானும் 'வெண்டிரு நீறு புனையு மாதவர்' என்றார். விபூதியைப் பற்றி பஸ்மஜாபாலர், பிருகஜ்ஜாபால முதலிய உபநிடதங்களின் மாத்திரமன்றி உத்தரமீமாம்சை எனப்படும் வேதாந்த சூத்திரத் திற்கு முக்கிய ஆதாரமாயுள்ள உபநிடதங்களுள்ளேயும் விபூதியைப் பற்றிக் கூறியிருக்கிறது. விபூதியைப்பற்றி உரைக்காத உபநிடதங் கள் இல்லை; விபூதியைப் பற்றிப் புகழாத புராணங்கள் இல்லை; எல்லா நூல்களிலும் விபூதியைப் பற்றி கூறியுள்ளது.

நாலாயிரப் பிரபந்தம்

"கரியமேனி மிசை வெளியநீறு சிறிதேயிடும்" என்றும்,

"நீறு செவ்வேயிடக் காணினெடு மாலடியா ரென்றோடும்"

என்றும் கூறுமாயின், விபூதியின் மகிமையை யாரே புகழ வல்லார்!

விபூதி, நீறு, பசுமம் (பற்பம்) பசிதம், சாரம், இரக்ஷை எனத் திருநீற்றிற்கு ஐந்து பெயர் உண்டு. வி-மேலான, பூதி-ஐசுவரியம். எனவே, தன்னைத் தரித்தவர்க்கு அழிவில்லாத மேலாய ஐசுவரி யத்தைக் கொடுத்தலால் விபூதியெனப் பெயர் பெற்றது. ஈண்டு ஐசுவரிய மென்பது முத்திப் பேற்றினையேயாம். அதுவே மேலான ஐசுவரியம் எனப்படும். பாவங்களை யெல்லாம் நீறாக்கலால் நீறெ னவும், பசுமம், பற்பம் எனவும் சொல்லப்படும். அறியாமை அழியு மாறு சிவஞானமாகிய சிவத்துவத்தை விளக்கலாற் பசித மெனப் படும். உயிர்களது மலத்தைக் கழுவுதலாற் சாரம் எனப்படும். ஆன்மாக்களைத் துன்பத்தினின்றும் நீக்கி இரக்ஷித்தலால் இரக்ஷை (இரக்கை) எனப்படும். இதனை,

சித்தாந்த சிகாமணி

"பூதியெனப் படுஞ்செல்வ வேதுவினாற் சிவமாகும்
பொருடி கழ்த்து
மேதுவினிற் பசிதமிகு பாவங்க டம்மையச்சத்
திசைத்த லாலே

யோதலுறும் பற்பமெ‌ன விடரிடைநின் றகற்றுதலா
லொன்றுஞ் சாரந்
தீதகல வினைவரையு மளிப்பதனு லிரக்கையெனச்
செப்பு நூலே" எனவும்,

பேநர்ப்புராணம்

"நீட லுறுந்தீ வினையனைத்து நீற்றி விடலா னீறென்றும்
வீடில் வெறுக்கை தருதலினுல் விபூதி யென்று முயிர்தோறும்
கூடு மலமா சினைக்கழுவுங் குலத்தாற்சார மென்று மட
மோட வளர்சோதி யைத்தரலாற் பசித மென்று முரைப்பாரால்"

எனவும் வருமாற்ற னறிக.

இக்காரணம் அன்றி, வேறு காரணத்தானும் விபூதிக்குப் பெயர்ப்பாகுபாடுண்டு. சிவபெருமானுடைய ஐம்முகங்களினின்றும் தோன்றிய ஐவகைப் பசுக்களுள் சத்தியோசாத முகத்திற் றேன்றிய கபிலவர்ணமுடைய நந்தையினிடத் துண்டாயதற்கு விபூதி என்றும், வாமதேவ முகத்தினின்று முதித்த வெண்ணிறமுடைய பத்திரை யென்னும் பசுவினுண்டாயதற்குப் பசிதம் என்றும், அகோர முகத்தி னின்று முற்பவித்த கருநிறச் சுரபியிடத்துப் பிறந்ததற்குப் பஸ்பம் (பற்பம்) என்றும், தற்புருடத்திற் றேன்றிய புகைநிறச் சுசீலையினிடத்தில் உண்டாயதற்கு க்ஷாரம் (சாரம்) என்றும், ஈசான முகத்திற் பிறந்த சிவப்புநிறச் சுமனையிடத்தில் விளைந்ததற்கு இரக்ஷை (இரக்கை) என்றும் சொல்லப்படும். இதனை,

வீராகமம்

"சத்யோ சாதாத் விபூதிச்ச
வாமாத் பசித மேவச
அகோராத் பஸ்ம ஸம்ஸாதத்
புருஷாத் க்ஷார நம"

எனவரும் சுலோகங்களானுணர்க. திருநீற்றின் மகிமையை வேதாகம புராணாதிகள் முழங்குவதுமன்றி, பரமாசாரிய மூர்த்திகளான

சைவசித்தாந்தத் தலைவர்கள் நால்வராலும் விடாது வற்புறுத்தி வழுத்தப்பட் டிருக்கின்றது. அவைகளுட் சில வருமாறு:—

“மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவால வாயான் றிருநீறே”

என்று ஆளுடைய பிள்ளையாரென்னும் **திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநீற்றுத் தேவாரப் பதிகத்தா**னும்,

“எவரேனுந் தாமாக விலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
யுவராதே யவரவரைக் கண்ட போது
வுவந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி
யிவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி
யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே”

என வாகீசமுனிவ ரவதாரமாகிய **திருநாவுக்கரசு சுவாமிகள் தேவார**த்தானும்,

“செம்பொன் மேனி வெண்ணீ றணிவானைக்
கரிய கண்டனை மாலயன் காணாச்
சம்புவைத் தழலங் கையி னானைச்
சாம வேதனைத் தன்னொப் பிலானைக்
கும்பமா கரியின் னுரி யானைக்
கோவின் மேல் வருங்கோ வினைநங்க
ளம்பனை நள்ளா றனைய முதே
நாயினேன் மறந் தென்னினைக் கேனே”

என்று **சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவார**த்தானும்,

“பிணியெலாம் வரினு மஞ்சேன் பிறப்பினோ டிறப்பு மஞ்சேன்
றுணிநிலா வணியி னான்றன் றொழும்பரோ டழுந்தி யம்மா

றிணிநிலம் பிளந்துங் காணாச் சேவடி பரவி வெண்ணீ
றணிகிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே"

என்று மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தானும் விபூதி யின் மஹாத்மியம் கூறப்பட்டிருத்தலினாலும், மிக்கதவமுடைய அன்பர்க்கு திருவெண்ணீ றணிந்துகொள்ளுதல் முக்கிய மாதலினா லும்,திருவெண்ணீ றணியார் தவமுடையவர்களல்லர் எனவும் குறிப் பிப்பான் வேண்டி 'வெண்டிரு நீறு புனையு மாதவர்' என்றார் எனினும் அமையும். இதனை,

சிவஞானபோதம்

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே" எனவும்,

திருப்பல்லாண்டு

"சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங்
கொங்கையிற் குங்குமம்
போலும் பொடியணி மார்பிலங்கு மென்று
புண்ணியர் போற்றிசைப்ப"

எனவுங் கூறுமாற்றானறிக. எவராகிலும் சிவசாதனந் தாங்குவா ராயின், அவரை யெதிரே பணிந்து, அவரே நம்முடைய பிறவியை யறுக்கத் திருவுருவமெடுத்த சிவபெருமானென்று, நீங்காத அன் புடன் அவரை வழிபட்டு அருச்சித்து, அறுசுவை யமைந்த திரு வமுதை யுண்பிக்க வேண்டுவது முறையாகலானும், உருத்திர சாதனங் கண்டோரை அருச்சித்தலும் அவர்க்கு அறுசுவையுண்டி உண்பித்தலும் சிவபெருமானுக்குச் செய்ததை ஒக்கும். ஆதலானும், 'வெண்டிருநீறு புனையுமாதவர்க்கு விருந்துசெய்து' என்றார். இதனை,

**திருவிளையாடற்புராணம்**

"எவரேனு முருத்திராசா தனங்கண்டா லெதிர்வணங்கி
யவரேசம் பிறப்பறுக்க வடிவெடுத்த வரனென்று
கவராத வன்புள்ளங் கசிந்தொழுக வருச்சித்துச்
சுவையாறி வமுதருத்தி யெஞ்சியவின் சுவைதெரிவான்" எனவும்,

**தேவாரம்**

"சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ
மாதேவர்க் கேகாந்த ரல்ல ராயின்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யாரா
யாவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனுங்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகி
லவர்கண்டீர் யாம்வணங்கும் கடவு ளாரே" எனவும்,

**சிவதருமோத்திரம்**

"அருத்துக வமலன் றன்னை யகத்துணர்ந் தவரை யன்னங்
கருத்திருந் தவர்க்குச் செய்த பூசனை கடவுள் கொள்வான்
ஒருத்தனுக் குபசா ரங்க ளுடலிடை யுலகர் செய்வர்
பிரித்துட லுயிரைப் பேணும் பெற்றியை யாரே பெற்றார்"

எனவும் வருவனவற்றா னுணர்க. தரித்திரம் உலகினரால் விரும்பப் படாததா யிருந்தாலும் வெண்ணிற விபூதியைத் தரிக்கும் மிக்க தவமுடைய அன்பர்களுக்குத் திருவமுது செய்வித்து அச் செல வினால் உண்டாகும் பெரிய தரித்திரம் வேண்டுமென்பார் 'வெண் டிருநீறு புனையு மாதவர்க்கு விருந்து செய்துறும் பெரு மிடியும்' என்றார். தேகம் மெலியாமை உலகினரால் விரும்பப்படாததா யிருந்தாலும் நல்ல விரதானுஷ்டானங்களை மேற்கொண்டு அவ் விரதானுஷ்டானங்களாலேயே மெலியும் சரீரம் வேண்டுமென்பார் 'கொண்டநல் விரதத் திளைக்கும் யாக்கையும்' என்றார். இச்சோண சைலம் சிவபெருமானுடைய திருவுருவமேயாகலின், அந்த மலையின்

மேல் மலராத மலர்கள் நிர்மாலியமாகலின் ஏனைத் தேவர்களுக்கு உதவாது, சண்டேசுர நாயனார் மனமகிழ்ந்து தரித்துக்கொள்ளும்படி மலர்கின்றன வென்பார் 'மற்றை வானவர்க் குரித்தன்றி சண்டியுண் மகிழ்ந்து கொளமலர் சோணசைலனே' என்றார். 'சண்டியுண்' என்பது சில பிரதிகளில் 'தண்டியுண் மகிழ்ந்து' என்றும் காணப்படும். ஆகலின் பாடபேதம் என்க. சண்டேசுர நாயனார் சரிதையைப் பெரிய புராணத்திலும் சிவபராக்கிரமம் சண்டேசாநுக்ரஹ மூர்த்தியிலும் காண்க (20)

வந்துமா மறலி யெனதுயி ருண்பான்
மயிலையுண் சிரலினிற் கின்றான்
முந்திநீ யென்னையா னந்தவா ரிதியின்
மூழ்குற விடுத்தருள் புரியாய்
நந்துமா மலையே யென்றுசா திப்ப
நனைமலர் வேங்கையு மசோகுஞ்
சந்துமேன் முளைப்பச் செய்துகொள் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) நந்தும் மாமலையே என்று-உயர்ந்து வளர்ந்திருக்கின்ற பெரியமலையே யென்று, சாதிப்ப - அறிவில்லாதவர்கள் உறுதியாகக் கூறும்படி, நனைமலர் வேங்கையும் அசோகும் சந்தும்-அரும்புகளையும் மலர்களையும் உடைய வேங்கை அசோகு சந்தனமாகிய இம்மரங்கள், மேல் முளைப்பச் செய்து கொள்-மேலே தோன்றும்படி செய்து கொள்ளுகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, மாமறலி-கரிய உருவத்தையுடைய இயமன், வந்து-கோபித்து வந்து, எனது உயிர்-அடியேனுடைய உயிரை, உண்பான்-கவரும்படி, மயிலை உண்-மீனைப்பிடித்து உண்ணுகின்ற, சிரலின் - மீன்குத்திப் பறவைபோல, நிற்கின்றான்-அடியேனையே நோக்கி நின்றுகொண் டிருக்கின்றான், முந்தி-அவன் அடியேன் உயிரைக் கவருமுன், நீ-தேவரீர், என்னை-அடியேனை, ஆனந்த வாரிதியில் - இன்பமாகிய கடலில், மூழ்குற விடுத்து - முழுகும்படியாகச் செய்து, அருள் புரியாய்-அருள்செய்வீராக; எ-று.

(வி-ரை.) மீன்கள் ஜலத்திலிருந்து மேலேகிளம்புஞ் சமயம் பார்த்து மீன்குத்திப் பறவை விரைந்து அதனைப் பிடித்துக் கோடல் போல, இயமனும் அடியேனைப் பிடிக்கக் காத்துக்கொண் டிருக்கின்றனன். மீனானது ஜலத்தில் முழுகி விடுமாயின், அப்பறவையாற் கவரமுடியாமை போல, அடியேனும் ஆனந்த வாரிதியில் மூழ்குவேனாயின் இயமனும் என்னைப்பிடிக்கும் ஆற்றல் இலனாவன். ஆகலின் அவ்வாரிதியில் முழுகுமாறு அருள்புரிவீராக வெனச் சிவபெருமானை வேண்டுகின்றார் என்பது கருத்து.

உண்பான் என்பது எதிர்காலத்தெரிநிலை வினையெச்சப்பகுபதம். உண் என்னும் பகுதியும், பான் என்னும் எதிர்கால வினையெச்ச விகுதியும் கொண்டு முடிந்தது; எதிர்காலத் தெரிநிலை வினைமுற்றுப் பகுபதமாயின், உண் என்னும் பகுதியும், ஆன் என்னும் ஆண்பால் விகுதியும் அவைகளுக்கு இடையே எதிர்காலம் காட்டும் பகரவிடைநிலையும் பெற்று, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திர விதியால் இடைநிலைப் பகரமெய்யின் விகுதி ஆகார வுயிரேறி முடிந்ததாகக் கொள்க. மயிலையுண்-இரண்டாம்வேற்றுமைத்தொகை. 'நந்துமா' என்பதற்குப் பதிலாக 'நந்துளான்' எனச் சில பிரதிகளிற் காணப்படும். ஆகலின், 'நந்துளான்' என்றும் பாடம் சென்ற பாடலின் ஈற்றடியில் தண்டியெனப் பாடபேத மிருப்பதாக யாம் கூறியவாறு நந்துளான் என்பதும் பாடபேதம் என்றறிக. அங்ஙனமாயின் 'நந்துளான்' என்பது திருமாலைக்குறிக்கும். நனை-தேனுமாம். 'மலையே' என்பதில் ஏகாரம் பிரிநிலையும் தேற்றமுமாம். (21)

பூமழை யமரர் பொழியமா தவர்கட்
புனன்மறு கிடைப்பொடி யடக்கத்
தூமொழி மனைநீ தூதுபோம் பயனில்
சொற்பதர் புடைத்திளைக் கின்றேன்
யாமுணர் மிகுபே ருருவமாய் வரினு
மிருவரு முணர்த்திடி னன்றித்
தாமுணர் கிலரென் றெழுந்துயர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) யாம் - அடியேங்கள், உணர் மிகுபேர் உருவம் ஆய் - எல்லோரும் எளிதின் அறியக்கூடிய மிகுந்த பெரிய உருவமுடையே மாய், வரினும்-தோன்றினாலும், இருவரும்-அரியும் பிரமனுமாகிய இருவர்களும், உணர்த்திடின் அன்றி-உள் நின்று அறிவித்தாலன்றி, தாம் உணர்கிலர் என்று-தாமாகவே அறியும் வன்மையில்லார் என்று, எழுந்து உயர்-(அதனைப் புலப்படுத்தும் பொருட்டே) ஓங்கி வளர்ந் திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, அமரர் பூமழை பொழிய - தேவர்கள் மலர்மாரி பொழியவும், மாதவர் கண் புனல்- பெரிய தவத்தினையுடைய அடியார்களுடைய கண்களில் தோன் றிய ஆனந்தக்கண்ணீர், மறுகு இடை பொடி அடக்க-வீதிகளிற் பரந் திருக்கின்ற புழுதியை அடக்கவும், தூமொழி மனை - தூய்மையான சொற்களையுடைய பரவையார் மாளிகைக்கு, நீ தூதுபோம்-தேவரீர் (ஆரூரல் ஊடல் தீர்க்குமாறு) நள்ளிரவில் தூதாகப் போகக்கூடிய, பயன் இல்-அத்துணைப் பயனில்லாத, சொல்பதர்-சொற்களாகிய பதர் களை, புடைத்து - தூற்றித் தூற்றி (யாதொரு பயனுங் காணுமல்), இளைக்கின்றேன்-மெலிவடைகின்றேன்; எ-று.

(வி-ரை.) சிவபெருமான் திருமால் முதலிய தேவர்களாலும் அறியக்கூடாத பெருமையுடையவனாயினும், அடியார்க்கு மிக எளிய னாந் தன்மையுடையனாகலின் ஆரூரர்பொருட்டுப் "பரவை வாயிலிற் பாயிருள் நடுநாள், ஒருகா லல்ல இருகால் நடந்தும், எளியரின் எளியராந்" தன்மையை விளக்கினார் என்க. நம்பியாரூரர் திரு மொழிகள் மிக்க ஆற்றலுடையனவாதலும், தம்முடைய மொழிகள் பயனிலவாதலும் ஆகிய இரண்டனையும் இப்பாடலில் விளக்கி யிருத்தல் காண்க. தம்முடைய சொல்லைப் பதர் என்றமையின், அதற்கியையப் புடைத்தெனக் கூறினார். மாதவர் - பெரிய தவத் தினையுடைய அடியார்கள். அடியார்களுக்கு தவம் முக்கியம் என்க. தவத்தின் சிறப்பை,

கந்தபுராணம்

"தவந்தனின் மிக்கதொன் றில்லை தாவில்சீர்
தவந்தனை நேர்வது தானு மில்லையால்

தவந்தனி னரியதொன் றில்லை சாற்றிடில்
தவந்தனக் கொப்பது தவமே தாகுமே"

காஞ்சிப்புராணம்

"தவமே மேலா நெறியாகும்
தவமே சிவனார் தமைக்காட்டுந்
தவமே துறக்க மடைவிக்குந்
தவமே நரனைத் தேவர்க்குந்
தவமே வலாரி திசைக்கிறைவர்
சார்ங்க னயனு மாக்குவிக்குந்
தவமே கிடைப்பிற் கிடையாத
துண்டோ வென்று சாற்றினனால்" எனவும்,

கந்தபுராணச் சுருக்கம்

"மாதவ மெழிற்பெருமி லனைத்தினு மினித்தான்
மற்றது குயிற்றிடின் மனத்திடை நினைத்த
தேதையு மளித்திடு மிடர்ப்பவ மறுக்கு
மின்பமுறு நற்கதியு மீயுமிதின் மிக்க
தோதிடி லியாது மிலை"

எனவும் கூறியுள்ளனவற்று னறிக. (22)

கழைமொழிக் கொடியோர் சேவல்செய் துடலங்
கமருகு மமிழ்தின்மங் குறுமல்
விழைவறத் துறந்துன் றிருவடிக் கமலம்
விழைகுநர்க் கேவல்செய் திலனே
மழைமதக் களிநல் யானைமத் தகம்பாய்
வள்ளுகி ரோடுசெல் லரிமாத்
தழைசிறைச் சிம்புள் கொண்டெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை)** மழை மதம்-மழைபோல மதநீரைப் பொழியும், களிநல் யானை-செருக்கையுடைய நல்லியல் அமைந்த யானையினது, மத்தகம் பாய்-மத்தகத்தினிற் செலுத்திய, வள் உகிரோடு - கூர்மையான நகங்க

ளுடன், செல் அரிமா-செல்லுகின்ற சிங்கத்தை, தழை சிறை சிம்புள்-தழைந்த சிறகுகளையுடைய சிம்புட் பறவையானது, கொண்டு எழும்-தூக்கிக்கொண்டு மேலே செல்லுகின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, கழை மொழி கொடியோர்க்கு-கருப்பஞ்சாறு போன்ற சொற்களையுடையும், பூங்கொடிபோன்ற மென்மையையுமுடைய மக ளிர்க்கு, ஏவல் செய்து-தொண்டு புரிந்து, உடலம் - அருமையாகப் பெற்ற இம்மக்களுடம்பு, கமர் உகும் - வெடிப்பு நிலத்திலூற்றிய, அமிழ்தின்-பால்போல, மங்குறுமல்-வீணுகப் போகாதபடி, விழைவு அற-உலக ஆசைமுழுதும் நீங்க, துறந்து - ஒழித்து, உன் திருவடிக் கமலம் - தேவரீருடைய திருவடித் தாமரைகளை, விழைகுநர்க்கு-விரும்பிநிற்கும் அடியார்களுக்கு, ஏவல் செய்திலனே-தொண்டு செய் யாதவனுயினேன் என் செய்வேன்; எ-று.

(வி·ரை.) கருப்பஞ்சாறு உண்பவர் நாவிற்கு இனிமைபயத்தல் போல மகளிர் மொழியும் அன்புடையார் செவிக்கு இன்பம் பயத்த லின், 'கழை மொழி' என்றார். கொடியோர் என்பது கொடுமை யுடையாரென்னும் பொருளும் தோன்ற நின்றது. இதனை,

பட்டினத்தார்

"பெண்ணுகி வந்தொரு மாயப்பிசாசம் பிடித்திட்' டென்னைக்
கண்ணுல் வெருட்டி முலையான் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணுங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க
எண்ணு துனைமறந் தேனிறை வாகச்சி யேகம்பனே"

"நாவார வேண்டு மிதஞ் சொல்லுவாருனை நான்பிரிந்தாற்
சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்கள்கை தான்வறண்டாற்
போய்வாரு மென்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக்
கீவார் தலைவிதி யோவிறை வாகச்சி யேகம்பனே" எனவும்,

திருவிளையாடற்புராணம்

"இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியா நோயாற்
கழிபவர் யாவ ரேனுங் கண்வலைப் பட்டு நெஞ்ச [காட்டிப்
மழிபவர் பொருள்கொண் டெள்ளுக் கெண்ணெய்போ லளந்து
பழிபடு போகம் விற்பா ராவணப் பண்பு சொல்வாம்"

"மெய்படு மன்பி ஞர்போல் விரும்பினர் கருத்தூத் தங்கள்
பொய்படு மின்பம் யார்க்கும் புலப்படத் தேற்றுவார் போன்
மைபடு கண்ணூர் காமன் மறைப்பொருள் விளங்கத் தீட்டி
கைபடச் சுவராய்த் தோன்றச் சித்திரங் காணச் செய்வார்."

"திருவிற்கான் மணிப்பூ ணூகம் பலசைபாத் தெண்முத் தார
வருவிக்கால் வரைமென் கொங்கைச் சூதொட்டி யாடி வென்று
மருவிக் காமுகரைத் தங்கள் வடிக்கண்வேன் மார்பந் தைப்பக்
கருவிச் சூதாடி வென்றுங் கைப்பொருள் கவர்தல் செய்வார்"

எனவும்,

கலிங்கத்துப்பரணி

"தங்குகண் வேல் செய்த புண்களைத்
தடமுலை வேது கொண் டொற்றியுஞ்
செங்கனி வாய் மருந் தூட்டுவீர்
செம்பொ னெடுங் கடை திறமினோ"

எனவும் வருமாற்றானறிக. கொடியோர்க்கு ஏவல் செய்யின் விளை வது துன்பமாகலின், 'மங்குறாது' என்றும்,

தாயுமானவர்

"அன்பர்பணி செய்யவென்னை யாளாக்கி விட்டுவிட்டா
லின்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே"

எனக்கூறியபடி அன்பர்க்குப் பணிபுரிதல் நலம் பயக்குமாதலின் 'செய்திலனே' என்றும் கூறினார்.

"அரிதுஅரிது மானிடராய்ப் பிறத்த லரிது" எனவும்,

"மக்களாக் கையிற் பிறத்தலே யரிது" எனவும்,

கூறியுள்ளபடி அறிதிற் பெற்ற இவ்வுடலைக் கமரிலூற்றிய அமிர்தம் போற் பாழ் படுத்தாமல், அடியார்க்கு ஏவல் செய்து உய்யவேண்டு மென்பது கருத்து. உடலம் என்பதில் அம் சாரியை. நல்யானை என் பது உத்தம இலக்கணமமைந்த எழுமுழ முயர்ந்த அரசயானைகளை யென்க. இதனை,

திருவிளையாடற்புராணம்

"பளிக்கி னேழுயர் களிறு" எனவும் கூறுவர்.

சிம்புள் என்பது சரபம். அது சிங்கத்தைக் கொல்லும் ஆற்றல் உடையது. விஷ்ணுமூர்த்தி நரசிங்காவதாரம் எடுத்து இரண்ய கசிபுவை உயிர்மாய்த்து அவன் உதிரத்தை அருந்திய வெறியால் அவனிமாக்களை வருத்த தேவர் வேண்டுகோளுக் கிணங்கிச் சிவபெருமான் இருசிரமும், இணையில்லாச் சிறகும் கூரிய நகமு முடைய எட்டுக்காலும் நெடியவாலும் பேரிறைச்சலும் கடுங்கோப முங்கொண்ட சரபத் திருவுருவத்துடன் நரசிங்கத்தை நண்ணி இடிமுழக்கம்போ லிரைந்து உதிரவெள்ளம் ஊற்றெடுத்தோடச் சிங்கச் சிரசையும் கைகளையும் தறித்துத்தள்ளி மேலுட்காந்து சிங்கத்தின் சருமத்தை யுரித்துத் திருமேனி மேற்போர்வையாகக் கொண்டு திருக்கைலை யடைந்தனர். விஷ்ணு பண்டைய உணர்வு தோன்ற, சிவபெருமானைப் பூசித்து நரசிங்கபுராணம் ஓதி வைகுந்த மடைந்தார்.

காஞ்சிப்புராணம்

"கன்ற விரண்டு திருவடியு
கனிநீள் வாலு முகமிரண்டுங்
கொன்றார் சிறகு முருத்திரமுங்
கொடும்பே ரார்ப்பு மெதிர்தோன்றச்
செந்நீர் பருகிச் செருக்குநர
மடங்க லாவி செகுத்துரிகொண்
டொன்றார் குலங்கள் முழுதழித்த
வுடையான் சரபத் திருவுருவம்"

இதன் விரிவை சிவபராக்கிரமம் ஸிம்ஹக்ந மூர்த்தியிற் காண்க. உத்தம இலக்கணமமைந்த அரச யானையினது மத்தகத்திலே பாய்ந்த நகத்தோடு அதனை யூர்ந்து செல்லும் சிங்கத்தை அந்த யானையோடு சரபம் கொண்டு செல்லும்படியான சாரலையுடைய சோணசைலம் என்பார், 'மழைமதக் களிநல்யானை மத்தகம்பாய் வள்ளுகிரோடு செல்லரிமாதழை சிறைச்சிம்புள் கொண்டெழுஞ் சோணசைலனே' என்றார். கழைமொழி - முதலாகுபெயர். "தாமரைபுரையும் காமர் சேவடி" என்பதுபோல, அரிமா என்பதில் அரி என்னும் சிறப்புப்

பெயரும், மா என்னும் பொதுப்பெயருமமைந்து இவைகளின் இடையில் பண்போடு பண்புக்கு உளதாகிய ஒற்றுமை நயத்தை விளக்குதற்கு வரும் ஆகிய வென்னும் பண்புருபு தொக்குநிற்பதால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை: சாரைப்பாம்பு என்பதைப்போல. உடலம் என்பதில் 'அம்' சாரியை: மன்று - 'மன்றம்' என்பன போல. (23)

கார்தரு சுருண்மென் குழற்சிறு நுதற்பூங்
கணைபுரை மதரரிக் கருங்கட்
டார்தரு குவவுக் கொங்கைநுண் மருங்குற்
றையலார் மையலென் றொழிவேன்
சீர்தரு மணியி னணிந்தன வெனக்கட்
செவியுமொண் கேழலின் மருப்புஞ்
சார்தரு முலக விளக்கெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) சீர்தரும் அணியின் - சிறப்புப் பொருந்திய ஆபரணமாக முன் அணிந்ததுபோல, அணிந்தன என-இம்மலையுருவத்தும் அணிந்திருக்கின்றனவென்று சொல்லும்படி, கட்செவியும் ஒண்கேழலின் மருப்பும் - பாம்பும் அழகிய பன்றிக் கொம்பும், சார் தரும்-மேலே தங்கி யிருக்கப்பெற்ற, உலக விளக்கு என்னும்-உலகிற்கே ஒரு தீபம் என்னக் கொண்டாடப்பெற்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, கார் தரு-மேகம்போன்ற, சுருள் மென்குழல்-சுருண்டிருக்கின்ற மிருதுவான கூந்தலையும், சிறுநுதல்-குறுகிய நெற்றியையும், பூங்கணை - (மன்மதனுடைய) மலரம்புகளை ஒத்திருக்கின்ற, மதர் அரி கருங்கண் - செழுமை பொருந்திய இரேகை படர்ந்த கருமையான கண்களையும், தார்தரு-மாலையணிந்த, குவவு கொங்கை-குவிந்த தனங்களையும், நுண் மருங்குல் - நுண்ணிய இடையையும் உடைய, தையலார் மையல்-மகளிரிடத்துக் கொண்ட மயக்கத்தை, என்று ஒழிவேன்-எந்நாளில் நீங்கப் பெறுவேன்? எ-று.

(வி-ரை.) மகளிர்க்கு நுதல் குறுகியிருத்தல் உத்தம இலக்கணமாகலின், 'சிறுநுதல்' என்றார். கட்செவி - பாம்பு. கண்ணையே

செவியாக உடைமையின் இப்பெய ரேற்றது. தையலார் மயக்கம் நீங்குதல் அருமையாகலின் அம்மயக்கம் நீங்குதல் எக்காலமோ என்பார் 'தையலார் மையலென் றொழிவேன்' என்றார். தையலார்-மாதர்: தையல்-அழகு. அழகுடையவர்களாகலான் இப்பேர் எற்றனர். ஆங்கிலத்தில் (Fair Sex) என்று கூறுவதும் இக்காரணம் பற்றியேயாம். உலகத்தினருடைய அஞ்ஞானமாகிய இருளை நீக்கி ஞானத்தை விளக்கும் தீபம் இச்சோணசைலமேயாகலின் 'உலக விளக்கெனுஞ் சோண சைலனே' என்றார். (24)

நந்துகைத் தலத்து நாரணற் கயற்கு
நவமணிக் கரகநீ ரிருந்து
மைந்துறக் குறித்து மாட்டியுங் காண்பான்
மதித்திடா துனையெதிர்ந் திலரே
யைந்துகைத் தனிக்கோட் டொருபெருங் களிறு
மறுமுகம் படைத்தகே சரியுந்
தந்தெமைப் புரக்குங் கருணைகூர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) ஐந்து கை-ஐந்து திருக்கரங்களையும், தனி கோட்டு - ஒன்றாகிய கொம்பினையும் உடைய, ஒரு பெருங்களிறும்-ஒரு பெரிய யானையையும் (விநாயகக்கடவுளையும்), அறுமுகம் படைத்த - ஆறு திருமுகங்களைக் கொண்டுள்ள, கேசரியும் - சிங்கத்தையும், தந்து-பெற்றருளி (அவர்களால்), எமை புக்கும் - அடியேங்களைக் காக்கின்ற, கருணை கூர்-திருவருள் மிக்க, சோணசைலனே! கைலை நாயகனே!—, நாரணற்கு-திருமாலுக்கு, கைத்தலத்து-கையினிடத்தில், நந்து (இருந்தும்)-பாஞ்சசன்னியமென்னும் சங்கம் இருந்தும், அயற்கு-பிரமனுக்கு, கைத்தலத்து-கையினிடத்தில், நவமணி கரக நீர் - நவரத்தினங்கள் பதித்த கமண்டலநீர், இருந்தும் - இருந்தும், மைந்துற குறித்தும்-ஓசை வளம்பட ஊதியும், ஆட்டியும்-நீராட்டியும், காண்பான் மதித்திடாது - தேவரீரை எளிதாகக் காணமதியாமல், உனை எதிர்ந்திலரே - அகந்தையால் தேடித் தேவரீரைக் காணுதொழிந்தார்கள்; எ-று.

(வி - ரை.) கைத்தலத்து என்பதைப் பின்னும், இருக்கும் என்பதை முன்னுங் கூட்டிப்பொருள் உரைக்கப் பட்டது. பிரணவ ஒலியைத்தரும் சங்கோசையும் நீராட்டலும் சிவபெருமானுக்கு மகிழ்ச்சி விளைப்பனவாகலின் இருவரும் அவ்வாறு செய்யின் எளிதிற் கண்டிருப்பர் என்பது கருத்து. யானைமுகத் திருமேனியையுடைய பெருமானாகலின் 'களிறு' என்றும், சூரபன்மன் முதலிய கொடிய அசுரர்களைத் தொலைத்து வெற்றிகொண்டவ ராகலின் 'கேசரி' என்றும் கூறினர். அறுமுகம்படைத்த கேசரி - ஆறுமுகங்களையுடைய சுப்பிரமணியக் கடவுளென்னும் சிங்கம். தேவர்கள் சிவபெருமானிடம் சென்று சூரனுகியரால் படும் துன்பம் நீங்கும்படி ஒரு குமாரனை அருள்செய்து துன்பத்தை நீக்கவேண்டுமென்று சொல்ல,சிவபெருமான் அப்போது ஆறு திருமுகம் கொண்டிருந்தான்.

கந்தபுராணச் சுருக்கம்

"சற்றுந் தகவில் கொடுஞ்சூரன்
றன்னு லிங்கா னின்னன்மிக
வுற்று வருந்தித் திரிந்திளைத்தோ
முன்னைப் போல வொருசுதனை
வெற்றி பொருந்த வளித்தெமது
விழுமந் துரப்ப வேண்டுமென
அற்றுன் றியசீர்க் களப்பெருமா
னறுமா முகங்கொண் டாங்கிருந்தான்"

என்பதனுனறிக. சிவபெருமானுடைய ஆறுதிருமுகங்களாவன:—ஈசானம்-தற்புருடம்-அகோரம்-வாமதேவம்-சத்தியோ சாதம் - அதோமுகம் என்பன. இதனை,

கந்தர் கலிவெண்பா

"பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி-யாங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோ டதோமுகமுந்-தந்து

திருமுகங்க ளாறாகிச் செந்தழற்க ணாறு
மொருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப"

எனவருங் குமரகுருபர சுவாமிகள் அருமைத் திருவாக்கானறிக. சிவபெருமான் கொண்டருளிய ஆறு திருமுகங்களையும் சிவஞானச் செல்வர்கள் சிந்தித்துக் கொண்டிருப்பர். இதனை,

**கந்தபுராணம்**

"வந்திக்கு மலரோ னாதி வானவ ருரைத்தல் கேளாப்
புந்திக்கு ளிடர்செய் யற்க புதல்வனைத் தருது மென்னா
வந்திக்கு நிகர்மெய் யண்ண லருள்புரிந் தறிஞ ராயோர்
சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுக மாறுங் கொண்டான்"

என்பதனானு முணர்க. சிவபெருமானுடைய ஆறு திருமுகங்களி னின்றும் உற்பவித்த சுப்பிரமணியக்கடவுளைச் சிவபெருமானாகவே தோற்றமாயிருக்கத் தேவர்கள் கண்டார்கள். சிவபெருமானே முருகக்கடவுள் என்பதனை,

**கந்தபுராணச் சுருக்கம்**

"அங்கதி லாறு முகத்தொடு மீரா
றத்த மொடுங்கம லத்தி னிடத்திற்
சங்கர னேமுரு கேச னெனச்சீர்
தங்க விருந்திட வண்டர்கள் கண்டார்" எனவும்,

**கந்தபுராணம்-திருவவதாரப்படலம்**

"அருவமு முருவ மாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
யொருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய"

"மறைகளின் முடிவால் வாக்கான் மனத்தினா லளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடு நிமல மூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி யருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந் தருளி னானே" எனவும்,

தணிகைப்புராணம்

"தனக்குத் தானே மகனாகிய தத்துவன்
தனக்குத் தானெனொரு தாவருங் குருவுமாய்த்
தனக்குத் தானேயருட் டத்துவங் கேட்டலுந்
தனக்குத்தா னிகரினன் றழங்கினின் றாடினான்"

எனவும் வருமாற்றானுணர்க. இன்னோரன்ன பல காரணங்களால் 'அறுமுகம் படைத்த கேசரி' என்றார். விநாயகக் கடவுளாகிய யானையையும் சுப்பிரமணியக் கடவுளாகிய சிங்கத்தையும் தந்து அடியேங்களைக் காக்கின்ற திருவருள் மிக்க சோணசைலன் என்பார் 'ஐந்துகை தனிக்கோட் டொருபெருங் களிறு மறுமுகம் படைத்த கேசரியுந் தந்தெமைப் புரக்குங் கருணைகூர் சோண சைலனே' என்றார். கோடு+ஒரு=கோட்டொரு என்றாயது: 'நெடிலோ டுயிர்த்தொடர்' என்னும் நன்னூல் சூத்திரவிதியா னென்க. உனை, எமை என்பன இடைக்குறைகள். காண்பான்-எதிர்காலத் தெரிநிலை வினையெச்சப் பகுபதம். (25)

வினையரும் புகலிக் கிறைமணப் பந்தர்
விருந்தினுக் குதவிலேன் முந்திற்
றுனையிரந் திடுவான் வந்தனன் பதநீ
யுதவியென் றுயரொழித் தருளா
யினியபைந் தமிழின் பொதியமால் வரைபோ
லிசைக்குரு காதிம மலையின்
றனையையின் றீஞ்சொற் குருகுறுஞ் சோண
சைலனே கைலநா யகனே.

(ப-ரை.) இனிய பைந்தமிழின்-இனிமையான பசிய தமிழினை யுடைய, பொதியம் மால் வரைபோல் - பொதிய மென்னும் பெரிய மலைபோல, இசைக்கு உருகாது-இராகத்திற்கு உருகாமல், இமமலை யின் தனையையின் - இமயமலையரசன் மகளாகிய பார்வதியினுடைய, தீஞ்சொற்கு - மதுரமொழிகளுக்கு; உருகுறும் - உருகும் தன்மை யுடைய, சோணசைலனே! கைலநாயகனே!—, வினை அரும்புகலிக் கிறை-வினைகள் ஒழிந்த சீர்காழி வேந்தராகிய திருஞானசம்பந்தப்

பெருமான், மணப் பந்தர் விருந்தினுக்கு-திருமணப்பந்தலில் வந்தவர்கட்கு அளித்த விருந்திற்கு, உதவிலேன்-அடியேன் செல்லா தொழிந்தேன், முந்திற்று-அஃது இவ்வுடம்பெடுக்கு முன்னரே நடந்துவிட்டது (ஆதலால்), உனை யிரந்திடுவான் வந்தனன் - தேவரீரை வேண்டுமாறு வந்திருக்கின்றேன், நீ - தேவரீர், பதம் உதவி-திருவடிகளை அடியேனுக்குத் தந்து, என் துயர்-அடியேனுடைய துன்பத்தை, ஒழித்து அருளாய்-நீக்கி யருள்வீராக; எ-று.

(வி-ரை.) புகலி என்பது சீர்காழிக்குரிய பன்னிரு திருநாமங்களில் ஒன்று. சீர்காழியின் பன்னிருதிருநாமங்கள்:—பிரமபுரம்-வேணுபுரம்-புகலி-வெங்குரு-தோணிபுரம் - பூந்தராய்-சிரபுரம்-புறவம்-சண்பை-காழி-கொச்சைவயம்-கழுமலம்.

## தேவாரம்

"பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி
புரமன்னுபூந்தராய்பொன்னஞ்சிரபுரம்புறவஞ்சண்பை
யரன்மன்னுதண்காழிகொச்சைவயமுள்ளிட்டங்காதியாய
பரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழுமலநாம்பரவுமூரே"

என்பதனாலும்,

## பெரியபுராணம்

"பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவிறிருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்"

என்பதனாலுமுணர்க.

பிரமன் தன்னுடைய சிருஷ்டித் தொழிலைப்பெற வேண்டிப் பூசித்துப் பெற்றமையால் **பிரமபுரம்** எனவும், தேவேந்திரன் சூரபன்மனால் துன்பமுற்று மூங்கிலுருவம் கொண்டு பூசித்தமையால் **வேணுபுரம்** எனவும், அச்சூரபதுமனால் வருத்தமுற்ற இந்திரன் முதலிய தேவர்கள் புகலடைந்தமையால் **புகலி** எனவும், சுக்கிரன் நாம் அசுரர்களை வருக்கும் குருவாயிருக்கின்றோம் என்னும் அகங்காரங்

கொண்டமையால் அவன் வெங்குருவாதலை ஒழித்து, மறுபடியும் அவன் பூசனைபுரிய அருள்புரிந்தமையால் **வேங்குரு** எனவும், கற் பாந்த வெள்ளத்திலும் அழியாமல் தோணிபோல மிதந்தமையால் **தோணிபுரம்** எனவும், சங்கநிதி பதுமநிதி என்னும் இரண்டு நிதிகளும் வேண்டுவார் வேண்டியபடி நீங்காது அளிக்கும் வரத்தைப் பெறும் காரணமாகப் பூசித்தமையினால் **பூந்தராய்** என்றும், திருப்பாற்கடலி லுண்டாகிய அமிர்தத்தைத் தேவர்களுக்கு அளித்துக்கொண்டு வரும் காலத்தில் அவர்களோடு மறைந்துண்டு பின் சட்டுவத்தால் வெட் டுண்ட இரண்டசுரர்களின் சிரங்களும் சிவபெருமானைப் பூசித்து இராகு கேதுக்களாகிய கிரகநிலையினை யடைந்தமையால் **சிரபுரம்** என்றும், கவுதமமுனிவரிட்ட சாபத்தினால் புருஷவடிவத்தைப்பெற்ற பிரசாபதிமுனிவர் அச்சாபம் தன்னைவிட்டு நீங்கும்படி புறவடிவோ டிருந்து பூசித்தமையால் **புறவம்** என்றும், துருவாசமுனிவர் தன் னுடைய சாபத்தின்படி கோபாலகுமாரர்கள் சண்பைக் கதிர்களால் மடியச் செய்தபாவம் ஒழியும்படி பூசை செய்தமையால் **சண்பை** என்றும், காளிதனென்னும் பாம்பு அரசன் பூசனை செய்து வேண் டிய வரங்களைப் பெற்றமையால் **காழி** என்றும், பராசரமுனிவர் மச்சகந்தியைப் புணர்ந்ததனு லுண்டாகிய உடலின் துர்க்கந்தம் நீங்கும்படி பூசித்துப் பெற்றமையினால் **கொச்சைவயம்** என்றும், உரோமசமுனிவர் கலிக்கஞ்சிச் சிவபெருமானைப் பூசித்துத் தமது மலங்களைக் கழுவப்பெற்றமையால் **கழுமலம்** என்றும், அந்த க்ஷேத் திரத்திற்குப் பன்னிரண்டு திருநாமங்களும் அமைந்தன வென்றறிக. இப்பன்னிரண்டு காரணங்களும் இன்னோரன்ன பலகாரணங்களு முன்னிட்டு 'வினையரும்புகலி' என்றார். இத்தகைய சீர்காழி க்ஷேத் திரத்தில் "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க பூதபரம்பரை பொலியச் செய்தவராகலானும், சமணக்காடகற்றிச் சைவப்பயிரை ஓங்கச்செய்த பரமாசாரிய மூர்த்திகளாகலானும் பர சமய கோளரியாகலானும் 'வினையரும்புகலிக்கிறை' என்றார். இதனை,

**சித்தாந்தக்கட்டளை**

"பரசமயக் கோளரிப் பிள்ளையார் பதம் பற்றுதுமே" எனவும்

திருவிளையாடற்புராணம்

"வெங்குரு வேந்த ரடிபணிந் தடியேன்
குலச்சிறை விளம்புவிண் ணப்பம்
இங்கெழுந் தருளிச் சமணிரு ளொதுக்கி
யெம்மிறை மகற்குநீ றளித்துப்
பொங்கிரும் பணைசூழ் தென்றமிழ் நாட்டைப்
பூதிசா தனவழி நிறுத்தி
யெங்களைக் காக்க வென்றபா சுரங்கேட்
டெழுந்தனர் கவுணியர்க் கிறைவர்"

எனவும் வருவனவற்றானறிக.

மணப்பந்தல் என்பது திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கு ஆச்சாபுரத்தில் நடந்த திருமணப்பந்தரை. பந்தல் என்பது பந்தர் என லகர மெய்யீற்றுப் பெயரினிறுதி லகரமெய் ரகரமெய்யோ டொத்து வருதலால் இது மொழியினிறுதிப்போலி. சாம்பல் என்பது சாம்பர் என வருவதுபோல என்க. விருந்து என்பது திருமணத்திற்கு வந்திருந்த எல்லா அன்பர்களையும் ஆலயத்திற்கு அழைத்துச்சென்று ஆண்டுத் தோன்றிய சோதியில் கலக்கும்படி செய்ததைக் குறிக்கின்றது. அடியேனும் அச்சமயம் அங்கிருப்பின் முத்தியடைந்திருப்பேன்; ஆனால் அத்திருக்கலியாணம் அடியேன் இத்தேகம் எடுப்பதற்கு முன்னே நிகழ்வுற்றதாகலின் அம்முத்தியை யடைய அடைந்தனன் என்பார் 'வினையரும் புகலிக்கிறை மணப் பந்தர் விருந்தினுக் குதவிலேன் முந்திற்றனை யிரந்திடுவான் வந்தனன்' என்றார்.

திருவிளையாடற்புராணம்

"விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திடமு றத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொன்" எனவும்,

"கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை

மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ
லெண்ணி டப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ"

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்" எனவும்,

காஞ்சிப்புராணம்

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி லிதன்பெருமை யாவரே கணித்தறிவார்"

"இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வலிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ" எனவும்,

சீகாளத்திப் புராணம்

"மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி
யிறையவர்தம் பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாஷை யனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை யுண்ணினைந் தேத்தல் செய்வாம்"

எனவும் வருமாற்றால் 'இனிய பைந்தமிழ்' என்றார். அகஸ்திய முனிவர் பொதிய மலையில் எழுந்தருளியிருந்து, இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து, அரக்கர்களை ஆண்டு இயங்காமல் விலக்கிய காலத்து அவர் பாடிய இசையாற் பொதியமலை உருகிற்று என்பாராகலின் அக்கருத்துத் தோன்ற 'பொதிய மால்வரைபோ லிசைக்கு உருகு' என்றார். (26)

பெண்ணருங் கலமே யமுதமே யெனப்பெண்
பேதையர்ப் புகழ்ந்தவந் திரிவேன்
பண்ணுறுந் தொடர்பிற் பித்தவென் கினுநீ
பயன்றர லறிந்துநிற் புகழேன்
கண்ணுறுங் கவின்கூ ரவயவங் கரந்துங்
கதிர்களா றுயிரங் கோடித்
தண்ணிறங் கரவா துயர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) கண்ணுறும் கவின் கூர் - பார்க்கத் தகுந்த அழகு மிக்க, அவயவம் கரந்தும்-உறுப்புக்களை மறைத்தும், நூறு ஆயிரம் கோடி கதிர்கள்-இலக்கங் கோடி சூரியர்களைப் போன்ற, தண் நிறம்-குளிர்ந்த (ஒளியாகிய) நிறத்தை, கரவாது-மறைக்காமல், உயர்ந்து எழும் - ஓங்கி வளர்ந்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, பெண் அருங்கலமே என-மகளிர்க்குள் அரிய அணி நிகர்த்தவளே என்றும், அமுதமே என-அமுதம் அனையவளே என்றும், பெண் பேதையர் புகழ்ந்து-பேதமையுடைய மடவார்களைப் புகழ்ந்து, அவம் திரிவேன் - ஒரு பயனுமின்றித் திரிகின்ற அடியேன், பண் உறும் தொடர்பில் - இசையமைந்த பாடல்களினால், பித்த என்கினும் - தேவரீரைப் பித்தனே என்று விரும்பி யழைத்தாலும், நீ பயன்தரல் அறிந்தும்-தேவரீர் அன்பர்கள் வேண்டிய பயனை வேண்டியவாறே அளிப்பதை யுணர்ந்தும், நின் புகழேன் - தேவரீரைப் புகழா தொழிந்தேன் (எங்ஙனம் உய்வேன்); எ-று.

(வி-ரை.) பேதையர்ப் புகழ்ந்து - இரண்டாம் வேற்றுமைத் தொகை இயல்பின்விகாரம். தொடர்பு-பாட்டு.

யாப்பருங்கலக்காரிகை

"யாப்பும், பாட்டுந் தூக்குந் தொடர்புஞ் செய்யுளை
நோக்கிற் றென்ப நுணங்கி யோரே"

('நுணங்கிசினோரே' என்றும் பாடம்) என்பதனானே, யாப்பெனினும், பாட்டெனினும், தூக்கெனினும், தொடர்பெனினும், செய்யு

ளொளினு மொக்கும். 'பித்த என்கினும்' என்றது நம்பியாரூரர் பதிகத்தைக் குறிப்பதாம். சூரியன் ஒளிக்கு உவமையாயினும், இன்பம் விளைப்பதிற் சந்திரனை ஒத்தவன் என்றது புலப்படத் 'தண்ணிறம்' என்றார். இனி இளங்கதிர்களெனக் கோடலும் உண்டு. மகளிரைப் பலவாறு புகழ்ந்து ஒருவிதப் பிரயோசனமும் அடையாமல் வாணளை வீணளாக்கித் திரிவேன் என்பார் 'பெண்ணருங் கலமே யமுதமே யெனப்பெண் பேதையர்ப் புகழ்ந்தயர்ந் திரிவேன்' என்றார். இசையமைந்த பாக்களினால் பித்தனே என்று அழைத்தாலும் விரும்பிய பயனைத் தேவரீர் பாலிப்பது சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சரித்திரத்தால் அறிந்துணர்ந்தும் பெருமானைப் புகழாது ஒழிந்தேன்; ஆகலின், எவ்வாறு கடைத்தேறுவேன்? என்பார் 'பண்ணுறுந் தொடர்பிற் பித்தவென் கினுநீ பயன்றர லறிந்துநிற் புகழேன்' என்றார். பார்க்கத் தகுந்த அழகுமிக்க உறுப்புக்களை மறைத்தும் இலக்கங்கோடி சூரியர்களைப்போன்ற ஒளிமறைக்காமல் ஓங்கி வளர்ந்திருக்கின்ற சோணசைலமென்பார் 'கண்ணுறுங் கவின்கூ ரவயவங் கரந்துங் கதிர்களா ருயிரங் கோடித் தண்ணிறங் கரவா தயர்ந் தெழுஞ் சோண சைலனே' என்றார். (27)

உயங்குநா லிடைப்பூங் கோதைய ரல்கு
லொளிமணிப் பாம்புதீண் டுதலான்
மயங்குவேன் றனக்குன் பதமருந் துதவி
மயக்கமென் றொழித்தருள் புரிவாய்
முயங்குமா புகழ்ப்பூம் புகலியந் தணர்க்கு
முத்துவெண் பந்தரீந் தகல்வான்
றயங்குமீன் முத்துப் பந்தர்வாழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மா புகழ் முயங்கும்-பெரும்புகழமைந்த, பூம்புகலி அந்தணர்க்கு - அழகிய சீர்காழியில் அவதரித்த திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு, வெண் முத்து பந்தர் ஈந்து-வெண்ணிறமான முத்துக்களாலாகிய பந்தரைக் கொடுத்து, அகல் வான் தயங்கும் - பரந்த வானத்தில் விளங்குகின்ற, மீன் முத்துப் பந்தர் வாழ்-உடுக்களாகிய

முத்துப் பந்தரின்கீழ் வாழ்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, உயங்கும் நூல் இடை - துவளும் தன்மை பொருந்திய நூல்போன்ற இடையையுடைய, பூங் கோதையர்-பூக்களணிந்த கூந்தலையுடைய மகளிரது, அல்குல் ஒளி மணிப்பாம்பு - அல்குலாகிய ஒளிபொருந்திய மணியினையுடைய பாம்பு, தீண்டுதலால் - தீண்டிய படியால், மயங்குவேன் தனக்கு-அறிவு மயங்கிக் கிடப்பேனாகிய அடியேனுக்கு, உன்பதம் மருந்து உதவி-தேவரீருடைய திருவடியாகிய மருந்தைக் கொடுத்து, மய்க்கம் என்று ஒழித்து அருள் புரிவாய் - அம்மயக்கத்தை எப்பொழுது நீக்கி அருள்செய்வீர்? (யானறியேன்); எ-று.

(வி-ரை.) பட்டினத்தார்

"சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லு நரக வாயில்
தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயுங்
காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடவழி தொளைபெறு வாயில்
எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமம் கழிக்கு மறைவிடம்
நச்சிக் காமுக நாய்தா னென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில்
திங்கட் சடையோன் றிருவரு ளில்லார்
தங்கித் திரியும் சவலைப் பெருவழி
புண்ணிது வென்று புடவையை மூடி
உண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி
தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி

மலஞ்சொரிந் திழியும் வாயிற் கருகே
சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாயில்" எனவும்,

"எருவாய்க் கிருவிரன்மே லேறுபுழுக் கூண்டுக்
கருவாய்க்கோ கண்கலக்கப் பட்டாய் - திருவாரூர்த்
தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்
நீரோடுந் தாரைக்கே நீ" எனவும்,

இன்னம் பலவாறு பலவாசிரியர் கூறுமாற்றான் 'உபங்குறு விடைப் பூங் கோதைய ரல்குலொளிமணிப் பாம்பு' என்றார். புகலியந்தணர்க்கு முத்துப்பந்தர் ஈந்த சரிதை:—திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சோழநாட்டிலுள்ள திவ்ய க்ஷேத்திரங்கள் பலவற்றைத் தரிசனஞ் செய்துகொண்டு திருச்சத்தி முற்றத்திலிருந்து திருப்பட்டீச்சுரத் திற்குப் போகப் புறப்பட்டுச் சென்றபொழுது, அக்காலத் தின் வெயிற் கொடுமையைத் தணிப்பதற்காகச் சிவபெருமா னேவ லால் பூதங்கள் புகலியந்தணர் முடிமீது முத்துப்பந்தரெடுத்து, "பட்டீசர் எம்மை விடுத்தனர்" என்று சொல்ல உடன்வந்த அடி யார்கள் அப்பந்தரைத் தாங்கினார்கள் என்பதாம். நூலிடை-உவமைத் தொகை. மா+புகழ்=மாபுகழ் என இயல்பாயினது 'இடையுரி வடசொலின்' என்னும் சூத்திரவிதியா லென்க. மா என்னும் சொல் வியங்கோளிடத்து வருகிற அசைச்சொல்லாகவும் வரும். "புற்கை யுண்கமா கொற்கை யோனே"—இதில் மா வென்னும் அசைச்சொல் உண்கவென்னும் வியங்கோள் வினையை யடுத்து வந்தது காண்க. இதனை,

தொல்காப்பியம்

"மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்"

என்பதனானறிக. அந்தணர்-காரண இடுகுறிப்பெயர். காரண விடு குறிப் பெயராவது, காரணங் கருதியபோது அக்காரணங்களை யுடைய பல பொருள்களுக்குச் செல்வதாயும், காரணங் கருதாத பொழுது இடுகுறி யளவாய் நின்று ஒவ்வொரு பொருட்கே செல்வ தாயும் உள்ளபெயராம். அந்தணரென்பது, காரணங் கருதியபொழுது அழகிய தண்மையை [குளிர்ந்த அருளை] யுடைய பலர்க்குஞ் செல்லுத

வாலும், காரணங் கருதாதபொழுது இடுகுறியளவாய்ப் பிராமண ருக்கே செல்லுதலாலும், காரண விடுகுறிப் பெயராயிற்று. வட நூலார் இடுகுறியை ரூடமென்றும், காரணத்தை யோகமென்றும், காரண விடுகுறியை யோகாரூடமென்றும் கூறுவர். அகல்வான்-வினைத்தொகை 'காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை' என்பது நன்னூல் சூத்திரம். (28)

மெய்த்தவ ரடிக்குற் றேவலின் றிறத்தும்
விளங்குமா கமவுணர்ச் சியினும்
புத்தலர் கொடுநிற் பரவுபூ சையினும்
பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய்
முத்தமு மரவ மணிகளு மெறிந்து
முதிர்தினைப் புனத்தெயின் மடவார்
தத்தைகள் கடியுஞ் சாரலஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) எயின் மடவார் - வேட்டுவமகளிர், முதிர் தினைப் புனத்து-முதிர்ந்த தினைகளையுடைய புனத்தில், தத்தை-(தினைகளைக் கவரவருந்) கிளிகளை, முத்தமும் அரவ மணிகளும் எறிந்து-முத்துக் களையும் நாகமணிகளையும் வீசி யெறிந்து, கடியும்-ஓட்டுகின்ற, அம் சாரல் - அழகிய சாரலினையுடைய, சோணசைலனே! கைலை நாயகனே!—, மெய்த்தவர் அடி-உண்மையாகிய தவத்தினையுடைய அன்பர்களுடைய திருவடிகட்கு, குற்றேவலின் திறத்தும்-சிறு ஏவல் புரியும் வகையிலும், விளங்கும் ஆகம உணர்ச்சியினும் - (யாவராலும் உயர்ந்ததாகக் கருதப்பட்டு) விளங்குகின்ற சிவாகமநூலுணர்ச்சியிலும், புது அலர் கொடு-புதிதாகிய மலர்களைக்கொண்டு, நின்பரவு பூசையினும்-தேவரீரை வழிபாடு செய்கின்ற பூசையிலும், பொழுது போக்கு-நாள் கழித்துவாழும் பேற்றை, எனக்கு அருள் புரிவாய் - அடியே னுக்கு அருளுவீராக; எ-று.

(வி-ரை.) அன்பர்பணி செய்தல் இன்பநிலை யளிக்குமென்பது ஆன்றோர் துணிபாகலின் 'மெய்த்தவரடிக்குற் றேவலின்றிறத்தும்' என்றார். உண்மைத்தவமுடையவர் அடியவராகலின் 'மெய்த்தவர்'

என்றார். தவமாவது மானதம் (மனதாற் செய்யப்படுவது) என்றும், வாசிகம் (வாக்காற் செய்யப் படுவது) என்றும், காயிகம் (சரீரத்தால் செய்யப் படுவது) என்றும் மூன்று வகைப்படும். இதனை,

திருவிளையாடற்புராணம்

"மானதமே வாசிகமே காயிகமே யெனவகுத்த
ஈனமில்சீர்த் தவமூன்று மிவற்றின்மா னதந்தரும
தானமிசை மதிவைத்த றயவுபொறை மெய்சிவனை
மோனமுறத் தியானித்த லைந்தடக்கல் முதலனந்தம்.

வாசிகமைந் தெழுத்தோதன் மனுப்பஞ்ச சாந்திமறை
பேசுசத வுருத்திரந்தோத் திரமுணர்த்தல் பெருந்தருமம்
காசகல வெடுத்தோதன் முதலனந்தங் காயிகங்கள்
ஈசனருச் சனைகோயில் வலஞ்செய்கை யெதிர்வணங்கல்.

நிருத்தனுறை பதிபலபோய்ப் பணிதல்பணி நிறைவேற்றல்
திருத்தன்முடி நதியாதி தீர்த்தயாத் திரைபோய்மெய்
வருத்தமுற வாடலிவை முதற்பலவவ் வகைமூன்றில்
பொருத்தமுறு காயிகஞ் சிறந்தனவிப் புண்ணியத்துள்."

என வருமாற்றானறிக. நூலுணர்ச்சியில்வழி மனச்செம்மையும், அடியாரிடத்தும், அரனிடத்தும் அன்பும் உண்டாதல் இல்லையாக லின் 'விளங்குமாகம உணர்ச்சியினும்' என்றார். ஆகமம் என்னு மொழியில், ஆ என்பது ஞானமும், க என்பது மோக்ஷமும், ம என் பது மலநாசமுமாம். எனவே, ஆன்மாக்களுக்கு மலத்தை நாசஞ் செய்து ஞானத்தைத் தோற்றுவித்து முத்தி கொடுத்தலால் ஆகமம் எனப்பட்டது. வேதமும் ஆகமமும் சிவபெருமானாலேயே அருளப் பட்டனவாதலால், அவை தம்முட் சிறிதும் பேதமின்றி யியலுந் தன்மையனவாம். இதனை,

திருமந்திரம்

"வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாத னருளவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே."

என்பதனானறிக. இறைவனை நீரும் மலரும் கொண்டு வழிபடாத நாள்கள் பயனற்ற நாள்களாகலின் 'புத்தவர் கொடுபாவு பூசையினும்' என்றார்.

தேவாரம்

"பூக்கைக்கொண்டரன்பொன்னடிபோற்றிலார்
நாக்கைக்கொண்டரனாமநவில்கிலார்
ஆக்கைக்கேயிரைதேடியலமந்து
காக்கைக்கேயிரையாகிக்கழிவரே." என்பதனானறிக.

உண்மைத் தவமுடைய பெரியோர்களின் திருவடிகளுக்குக் குற்றேவல் செய்யும் வகையிலும் சிவாகம ஆராய்ச்சியிலும் மலர்களைக் கொண்டு பூசைசெய்வதிலும் காலம் கழித்துவாழும் பேற்றினை யருள வேண்டு மென்பார் 'பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய்' என்றார். தத்தைகள் கடியும் - இரண்டாம் வேற்றுமைத்தொகை. (29)

பாயும்வெண் டிரைப்பே ராழிசூ ழுலகிற்
பழமொழி யொழியமெய் யடியா
ராயுமென் மலரோர் மலையள வணிய
வமர்ந்தநின் கோலம்யான் மறவேன்
றூயவெண் மதியிற் களங்கமென் றுரைப்பச்
சூழ்பசுங் கொடிபயி லுருவச்
சாயைசென் றுறநின் றிலங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(பதை-ரை.) தூய வெண்மதியில் - யாதொரு களங்கமுமில்லாத சந்திரனிடத்தில், களங்கம் என்று உரைப்ப - யாவரும் களங்கம் உளதெனக் கூறும்படி, சூழ் பசுங்கொடி-படர்ந்திருக்கின்ற பசுமையான கொடிகள், பயில் உருவச் சாயை - அசைகின்ற தோற்றத்தின் நிழல், சென்று உற - சென்று படியும்வண்ணம், நின்று இலங்குறும்-வானளாவிநின்று விளங்குகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, பாயும் வெண்திரை-தாவுகின்ற வெண்மையான அலைகளையுடைய, பேர் ஆழி சூழ்-பெரிய கடல் சூழ்ந்த, உலகில்-உலகத்தில்,

பழமொழி ஒழிய - (மலையளவு தெய்வத்திற்கு மலையளவு புஷ்பஞ் சாத்துவாருண்டோ) என்னும் பழமொழி நீங்கும்படியாக, மெய் அடியார் - உண்மைத் தொண்டர்கள், ஆயும் மென் மலர் - குற்றங் களைந்தெடுக்கப்பட்ட மிருதுவான மலர்களை, ஓர் மலை அளவு அணிய- ஒரு மலையி னளவாக அணிந்து வழிபட, அமர்ந்த இன்கோலம்-எழுந் தருளியிருக்கின்ற தேவரீருடைய திருக்கோலத்தை,| யான் மறவேன்- அடியேன் ஒருபோதும் மறக்கமாட்டேன்; எ-று.

(வி - ரை.) இவ்வருணை நகரத்தில் அன்பர்கள் மிகுதியாக இருத்தலான் அவர்கள் அணியும் மலர்கள் பல மலைகளாகக் குவிந்து கிடத்தலின், 'பழமொழி ஒழிய' என்றார். சந்திரனிடத்துக் களங்கம் காணப்படுதல் மலையினிடத்துச் சூழ்ந்த பசுங்கொடிகளின் சாயை எனக்கூறும் வழியாக மலையின் உயர்நிலைத் தோற்றம் விளக்கினு ரென்க. கோலம் என்பது மலையுருவத்தை. திரை - அலை; திறை-கப்பம்; இவ்விரண்டிற்கும் பேதமுணர்க. திரைந்து வருத லின் அலைக்குத் திரை என்று பெயர். திரை என்னும் வினைமுதற் பொருட்பெயர்ப் பகுபதம், திரை என்னும் பகுதியும், இ என்னும் வினைமுதற்பொருள் விகுதியும் பெற்று, அவ் விகுதிகெட்டு, முடிந் தது. காய், தளிர், பூ, கனி, நுரை, அலை என்பனவும் இவ்வாறே முடிதலறிக. (80)

நடமிடு பசும்பொற் புரவிமேற் கொண்டு
நளினமென் மலர்க்கரத் தெறிபூம்
படையொடு துரந்து வந்துமென் விடயப்
பகைப்புலி தனையெறிந் திலையே
யடிநடு நிழல்சென் றெழுகட லடைய
வகல்பெரும் புறத்துவா ரிதியிற்
றடமுடி நிழல்சென் றுறவளர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) அடி (நிழல்) நடு நிழல் - அடியின் நிழலும் நடுவின் நிழ லும், எழு கடல் சென்று அடைய-எழுகடலளவுஞ் சென்று பொருந்த வும், தடமுடி நிழல் - விசாலமாகிய முடியின் நிழல், அகல் பெரும்

புறத்து வாரிதியிற் சென்று உற-அகன்ற பெரும்புறக் கடலிற்சென்று பொருந்தவும், வளர் - ஓங்கி வளர்ந்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, நடம் இடு - நடனம் புரிகின்ற, பசும்பொன் புரவிமேற் கொண்டும்-பசுமையாகிய பொன்னிறமுடைய குதிரையி வர்ந்தும், மெல் நளினம் மலர் கரத்து - மிருதுவான தாமரை மல ரைப்போன்ற திருக்கையில், எறிபூ படையொடு - வீசும்படியான அழகிய ஆயுதத்துடனே, தூங்கு வந்தும்-தூக்கிக்கொண்டுவந்தும், என் விடயம் பகைபுலி தனை - என்னுடைய விஷயங்களாகிய பகை யோடுகூடிய புலியை, எறிந்திலையே - வீசி அழித்திலீரே! எங்ஙனம் உய்வேன்; எ-று.

(வி-ரை.) திருவிழாவிற் பரிவேட்டைக் கோலமென நடப்பதும் பலரறிந்ததே. அதனையுங் குறித்ததாகக் கொள்ளலாம். சிவபெருமா னுக்கு வேதமே குதிரை என்றுணர்க. உண்மையுருவமாகத்தோன்றி அருளா தொழியினும் புரவி யிவர்ந்தேனும் வந்து அருள்க என்ப தாம். மனமானது செந்நெறியிற் செல்லாது தடுத்து, கலங்கும்படி செய்தலின் விடயத்தைப் 'புலி' என்றார். மனம் பொறிவழியே சென்று புலன்கள் நுகர்தலைத் தடுக்கும் ஆற்றல் தமக்கு இல்லை யாகலானும், அஃது இறைவன் திருவருளாலன்றிக் கூடாதாகலா னும், அது கூடாதாயிற் பேரின்ப நுகர்தலும் முடியாதாகலானும் 'எறிந்திலையே' எனக்கூறினர். குதிரைவீரராதல் வாதவூரடிகள் பொருட்டு எனலும் ஒன்று. வாதவூரடிகள் பொருட்டுச் சிவபெரு மான் குதிரைமே லாரோகணித்த சரிதத்தைத் திருவிளையாடற் புராணத்திற் கண்டுகொள்க. (31)

யாவுமா முமையுண் ணாமுலை முலைப்பா
லீந்துபா டச்செயா யெனினு
மேவுமா துயர்செய் சூலைநோ யெனினும்
விடுத்துநிற் பாடுமா றருளா
யோவுமா னலது தொல்லுருக் கொளின்வே
றென்றெடுத் திடுமென நினைந்து
தாவுமா னினமெண் ணிகந்தசூழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) தோல் உருக்கொளின் - முக்கண்ணுங் கறைமிடறும் முதலியவற்றுடன் கூடிய பழைய திருவுருவத்தைக் கொண்டால், ஓவும் மான் அலது-மலையுருக்கொண்ட நாளில் நீக்கிய அம் மானை யன்றி, வேறொன்று எடுத்திடும் என நினைந்து - தாம் விரும்பிய வேறொரு மானையும் எடுத்தல் கூடுமென நினைத்து, தாவும் எண்ணிகந்த மானினம்-தாவிச் செல்லுகின்ற எண்ணில்லாத மான் கூட்டங்கள், சூழ் - சூழ்ந்திருக்கப் பெற்ற, சோணசைலனே! கைலாயகனே!—, யாவும் ஆம்-எல்லா மேன்மையும் எய்துதற்குக் காரணமாகிய, உண்ணாமுலை உமை-உண்ணாமுலை அம்மையின், முலைப்பா லீந்து - திருமுலைப்பாலைக் கொடுத்து, பாட செய்யாய் எனினும்-தேவரீரைப் புகழ்ந்து பாடும்படியாகச் செய்யாது விட்டீர் ஆனாலும், மேவும் மாதுயர் செய் - நிலைபெற்ற பெரிய துன்பத்தைச் செய்கின்ற, சூலைநோய் எனினும்-சூலையாகிய நோயையேனும், விடுத்து-அடியேன்பால் வர விடுத்து, நின் பாடமாறு-தேவரீரைப் பாடும்படி, அருளாய்-திருவருள் செய்வீராக; எ-று.

(வி-ரை.) பெரியபுராணம்

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்"

எனக்கூறுதலின், அதற்கேற்ப "யாவு மாமுமை யுண்ணாமுலை முலைப்பால்" என்றார். "பாலூட்டி மகிழ்வித்து ஆட்கொள்ளா தொழியினும், நோய் கொடுத்துத் துன்புறுத்தியேனும் அடிமை யாக்குக" என இறைவனை வேண்டுகின்றாரென்க. கையில் மானைத் தாங்கிய சிவபெருமான் மலையுருவங்கொண்ட காலத்தில் கைவிட்டாராகலின், அம்மானினங்கள் இவர் முன்னுருவங் கொள்ளும்போது நாம் இல்லாதொழியின் வேறொன்றைக் கைக்கொள்ளவும் விரும்புவரோ என்று நினைத்து அகலாது காத்துக்கொண்டிருக்கின்றன என்பது கருத்தாகக் கொள்க. சூலைநோயால் ஆட்கொண்டது திருநாவுக்கரசு சுவாமிகளை என்க. எல்லா மேன்மைகளும் அடைவதற்குக்

காரணமாகிய உண்ணுமுலை யம்மையாகிய உமாதேவியாரது திரு முலைப்பாலை அடியேனுக்குத் தந்து தேவரீரைப் பாடும்படியாகச் செய்யாது விட்டீராலும், நிலைபெறும் மிக்க துன்பத்தைச் செய்கின்ற சூலைநோயாகிலும் அடியேன்மேலேவித் தேவரீரைப் பாடும்படி திருவருள் செய்யவேண்டும் என்பார் 'யாவு மாழுமை யுண்ணுமுலை முலைப்பா லீந்துபாடச் செய்யா யெனினு மேவுமா துயர்செய் சூலைநோ யெனினும் விடுத்துநிற் பாடுமாறருளாய்' என்றார். சிவபெருமான் காளகண்டமும் கண்ணொரு மூன்றுந் தாங்கித் தமது பழைய திருவடிவம் தாங்குவாராயின், இக்காலத்தில் நீக்கப்பட்டுள்ள மானையன்றித் தமக்கிஷ்டமான வேறொரு மானை தாங்கி யருளுவரென நினைந்து மான்கூட்டங்கள் அளவிறந்து சூழ்ந்திருக்கும் சோணசைலம் என்றார் 'ஓவுமானல தொல்லுருக் கொளின் வேறொன் றெடுத்திடு மெனநினைந்து தாவுமானின மெண்ணிகந்தசூழ் சோணசைலனே' என்றார். நின் + பாடும் = நிற்பாடும். 'னின்னீரியல்பாம்' என்ற விதிப்படி இயல்பாகவேண்டியது அவ்வாறு இயல்பாகாமல் னகரம் றகரமானது இரண்டாம் வேற்றுமைத்தொகை யாகலின் என்க. இஃது இயல்பின் விகாரம் எனப்படும். (32)

விருப்பொடு வெறுப்பு மகன்றுபே ரின்ப
வெள்ளத்து-ளழுந்துநின் னடியார்
திருப்பத மிறைஞ்சி யவர்க்குவே ளாண்மை
செய்பெருஞ் செல்வமே யருளாய்
பொருப்புக டொறும்வீழ் பொங்குவெள் ளருவி
போன்றறி விலர்க்கிடை யறுமற்
றரிப்பருங் கருணை பொழிதருஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) பொருப்புகள் தொறும் வீழ் - எல்லா மலைகளிலும் (தோன்றி) விழுகின்ற, பொங்குவெள் அருவி போன்று - மிகுந்த வெண்ணிறமுடைய நீரருவிபோல, அறிவிலர்க்கு - அறிவில்லாதவர் பால் (இரக்கங்கொண்டு), தரிப்பு அரு கருணை - தாங்கமுடியாத

கருணையாகிய வெள்ளத்தை, இடையறுமற் பொழிதரும்-ஒழியாமற் பொழிகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, விருப்பொடு வெறுப்பும் அகன்று-விருப்பும் வெறுப்பும் நீக்கி, பேரின்ப வெள்ளத்துள்-பேரின்பக் கடலில், அழுந்தும்-மூழ்கி இன்ப நுகருகின்ற, நின் அடியார் - தேவரீர் அடியார்களுடைய, திருப்பதம் இறைஞ்சி- திருவடிகளை வணங்கி, அவர்க்கு-அவ்வடியார்களுக்கு, வேளாண்மை செய்-வேண்டிய உதவிகளைச் செய்கின்ற, பெருஞ் செல்வமே-பெரிய வாழ்வையே, அருளாய்-கொடுத்தருள்வீராக; எ-று.

(வி-ரை.) "விருப்பொடு வெறுப்பு மகன்று பேரின்ப வெள்ளத்து ளழுந்துநின் னடியார்" எனவே, அவ்வடியார்கள் தரித்தற்குரிய ஆரமாவது உருத்திராக்கக் கண்டிகையேயாம்; உடுத்தற்குரிய உடையும் கந்தையேயாம்; அவர்கள் எப்பொருளினும் குறைவில்லாதவர்கள்; அதாவது எப்பொருளினும் அவாவின்மை யுடையவராய்க் கிடைத்த அளவில் இன்பமெய்துவார் என்க. இதனை,

### பெரியபுராணம்

"ஆரங் கண்டிகை யாடையுங் கந்தையே
பார மீசன் பணியல தொன்றிலார்
ஈர வன்பினர் யாதுங் குறைவிலார்
வீர மென்றால் விளம்புந் தகையதோ" எனவும்,

### பட்டினத்தார்

"உடைகோ வணமுண் டுறங்கப் புறந்திண்ணை யுண்டுணவிங்
கடைகா யிலையுண் டருந்தத்தண் ணீருண் டருந்துணைக்கே
விடையேறு மீசர் திருநாம முண்டிந்த மேதினியில்
வடகோ டுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன வான்பிறைக்கே"

"சீதப் பனிக்குண்டு சிக்கெனக் கந்தை தினமிரந்து
நீதுய்க்கச் சோறு மனைதோறு முண்டு நினைவெழுந்தால்
வீதிக்கு ணல்ல விலைமாத ருண்டிந்த மேதினியி
லேதுக்கு நீசலித் தாய்மன மேயென்றும் புண்படவே"

"உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று வெய்யி லொடுங்கிவந்தாற்
றடுக்கப் பழையவொரு வேட்டியுண்டு சகமுழுதும்
படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்கு முண்டு பசித்துவந்தால்
கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறைவில்லையே"

"மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டென்று மகிழ்வதெல்லாங்
கேடுண் டெனும்படி கேட்டுவிட் டோமினிக் கேண்மனமே
ஓடுண்டு கந்தையுண் டுள்ளே யெழுத்தைந்து மோதவுண்டு
தோடுண்ட கண்ட னடியார் நமக்குத் துணையுமுண்டே"

"உன்பற் றொழிய வொருபற்று மில்லை யுடையவனே"

எனவும் பலவாறு பல விடங்களிற் கூறியுள்ளார்கள். விரிக்கிற் பெருகும். சிவபெருமானை வழிபடுதலினும் சிவனடியாரை வழி படுதலே சிறப்புடைத் தென்பதும், அஃதே இன்பநிலை யளிக்கு மென்பதும், சிவபெருமானுக்கும் அஃதே உவப்பா மென்பதும் ஆன்றோர் துணிபாகலின் 'நின்னடியார் திருப்பத மிறைஞ்சி' என்றார்.

## குசேலோபாக்கியானம்

"பெருத்திடு செல்வமாம் பிணிவந் துற்றிடில்
உருத்தெரி யாமலே யொளிம ழுங்கிடும்
மருத்துள தோவெனில் வாக டத்திலை
தரித்திர மென்னுமோர் மருந்திற் றீருமே" எனவும்,

"சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே" எனவும்

கூறியபடி செல்வம் பலவிதமான சேஷ்டைகளைச் செய்யுமாக லானும்,

## பெருந்திரட்டு

"தீய வசுரர் பகையுண்டு செற்ற மார்வ மிகவுண்டு
நோயுண் டனங்க ளுருண்டு நோய்கட் கெல்லாந் தாயான

காய மூண்டு கைதொழவேண் டினரு முண்டு கற்பத்தே
மாயுந் தன்மை யுண்டாகுல் வானோர்க் கென்ன வாழுண்டே"

என்றபடி இந்திராதி தேவபோகங்களும் நிலையான சுகமுடையன வல்லவாகலானும்,

திருவிளையாடற்புராணம்

"புள்ளியதோ லாடை புனைந்தரவப் பூணணிந்த
வெள்ளிய செங்கண் விடையா னடிக்கமல
முள்ளிய மெய்யன் புடையா ரறுவறுத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினு மென்செய்தாய்"

எனக்கூறியபடி புள்ளிகள் பொருந்திய புலித்தோலாகிய ஆடையை யணிந்து சர்ப்பாபரணந் தரித்த இடபவாகன ரூடராகிய சிவபெருமான் திருவடித்தாமரையைக் கருதிய உண்மையாகிய அன்பை யுடைய அடியவர்கள் அருவருப்புற்று விலக்கிய செல்வமாகலின் அச்செல்வம் வேண்டாது சிவனடியார்கள் திருவடிகளை வணங்கி அவ்வடியார்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்கின்ற உயர்ந்த செல்வமே கொடுத்தருள்வீராக என்பார் 'அவர்க்கு வேளாண்மை செய்பெருஞ் செல்வமே யருளாய்' என்றார். எனவே, செல்வத்தா லடையு மின்பத்தினும் அன்பர்பணி புரிதலால் அடையு மின்பஞ் சிறப்புடைத்தென்க. இடைவிடாது சொரிதலின் 'தரிப்பருங் கருணை' என்றார். இடைவிடாது சொரியும் அருவி, அறிவுடையார்க்கே கருணையெனத் தோன்றுமென்றும், ஏனையோர்க்கு அது புலப்படாதென்றும் வற்புறுத்துவான் வேண்டி 'பொருப்புக டோறும் வீழ் பொங்குவெள் ளருவிபோன் றறிவிலர்க் கிடையறாமற் றரிப் பருங்கருணை பொழிதரு' என்றார். எனவே, இயல்புணரார்க்கு அருவிபோலத் தோற்றி அஃதுணர்ந்தார்க்குக் கருணை வடிவாகக் காணப்படும் பெருக்குடைத்து சோணசைலத்துள்ள அருவியென்க. 'வெள்ளத்துள்' என்புழி உள் என்பது ஏழாம் வேற்றுமை உருபு.

பொங்குறு கவினுங் கற்பும்வாய்ந் திலங்கு
புண்ணிய மடந்தையும் பொருளு
மிங்குநன் குதவி யங்குவான் கதியி
னிருத்துநிற் புலவரென் புகழார்
துங்கவெங் குறவர் புனத்திடு பரண்கா
றுணித்துநட் டாரமீ மிசைமா
தங்கவெண் மருப்புப் பரப்புறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) துங்கம் வெம்குறவர் - மிகுந்த வீரச்செயலையுடைய வேடர்கள், புனத்து இடுபரண்-தினைப்புனத்தில் கட்டுகின்ற பரணுக்கு, கால்-கால்களாக, ஆரம் துணித்து நட்டு - சந்தன மரங்களை வெட்டி ஊன்றி, மீமிசை-அதன்மேற் பரப்பாக, மாதங்கம் வெண் மருப்பு - யானையின் வெண்மையான தந்தங்களை, பரப்புறும்-பரப்புகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, பொங்குறும் கவினும்-மிக்குவிளங்கும் அழகும், கற்பும்-கற்பிலக்கணமும், வாய்ந்து-அமைந்து, புண்ணியம் இலங்கும்-தருமஒழுக்கங்கள் அமையப்பெற்ற, மடந்தையும்-மனைவியையும், பொருளும் - செல்வத்தையும், இங்கு நன்கு உதவி - இம்மையிற் செம்மையாக அளித்து, அங்குவான் கதியில் இருத்தும்-மறுமையில் மேலான கதிகளில் வாழும்படி செய்கின்ற, நின்-தேவரீரை, புலவர் என்புகழார்-புலவர்கள் யாது புகழார்? (மிகுதியாகப் புகழ்வர்); எ-று.

(வி-ரை.) இம்மையில் சகலமான சௌபாக்கிய பாக்கியங்களும் அளித்து மறுமையில் உத்தமோத்தமமாகிய மோக்ஷ சாம்ராஜ்ஜியத்தையும் அளிக்கும் சிவபெருமானைப் புகழாது சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினராம் மனிதர்களைப் புகழ்கின்றார்கள் இஃது என்ன ஆச்சரியம் என்று இரங்கியதுமாகும். இதனால் நரஸ்துதி கூடாதென்று கூறினாரென்க. புலவர் என்பதற்கு நம்பியாரூரர் எனப் பொருள் கூறுவாருமுளர். அவர் இறைவனைப் பாடிப் பொன் முதலிய பெற்றமை யாவருமறிந்ததே. ஆரம், மாதங்கவெண் மருப்பு ஆகிய இவை குறிஞ்சிநிலப் பொருள்களாகலின் அவ்வியைபுபற்றிக் கூறியதாம். புலவர்-புலம்

என்னும் பகுதியிற் றோன்றியது; புலம்-அறிவு. வேடர்கள் தினைப் புனத்தில் கட்டுகின்ற பரணுக்குக் கால்களாகச் சந்தனமரங்களை வெட்டி யூன்றி அப்பரணின்மேற் பரப்பாக யானையின் வெண்மை யான தந்தங்களையே பரப்புறுகின்ற சோணசைலம் என்பார் 'அங்க வெங் குறவர் புனத்திடு பரண்கா றணிந்தநட் டாரமீ மிசைமாதங்க வெண் மருப்புப் பரப்புறுஞ் சோணசைலனே' என்றார். எனவே, அம்மலையின் சிறப்பும் மலைவளமும் விளக்கிற்று. குறவர்கள் வீர முடையவர்களா யிருப்பினும், இம்மலையிலுள்ள குறவர்களை நோக்கு மிடத்து ஏனையமலையிலுள்ள குறவர்கள் அவ்வளவு வீரமுள்ளவர்க ளல்லவென்று குறிக்கும்படி 'அங்க வெங்குறவர்' என்றார். குறவர்-குறிஞ்சிநிலமாக்கள். இவர்கள் வழியில் செல்வோரை வழிமறுத்து அவர்கள் பொருள்களை அபகரித்துக்கொண்டு ஜீவனம் செய்யும்படி யான மலையில் வசிக்கும் ஒருஜாதியார். இதனைப் பெரியபுராணம் 'ஆறலைத்துண்ணும் வேடர்' என்பதனுலறிக. கற்பு-'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' அஃதாவது புருடன் சொல்வழிநிற்றல்.

காசிகாண்டம்

"கொழுந னுண்டபின் றுனுகர் கொள்கையும்
விழித்து யின்றபின் றுஞ்சலு மென்றுயி
லெழுதன் முன்ன மெழுதலு மேயன்றோ
பழுதில் கற்புடைப் பாவையர் செய்கையே"

என்பதனுலறிக. கற்புடைய மாதர்கள் பலர். அவர்களில் திருவள் ளுவநாயனுர் இல்லறக்கிழத்தியாய வாசுகி அம்மையாரின் கற்பு போற்றத்தக்கது. அதனுற்றுன் அவ்வம்மையார் இறந்தபொழுது **திருவள்ளுவநாயனுர்,**

"அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவறுத பாவா—யடிவருடி
பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ
என்றூங்கு மென்க ணிரா"

என வருந்தினு ரென்க.

திருக்குறள்

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்பதனாற் கற்புடைமாதர் சிறப்பு விளங்குகின்றதன்றே.

அழகும் கற்பும் வாய்ந்திருத்தல் மாதர்களிடம் அரிது; அழகு இருக்கின் கற்பு இருக்காது; கற்பு இருக்கின் அழகு இருக்காது. அழகும் கற்பும் ஒருங்கே அமைந்திருப்பினும் தரும ஒழுக்கம் அமைதல் அதினும் அரிது. ஆக இந்த மூன்றும் ஒருங்கே அமைதல் அருமை. அவ்வருமையாக அழகும் கற்பும் தரும ஒழுக்கமும் மாதர்களிடம் அமைதல் அருமையாக இருப்பினும், இம்மூன்றும் அமையப் பெற்ற மனைவியும் பெருமான் தம்மைப்புகழு மடியவர்களுக்குக் கொடுப்பான் என்பார் 'பொங்குறு கவினுங் கற்பும் வாய்ந்திலங்கு புண்ணிய மடந்தையும்' என்றார். செல்வத்தையும் உத்தமகுணாதிகளில் மிக்க வனிதையராதி போகமும் பெருமான் தன்னைப்புகழு மடியவர்களுக்கு இம்மையிற் கொடுப்பா னென்பார் 'பொங்குறு கவினுங் கற்பும் வாய்ந்திலங்கு புண்ணிய மடந்தையும் பொருளு மிங்கு நன்குதவி' என்றார். எனவே, இம்மையில் உத்தமகுணாதிகளில் மேம்பட்ட மனைவி, செல்வம் முதலான போகமும் அளிப்பதுடன் அம்மையில் சிவபோகமும் அருளவல்ல சிவபெருமானைப் புலவர்கள் மிகப் புகழ்வர் என்பார் 'அங்குவான் கதியினிருத்து நிற்புலவர் என் புகழார்' என்றார். குறவர்-இடத்தால் வருபெயர்களுள், குறிஞ்சித் திணையால் வருபெயர். வெற்பன், பொருப்பன், சிலம்பன் என்பன போல. மீமிசை - ஒரு பொருட்பன்மொழி: மேலிடமுமாம். ஒரு பொருட் பன்மொழி என்பது ஒரு பொருள் குறித்து வரும் பல சொற்கள். ஒரு பொருளைக் குறித்து வருகிற பல சொற்கள் அவ்வாறு வருவதற்கு ஒரு காரணம் இல்லையாயினும் செவிக்குச் சொல்லின்பம் தோன்ற சிறந்து நிற்கையால் அவை மரபுவழுவென்று நீக்கப்படா வாம். எனவே, வழுவமைதியென்று கொள்ளப்படுமென்க. இதனை,

"ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா"

என்னும் நன்னூல்-பொதுவியல் 47-வது சூத்திரத்தானறிக. (34)

போழ்ந்திடு வடுக்கண் மகளிரை யணைத்துப்
புகழ்நந்தி பிரம்படிக் கொதுங்கிச்
சூழ்ந்திடு மமரர் நெருங்குசந் நிதியிற்
றொண்டனேன் வரவருள் புரியாய்
வாழ்ந்திடு மகக்கண் டுருகுதாய் முலைப்பால்
வழிந்தொழு குதலென வடியார்
தாழ்ந்தெழ வருவி யொழுகுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வாழ்ந்திடும் மக கண்டு - வளர்கின்ற குழந்தையைப் பார்த்து, உருகு தாய் - மனம் உருகுகின்ற தாய்க்கு, முலைப்பால் வழிந்து ஒழுகுதல் என-முலைப்பால் தானே சுரந்து வழிதல்போல, அடியார் தாழ்ந்து எழ-அடியார்கள் பணிந்து எழ, அருவி ஒழுகும்-அருவி ஒழுகப்பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, போழ்ந்திடும் வடுக்கண்-பிளக்கப்பட்ட மாவடுவனைய கண்களையுடைய, மகளிரை அணைத்து-தமது மனைவியரை அணைத்துக்கொண்டு, புகழ் நந்தி - கீர்த்தி பொருந்திய நந்தி தேவருடைய, பிரம்பு அடிக்கு ஒதுங்கி - (சந்நிதியில் விலகும்படி ஓங்குகின்ற) பிரம்பி னடிக்குப் பயந்து ஒதுங்கி, சூழ்ந்திடும் அமரர்-சூழ்ந்துகொண்டிருக்கிற தேவர்கள், நெருங்கு சந்நிதியில் - நெருங்கி யிருக்கின்ற தேவரீருடைய சந்நிதானத்தில், தொண்டனேன் வர அருள் புரியாய் - அடியேனும் வரும்படியாகத் திருவருள் செய்வீராக; எ-று.

(வி-ரை.) இரத்தினச் சுருக்கம்

"வேல்வாள் கணைவண்டு வேலை விடமமுதஞ்
சேல்பங் கயங்குடங்கை செங்காவி - காலன்
வடுமான் கருவிளையை வண்சகோ ரத்தை
யடுமாங் குழையை யடர்ந்து"

என்னும் செய்யுளில் கண்ணிற் கிணையாகக் கூறப்பட்ட பொருள்களுள் மாவடுவும் ஒன்றாதலின் 'மாவடு' என்றார். பிளக்கப்பட்ட மாம்பிஞ்சுபோலும் கண்களை யுடையவராகிய தத்தம் மனைவிமாரை அணைத்துக்கொண்டு நந்திதேவர் சந்நிதியில் விலகும்படி வீசும்

பிரம்படிக்கு அது தம்மேற் படுமென்று ஒதுங்கி பின்னும் சூழ்ந்திடு தேவர்கள் என்பார் 'போழ்ந்திடு வடுக்கண் மகளிரை யணைத்துப் புகழ்நந்தி பிரம்படிக் கொதுங்கிச் சூழ்ந்திடு மமரர்' என்றார். சிவபெருமான் சந்நிதியில் வேத்திரப் படைகொண்டு விலக்கும் பணி மேற்கொண்ட பெரும்புகழுடைமை தோன்ற 'புகழ் நந்தி பிரம்படிக் கொதுங்கி' என்றார் எனினும் அமையும். இதனை,

### திருவிளையாடற் புராணம்

"வந்திறை யடியிற் றாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றாக்கி
அந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்"

என்பதனானறிக. மிகுந்த நெருக்கத்தால் மகளிர்க்கு ஊறு நேராமற் காத்தல் ஆடவர் கடனாகலின், தேவரும் அவ்வாறே தத்தம் மனைவிமார்களுக்கு ஊறு நேராதபடி அவர்களை அணைத்துக்கொண்டார்களென்க. நந்திதேவர் பிரம்பு அடிக்கு ஒதுங்கி பின்னும் சூழ்ந்திடுகின்ற தேவர்கள் நெருங்கும் சிவபெருமான் சந்நிதியை அடியேனும் வரும்படி திருவருள் புரிவீராக என்பார் 'சூழ்ந்திடு மமரர் நெருங்கு சந்நிதியிற் றொண்டனேன் வரவருள் புரியாய்' என்றார். வாழ்ந்திடல்-உயர்நிலை பெற்று விளங்கல். மக்களைக் கண்டபோது அவர்களிடத்துள்ள அன்பு மிகுதியால் அன்னைமார்களுக்குத் தானாகவே பால் சுரத்தல் இயற்கையே; அங்ஙனமே அடியார்களைக் காணின் சிவபெருமானுக்கும் திருவருள் சுரக்குமாகலின், அதனை அருவிமேல் வைத்து, 'வாழ்ந்திடு மகக்கண் டுருகுதாய் முலைப்பால் வழிந்தொழு குதலென வடியார் தாழ்ந்தென அருவி யொழுகுறும்' என்றார். 'தொண்டனேன்' என்பதில் இழிவு சிறப்பும்மை தொக்கியுள்ளது. 'அருள்புரியாய்' என்பது வேண்டிக்கோடற் பொருண்மைக்கண் வந்த முன்னிலையேவ லுடன்பாட்டு வினைமுற்று. இவ்வாறே வருமிடங்களிலெல்லாம் கொள்க. வடுக்கண் - உவமைத்தொகை. நெருங்கு சந்நிதி-வினைத்தொகை. உருகுதாய் - வினைத்தொகை. தாய்-முறைப்பெயர். (35)

நேர்ந்திடு மொருசெங் கோல்கொடு கொடுங்கோ
　　னிமிர்ந்திட விலங்கைசென் றடைந்தோன்
கூர்ந்தவன் பொடுநின் றிறைஞ்சுபு வழுத்துங்
　　குரைகழ லிரக்கவஞ் சுவல்யான்
சேர்ந்திடு மலைமான் பெருமுலை யுவமை
　　சிறுமலை களுக்குத வாமற்
சார்ந்திட விரும்பி வளர்ந்தெழுஞ் சோண
　　சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) சேர்ந்திடும் மலை மான்-இடப்பாகத்தில் சேர்ந்திருக்கின்ற இமயமலையிற் றோன்றிய பார்வதியினுடைய, பெருமுலை உவமை - பெரிய தனங்களுக்கு உவமையாதல், சிறு மலைகளுக்கு உதவாமல்-உருவத்திற் சிறிய மற்றைய மலைகட்கு நேரிடாதபடி, சார்ந்திட-தமக்கே உரியதாகும்படி, விரும்பி வளர்ந்தெழும்-விரும்பி அதற்கேற்ப ஓங்கி வளர்ந்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, நேர்ந்திடும் ஒரு செங்கோல் கொடு-நேர்மை பொருந்திய ஒப்பில்லாத செங்கோலைத்தாங்கி, கொடுங்கோல் நிமிர்ந்திட - இராவணனுடைய கொடுங்கோல் நீங்கிச் செங்கோல் தழைக்கும்படி, இலங்கை சென்று அடைந்தோன்-இலங்கை நகரிற்புக்க இராமபிரான், கூர்ந்த அன்பொடு நின்று-பேரன்புடனே நின்று, இறைஞ்சுபு வழுத்தும்-வணங்கித் துதிக்கின்ற, குரை கழல்-ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடியை, இரக்க யான் அஞ்சுவல் விரும்பி யாசிக்க அடியேன் அச்சமடைகின்றேன்; எ-று.

(வி-ரை.) கொடுங்கோல் என்பது செம்மையினின்றும் கொடிய கோல். கொடுங்கோல் நிமிர்ந்தால் செங்கோலாகும் ஆதலின் 'நேர்ந்திடு மொருசெங் கோல்கொடு கொடுங்கோல் நிமிர்ந்திட' என்றார். அடைந்தோன்-வினையாலணையும் பெயர்: விகுதி ஆ ஓவாகத் திரிந்தது. இதனை,

நன்னூல்

"பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல்
ஆவோ வாகலுஞ் செய்யு ளுரித்தே" என்பதனானறிக.

இராவணவன் முன்னிலையில் போய் இலங்கையை யடைந்தவன் இராமமூர்த்தி யாகலின் 'இலங்கை சென்று அடைந்தோன்' என்றார். இராமமூர்த்தி மிக்க அன்போடு வணங்கும் திருவடி சிவபெருமான் திருவடியாகலின் 'இலங்கை சென்றடைந்தோன் கூர்ந்தவன்பொடு நின்றிறைஞ்சுபு வழுத்துங் குரைகழல்' என்றார். சிவபெருமான் திருவடியின் சிறப்பைத் தாண்டக வேந்தராகிய **திருநாவுக்கரசு சுவாமிகள்** திருவடித் திருத்தாண்டகத்தாலும்,

**திருமந்திரம்**

"திருவடி யேசிவ மாவது தேறிற்
றிருவடி யேசிவ லோகஞ் சித்திக்கிற்
றிருவடி யேசெல் கதியது செப்பிலற்
றிருவடி யேதஞ்ச முட்டெளி வார்க்கே"

**பட்டினத்தார்**

"பச்சைப் பசுங்கொடி யுண்ணு முலைபங்கர் பாதத்திலே
தைச்சுக் கிடமன மேயொரு தீங்கில்லையே"

என்னும் செய்யுள்களாலும் திருவடிச்சிறப்பும் திருவடி யடைதலே சிவகதி யென்பதும் திருவடிகளில் மனம்பொருந்த ஒருகாலத்திலும் தவறுதல் உண்டாகாதென்பதும் பெறப்பட்டது. இராமமூர்த்தி பற்பல க்ஷேத்திரங்களிலும் சென்று சிவபெருமானைப் பூசை செய்ததும் சிவபெருமான் அனுக்கிரகம் செய்ததும் பற்பல ஸ்தலபுராணங்களிலும் காணலாம். உதாரணமாக,

**திருவிளையாடற்புராணம்**

"அடிய னேனெண்ணுங் கருமமுஞ் சாதமே யாக
முடியு மாவரி தச்செயன் முடியுமெப் படியப்
படிபு ரிந்தருள் கடிதெனப் பணித்தனன் பாநு
நெடிய வான்படு மமுதென வெதிர்மொழி நிகழ்த்தும்.

இரவிதன் மரபில் வந்த விராமகே ளெமக்குத் தென்கீழ்
விரவிய திசையிற் போகி விரிகடற் சேது கட்டி

காவிய வுள்ளக் கள்வன் கதிர்முடிப் பத்துஞ் சுந்து
யரவமே கலையி ஞனை யருஞ்சிறை யழுவ நீக்கி.

மீண்டுநின் னயோத்தி யெய்தி விரிகட லுலகம் பன்னா
ளாண்டினி திருந்து மேனாள் வைகுண்ட மடைவா யாக
வீண்டுநீ கவலை கொள்ளே லெனவசு ரீரி கேட்டு
நீண்டவன் மகிழ்ந்து தாழ்ந்து நிருத்தனை விடைகொண் டேகி.''

என்பதனுனறிக. இராமபிரான் பேரன்புடனே நின்று வணங்கித் துதிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளை விரும்பி யாசிக்க அடியேன் அச்ச மடைகின்றேன் என்பார் 'இலங்கைசென் றடைந்தோன் கூர்ந்தவன்பொடு நின்றிறைஞ்சுபு வழுத்துங் குரைகழ லிரக்க வஞ்சு வல்யான்' என்றார். கூர்ந்த-உரிச்சொல் வடியாகப்பிறந்த பெயரெச்சம். கூர் என்பது ஒருகுணம்குறித்த பல உரிச்சொல்.

"சால வுறுதவ நனிகூர் கழிமிகல்"

என்பது நன்னூல் சூத்திரம். கழல் என்பதற்கு வீரகண்டாமணி என்பது பொருள்; ஈண்டு அதனை யணியும் காலுக்காயினமையின் தானியாகுபெயர். இவ்வாறே,

நால்வர் நான்மணிமாலை

"எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்"

என்னும் செய்யுளில் கழல் தானியாயிருத்தல் காண்க. வீரகணடை என்பது பாம்பின்படம்போ லமைந்து கொக்கிபோ லிருக்கும் ஓர் அணி;வீரத்தின் பொருட்டுக் கட்டுவது. அஞ்சுவல் என்பது எதிர்காலத் தெரிநிலை வினைமுற்றுப் பகுபதம். அஞ்சு என்னும் பகுதியும், அல் என்னும் தன்மை யொருமை விகுதியும், அவைகளுக்கு இடையே எதிர்காலம் காட்டும் வகர விடைநிலையும் பெற்று, "உடன்மேலுயிர் வந்து" என்னும் சூத்திரவிதியால் இடைநிலை வகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது. பார்வதிதேவியாருடைய பெரிய முலைகளுக்கு உவமையாகுதல் உருவத்திற் சிறிய மற்றைய மலைகளுக்கு நேரிடாதபடி தனக்கே உரியதாகும்படி விரும்பி வளர்ந்

திடுவது இம்மலை யென்பார் 'சேர்ந்திடு மலைமான் பெருமுலை யுவமை சிறுமலை களுக்குத வாமற் சார்ந்திட விரும்பி வளர்ந்தெழும்' என்றார்.

இரத்தினச்சுருக்கம்

"அடர்ந்து திரண்டிடங்கொண் டண்ணாந்து விம்மிப்
படர்ந்து சுணங்கு பரந்து—தடங்கொண்
டிணைத்துத் ததும்பி யிறுமாந்து வீங்கிப்
பணைத்துமுகம் பார்க்குமது பார்"

எனக் கொங்கையி னியல்பு கூறியுள்ளபடியால் சோணசைலத்தை உமாதேவியார் முலைகட்கு இணைகூறினார். (36)

தெருமரும் பிறவி தமையகன் றிடாத
தேவரைத் தேவரென் றெண்ணி
யருமருந் தனைய நினையடை யாத
வறிவிலார் பவப்பிணி யறுமோ
கரிமருங் கணைந்த தெனமுழை வாயிற்
கார்வர விரைந்தெழுந் துகள்கே
சரிமறைந் திருந்து நாணுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) முழை வாயில்-குகையின் வாயிலில், கார் வர-மேக மானது வர (அதனைக் கண்டு), கரி மருங்கு அணைந்தது என-யானை சமீபத்தில் வந்ததென்று எண்ணி, மறைந்து இருந்து - மறைவாக இருந்து, விரைந்து எழுந்து உகள் கேசரி-நெருங்கியவுடன் விரைவாக எழுந்து மகிழ்ந்து துள்ளுகின்ற சிங்கமானது, நாண் உறும்-(அது யானையன்றெனக் கண்டு) நாணம் அடைகின்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, தெரு மரும் பிறவி தமை-அலமரும் தன்மையுடைய பிறவித் துன்பங்களை, அகன்றிடாத தேவரை-நீக்கமுடியாத தேவர்களை, தேவர் என்று எண்ணி - தேவர்களாகக் கருதி, அரு மருந்து அனைய நினை-அருமையாகிய மருந்துபோன்ற தேவரீரை, அடையாத அறிவு இலார்-விரும்பிச் சேராத மூடர்களுடைய, பவம் பிணி-பிறவியாகிய (நீங்குதற்கரிய) நோய், அறுமோ-நீங்குமோ? (நீங்காது); எ-று.

(வி-ரை.) சஷுந்ஞாத்திரயமாகிய மயக்கத்திற்குக் காரணம் பிறவியாகலான் 'தெருமரும் பிறவி' யென்றார் அலையைப்போலவும் காற்றாடியைப் போலவும் ஆன்மாக்களை யிடைவிடாமல் சுழற்றுவிப்பது பிறவியாகலின் 'தெருமரும் பிறவி' என்றார் எனினும் அமையும். 'பிறவி யகன்றிடாத தேவர்' எனவே உபலக்ஷணத்தால் இறப்பும் அகன்றிடாத தேவர்கள் அவர்கள் என்றும் பொருள்படலால், இறப்பும் பிறப்பும் உள்ள தேவர்கள் என்பது பெறப்பட்டது. ஆகலின், சிவபெருமான் ஒருவனே இறப்பும் பிறப்பும் இல்லாத முழுமுதற்கடவுள் என்றும் அவனை வழிபடும் பக்த கோடிகளே ஜெனன மரண சாகரத்தினின்று நீங்கி முத்திப்பேற்றை யடைவரென்பதும் விளங்குகின்றது. செத்துப் பிறக்கும் ஏனைத் தேவர்களைப்போ லல்லாமல் அத்தேவர்களுக் கெல்லாந் தேவனாகி 'மகாதேவன்' என்ற பெயரோடு விளங்கும் முழுமுதற்கடவுள் சிவபெருமான் ஒருவனேயாகலின் 'அருமருந் தனையனை' என்றார். இதனை,

திருவிளையாடற் புராணம்

"தேவர்க டேவன் வந்தான் செங்கண்மால்
விடையான் வந்தான்
மூவர்கள் முதல்வன் வந்தான் முக்கணெம்
பெருமான் வந்தான்
பூவல ரயன்மால் காணாப் பூரண
புராண வந்தான்
யாவையும் படைப்பான் வந்தா னென்றுபொற்
சின்ன மார்ப்ப"

என்பதனானுணர்க. தெருமரும் பிறவிதனை யகன்றிடாத தேவர் என்றது திருமால் முதலிய தேவர்களை. அத்திருமால் முதலிய தேவர்கள் பலரும் ஜெனன மரணத்தி லழுந்தினவர்களே யல்லாமல் முழுமுதற்கடவுளரல்ல வென்பதும் அவர்களை வழிபடுவோர்களும் ஜெனன மரண சாகரத்தை நீந்தார்க ளென்பதும் சிவபெருமானுக்குச் சமமாகத் திருமால், பிரமன் முதலிய தேவர்களை மதிப்பவர்கள்

இருண்ட நரகத்தை யடைவார்களென்பதும் தோன்ற 'வினையடை யாதவர் பவப்பிணி யறுமோ' என்றார்.

### அருணகிரியந்தாதி

'எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தோநஞ் சோணேச - னில்லிற்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்
பிறந்தகதை யுங்கேட்டி லேம்"

"கோடிவிதி மாளிற் குலாவுகம லக்கண்ணன்
ஓடி வடவா லுறங்குமே—நாடியே
அக்கண்ணர் கோடி யழியி லருணகிரி
நக்கனருள் சற்றே நகும்"

### சிவஞானசித்தியார்

"யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யும்
ஆதலா லிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே"

### தாயுமானவர்

"அல்லலாந் தொழில்ப டைத்தே யடிக்கடி யுருவெ டுத்தே
மல்லன்மா ஞாலங் காக்க வருபவர் கடவு ளென்னிற்
றொல்லையாம் பிறவி வேலை தொலைந்திடா திருணீங் காது
நல்லது மாயை தானு நானென வந்து நிற்கும்"

### சூதசங்கிதை-வேதார்த்தமுரைத்த அத்தியாயம்

"அம்பு யத்தின்மே லிருப்பவன் முதலிய வமரர்
நம்பு ருஞ்சரு வாதிக ரெனவுள நாட்டும்
வெம்பு வல்வினை யாளர்கள் விரிதலை கீழாய்ப்
பம்பு தீரா கழூந்தியெக் காலமும் பதைப்பார்.

அரிய நான்முக னாகிய முக்கணம் மானைக்
கரிய மான்முத லோர்களாப் பாவித்தல் கடனன்

றரிய நற்றவத் துறுவிரா தலினுமா பதியே
பெரிய னன்னவன் றியானமே கொள்கர்பே ரறிஞர்"

என்பனவற்ருனறிக. பிறவி யகன்றிடாத தேவர் என்றமையால் திருமால் முதலியோர் பத்து பிறவி யெடுத்தமையைக் குறிக்கின்றது. திருமால் முதலியோர் பிறவிகள் எடுத்தபோது அப் பிறவிகளில் அத்தேவர்களுக்குத் தாய்தந்தையர் ஏற்பட்டுள்ளார்கள். ஆனுல் அத் தேவர்கள்போலல்லாமல் எக்காலத்திலும் பிறப்பும் இறப்பும் இல்லாமல் சகலருக்கும் பரமபிதாவாய் விளங்கினுனே யல்லாமல் ஒரு காலத்திலேனும் ஒருவருக்குப் பிள்ளையாக ஏனைய தேவர்கள்போல் தோற்றுதலில்லையாக விளங்கினுர் சிவபெருமான் ஒருவரே என்று பல காரண முன்னிட்டு 'தெருமரும் பிறவிதமை யகன்றிடாத தேவர்' என்ருர் எனினுமமையும். இதனை,

### தனிப்பாடற்றிரட்டு-காளமேகப்புலவர்

"கன்னபுர மாலே கடவுளரி னீயதிகம்
உன்னிலுமோ யானதிக மொன்றுகேள்—முன்னமே
உன்பிறப்போ பத்தா முயர்சிவனுக் கொன்றுமில்லை
என்பிறப்பெண் ணத்தொலையா தே"

### திருவாசகம்

"கோயில் சுடுகாடு கொல்புலித்தோ னல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ"

என்பனவற்ருனறிக. தெருமரும் என்னும் பெயரெச்சத்தில், தெருமா என்னும் பகுதியும், உம் என்னும் பெயரெச்ச விகுதியும் பெற்று "வலித்தன் மெலித்தல்" என்னும் சூத்திரத்துக் 'குறுக்கல்' என்னும் விதியாற் பகுதி ஈற்றில் குறுகி 'விரித்தல்' என்னும் விதியால் ரகர வுகரம் விரிந்து முடிந்தது. பிறவி - தொழிற்பெயர்:—பிற-பகுதி, வி-தொழிற்பெயர் விகுதி; கலவி, புலவி, கல்வி முதலியனபோல. தமை=தாம்+ஐ; "தான்தாம் நாமுதற் குறுகும்"என்னும் விதிப்படி ஐ உருபு புணர்ந்தபோது பகுதி நெடில் முதல் குறுகி தம் என

கின்று உருபு ஐயோடு புணர்ந்து முடிந்தது. அகன்றிடாத-தெரி கிலை எதிர்மறைப் பெயரெச்சம்; இதன் ஈறு கெட்டு அகன்றிடா என்றும் வரும்; அப்போது ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம் எனப் பெயர் பெறும். தேவர்-உயர்திணைப்பெயர்: "மக்க டேவர்நரக ருயர்திணை" என்பது நன்னூற் சூத்திரமாகலின். எண்ணி-செய்து என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்; எண்-என்னும் பகுதியும் இ-என்னும் இறந்தகால வினையெச்ச விகுதியும் பெற்றுத் தனிக் குறில் முன் னொற்று" என்னும் சூத்திரத்தால் பகுதி ணகர மெய் யிரட்டித்து, "உடன்மே லுயிர் வந்து" என்னும் சூத்திரத்தின்படி இரட்டித்த ணகர மெய்யின்மேல் விகுதி இகர வுயிரேறி முடிந்தது. பவப்பிணி - பண்புத்தொகை; பிறவியாகிய நோய் என விரியும். பிறவியை நோய் என்று சொல்லியவாறு வறுமையை (தரித்திரத்தை) யும் நோய் என்று நூல்களில் கூறுவது மரபு. இதனை,

திருவிளையாடற்புராணம்

"வறுமைநோய் பிணிப்பப் பன்னாள்
வழிபடு மடியே னின்பாற்"

எனத் தருமிக்குப் பொற்கிழியளித்த படல முதலியவற்றில் கூறியது காண்க. நோய்தீர்ப்பது மருந்துபோலப் பிறவிநோய் தீர்ப்பவன் இச் சோணசைலப்பெருமா னென்பார் 'அருமருந்து அனைய' என்றும், அருமருந்தனைய சோணசைலப் பெருமானை யடையாத மூடர்களின் ஜனனநோய் எக்காலத்தும் நீங்காது என்பார் 'கினையடையாத வறிவிலார் பவப்பிணி யறுமோ' என்றும் கூறினார். சிவபெருமான் 'அருமருந் தன்னவர்' என்று இந்நூலாசிரியரே யன்றி, 'அருமருந் தொரு தனிமருந்து' எனவும், "சித்தந்தெளிய மருந்தொன்றிருக் குது பேரின்ப மன்றுளே' எனவும் பிறருங் கூறியது காண்க. கரி-யானை: கரத்தையுடையதாகலின் கரி எனப்பட்டது; ஆகலின், கரி என்பது காரணப்பெயர். தமை என்பதை 'பிறவி' என்பதனோ டாயினும் 'தேவர்' என்பதனோடாயினும் சார்த்திப் பொருள் கூறலாம். அருமருந்து + அனைய = அருமருந்தனைய; இந்த அனைய என்பதற்குப்

பதிலாக அன்ன என்பதனை அருமருந்து என்னும் நிலைமொழியோடு புணர்த்தின் அருமருந்தன்ன என வருதற்பாலது அருமந்த எனவும் வரும்; இவ்வாறு வருவது இயல்புவழக்கில் மரூஉவின்பாற்படும். 'அறமோ' என்புழி ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. தெருமரல்-சுழலலுமாம். பிறவியைப் பிணி யென்றமையான், அதற்கேற்ப இறைவனை 'அருமருந்து' என்றார். இஃது உருவகவணி. மேகத்தை யானை யென்று மயங்கிக் குகையில் மறைந்திருந்த சிங்கம், நெருங்கிய காலத்து, யானை யல்லாதது கண்டு நாணமுற்றது என்பதாம். இச் செய்யுளால் சிவபெருமான் ஒருவரே ஜனன மரண ரகிதரென்றும், ஏனைய மூர்த்திகள் ஜனன மரண முடையவர்களென்றும், ஆதலால் ஜனன மரண ரகிதராகிய சிவபெருமானை வணங்குவோரும் ஜனன மரணங்களை நீங்கி முத்தியடைவார்களென்றும், ஜனன மரண முடையவர்களாகிய தேவர்களை வணங்குவோர் அத்தேவர்களைப்போலத் தாமும் ஜனன மரணத்தில் அழுந்தி மாறிமாறி வருவார்களென்றும், ஆதலால் ஜனன மரணரகிதராகிய சிவபெருமானைத் தவிர வேறு தெய்வங்களைச் சுத்த சைவர்கள் வழிபாடு செய்யார்கள் என்பதும் தோன்றக் கூறினாரென்க. இதனை,

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்

"அல்லதொரு தெய்வ மறியே னறிந்தாலு
நல்லதென்று நெஞ்சத்தி னாடேன்யான்—சொல்லரிய
அண்ணா மலைமேவு மண்ணலையு மண்ணலிடத்
துண்ணா முலையாளை யும்"

திருவாசகம்

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளே னினதடி யாரொடல் லானர கம்புகினும்
எள்ளேன் றிருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க ளுத்தமனே"

என்பனவற்றானறிக. (37)

ஆண்டுகம் பலசென் றிடவிருந் திடினு
மன்றியோ ரிமைப்பினி லுடல
மாண்டுகு மெனினு நன்றுநின் கமல
மலரடிக் கன்பரா யிருப்பிற்
பூண்டயங் கயில்வேற் குதலையந் தீஞ்சொற்
புதல்வன்மே லிவர்செய லெனமார்த்
தாண்டன்வந் திவர விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) பூண் தயங்கு அயில் வேல் - பூண் விளங்கப்பெற்ற கூர்மையான வேற்படையையும், அம் குதலைத் தீஞ்சொல்-அழகிய மதுரமான மழலைச் சொற்களையுமுடைய, புதல்வன்-முருகக்கடவுள், மேல் இவர் செயல் என-மேலே ஏறித் தவழுதல்போல, மார்த்தாண் டன் வந்து இவர-சூரியன் வந்து ஏறித் தவழ, விளங்குறும்-விளங்கு கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, நின் கமலம் மலர் அடிக்கு-தேவரீருடைய தாமரை மலர்போன்ற திருவடிகட்கு, அன் பராய் இருப்பில் - அன்புடையவராக இருந்தால், உடலம் - (அவர்க ளுடைய) சரீரமானது, ஆண்டு உகம் பல சென்றிட- ஆண்டுகளாலாகிய யுகங்கள் பல கழியும்படி, இருந்திடினும் - அழியா திருந்தாலும், அன்றி-அல்லாமல், ஓர் இமைப்பினில்-ஓர் இமையளவு நேரத்தில், மாண்டு உகும் எனினும்-அழிந் தொழியுமாயினும், நன்று-நன்மை புடைத்தே; எ-று.

(வி-ரை.) நாலடியார்

"மலர்மிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர் - நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்
எஞ்சினா ரிவ்வுலகத் தில்"

"புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை-இன்னினியே

நின்று னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்று னெனப்படுத லால்"

எனக் கூறியுள்ளபடி நீரிற் குமிழிபோல அழியு மியல்புடைய மக்க ளுடம்பெய்தினோர், அதனாலடைய வேண்டிய உறுதிப் பொருட்கு இன்றி யமையாது வேண்டப்படுவதாகிய அன்பினைப் பெறுவா ராயின், பின் உடலைப்பற்றிக் கவலையுறார் ஆகலின், "ஆண்டுகம் பல சென்றிட விருந்திடினு மன்றியோ ரிமைப்பினி னுடலமாண்டுகு மெனினு நன்றுநின் கமல மலரடிக் கன்பரா யிருப்பில்" என்றார். இதனை,

திருவிளையாடற்புராணம்

"இறக்கினு மின்றே யிறக்குக வன்றி
யிருக்கினு மிருக்குக வேந்தன்
ஒறுக்கினு மொறுக்க வுவகையு முடனே
யூட்டினு மூட்டுக வானிற்
சிறக்கினுஞ் சிறக்க கொடியதீ நரகிற்
சேரினுஞ் சேருக சிவனை
மறக்கிலம் பண்டைப் பழவினை விளைந்தால்
மாற்றுவர் யாரென மறுத்தான்"

எனக் கூறியதுங்காண்க. எனவே, சிவபெருமான் திருவடிகளுக்கு அன்பராகி இருப்பரேல், அவர்கள் சரீரம் பல யுகங்கள் செல்லுமளவும் இருக்கினும் அல்லது ஓரிமைப்பொழுதில் மாண்டொழியுமாயினும் நன்மையுடையதேயாம் எனக் கூறியதனால் திருவடிப் பத்தி அத்தியா வசியம் என்பதை வற்புறுத்தினாரென்க. இதனை,

திருவாசகம்

"தகைவிலாப் பழியு மஞ்சேன் சாதலை முன்ன மஞ்சேன்
புகைமுகந் தெரிய வீசி பொலிந்தவம் பலத்து ளாடு
முகைநகைக் கொன்றை மாலை முன்னவன் பாத மேத்தி
யகநெகா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே"

"தறிசெறி களிறு மஞ்சேன் றழல்விழி யுழுவை யஞ்சேன்
வெறிகமழ் சடைய னப்பன் விண்ணவர் நண்ண மாட்டாச்

செறிதரு கழல்க ளேத்திச் சிறந்தினி திருக்க மாட்டா
வறிவிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே"

எனக் கூறுமாற்றானறிக. குதலை-மழலைச் சொற்கள்: அஃதாவது நிரம்பாமை வாய்ந்த சொற்கள். மழலைச் சொற்களைப்பற்றிப் பல நூலாசிரியர்கள் பலவாறு சிறப்பித்துக் கூறியுள்ளார்கள்.

திருக்குறள்

"குழலினி தியாழினி தென்பர்தம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்"

"மக்கண் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர்தஞ்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு"

நளவெண்பா

"சொன்ன கலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலு
மென்ன பயனுடைத் தின்முகத்து-முன்னங்
குறுகுதலை கிண்கிணிகாற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி"

தனிப்பாடற்றிரட்டு-இரட்டைப் புலவர்

"மாங்காட்டு வேளாண் மகளை மருமகன்பாற்
போங்காட்டி லின்பம் புணர்ந்தானே-ஆங்கானும்
மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்தஞ்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு"

என்பதனானறிக. 'பூண்டயங் கயில்வேல்' என்ற விசேடணத்தால் புதல்வன் என்பது முருகக்கடவுளை யுணர்த்திற்று. வேல் - என்பது முருகக்கடவுள் திருக்கரத்தேந்திய வேலாயுதம்; இது சத்திவே லெனப்படும். உமாதேவியாரால் முருகக்கடவுளுக்குக் கொடுக்கப் பட்டது. இதனை, 'வேல் கொடுத்தாய் திருச் செந்தூரருக்கு' என்ற **படிக்காசுப்புலவர்** வாக்கானுமறிக. மார்த்தாண்டன் - சூரியன். பூண் விளங்குகின்ற கூரிய வேற்படையும் மழலைச் சொற்களையு முடைய புதல்வனாகிய முருகக்கடவுள் மேலேறித் தவழுதல்போலச்

சூரிய னணுகித் தவழ விளங்கும் சோணசைலம் என்பார் 'பூண்டயங் கயில்வேற் குதலையர் நீஞ்சொற் புதல்வன்மே விவர்செயலென மார்த்தாண்டன் வந்திவர விளங்குறும்' என்றார். முருகக்கடவுளுக்கு உவமையாகச் சூரியனைக் கூறுதல் ஆன்றோர் மரபு.

திருமுருகாற்றுப்படை

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி"

என்றதும் அறியற்பாற்று. உடலம் என்பதில் அம் சாரியை. தின் கமலம்-ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். கமல மலர் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மலரடி - உவமைத்தொகை. விளங்குறும் என்பதில் உறு பகுதிப்பொருள் விகுதி. இச்செய்யுளால் திருவடிப்பத்தி சித்தித்தவர் சிவகதி பெற்றவரேயாகலின் அவருடலம் பன்னாளிருப்பினும் அன்றிச் சின்னாளொழியினும் அதுபற்றி அவர்கட்கு ஒரு கவலையுமின்று என்பதைக் குறிக்கின்றது அறிக. (38)

விரைவிடை யிவரு நினைப்பிற வாமை
வேண்டுநர் வேண்டுக மதுரம்
பெருகுறு தமிழ்ச்சொன் மலர்நினக் கணியும்
பிறவியே வேண்டுவன் றமியே
னிருசுடர் களுமேல் கீழ்வரை பொருந்த
விடையுறன் மணிக்குடக் காவைத்
தரையிடை யிருத்தி நிற்றனேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) இரு சுடர்களும்-ஞாயிறும் திங்களும், மேல் (வரை) கீழ்வரை பொருந்த-மேற்கு மலையிலும் கிழக்கு மலையிலும் பொருந்த, இடை உறல்-தேவரீர் நடுவில் பெரிய மலையுருவாக எழுந்தருளியிருத்தல், மணிக்குடம் காவை-இரண்டு பக்கத்தும் மணிக்குடங்களையுடைய காவடியை, தரை இடை இருத்தி-பூமியில் வைத்து, நிற்றல் நேர் - நிற்கின்றவரை ஒத்திருக்கின்ற, சோணசைலனே! கைலை

நாயகனே!—, விரை விடை இவரும் நினை-விரைந்து செல்லுகின்ற இடபத்தை ஊர்ந்தருள்கின்ற தேவரீரை, பிறவாமை வேண்டுநர் வேண்டுக-பிறவாமையை விரும்பி வேண்டுகின்றவர் வேண்டக்கடவ ராக, மதுரம் பெருகுறு-இனிமை மிகுதியான, தமிழ்ச் சொன் மலர்-தமிழ்ச் சொற்களாகிய மலர்களை, நினக்கு அணியும் பிறவியே-தேவரீருக்குச் சாத்துகின்றபிறவியையே, தமியேன் வேண்டுவன்- அடியேன் விரும்புகின்றேன்; எ-று.

(வி-ரை.) பிறவாமையால் அடையும் பேரின்பத்தைக் காட்டிலும், கடவுளை வழிபட்டு அன்பு செய்யும் பிறவியே நன்றென்பார் "தமிழ்ச்சொன்மலர் நினக்கணியும் பிறவியே வேண்டுவன்" என்றார்.

தேவாரம்

'குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே"

எனத் தாண்டக வேந்தராகிய **ஆளுடைய அரசுகள்** அருளியதும் இதுபற்றியே யென்க. சொன்மலர் என்ற விடத்தில், சொல் என்னும் முதற்கருவின் பெயர் அதன் காரியமாகிய பாடலுக்கு ஆதலால், சொல் என்பது கருவியாகுபெயர். திருவாசகம் படித்தான், திருவாய்மொழி ஓதினன், திருக்குறள் முற்றிற்று என்பவைகள் போல வென்றறிக.

ஞாயிறும் திங்களும் மேற்கு மலையிலும் கிழக்கு மலையிலும் பொருந்த சிவபெருமான் இவ்விரு மலைகளுக்கும் மத்தியில் பெரிய மலையுருவாக எழுந்தருளியிருத்தல் எம்மாதிரி யிருக்கின்ற தென்றால் இரண்டு பக்கத்தும் மணிக்குடங்களை யுடைய காவடியைப் பூமியில் வைத்து நிற்கின்றவரை ஒத்திருக்கின்றது என்பார் 'இருசுடர்களு மேல் கீழ்வரை பொருந்த விடையுறன் மணிக்குடக் காவைத் தரையிடையிருத்தி நிற்றனேர்' என்றார். மேல்வரை என்பது மேற்குத் திசையிலுள்ள அத்தகிரியை என்க. கீழ்வரை என்பது கிழக்குத்திசையி

லுள்ள உதயகிரியை என்க. 'மேல் கீழ்வரை பொருந்த' என்பதில் மேல் என்பதற்குப் பின்னும் வரை யென்பதைக் கூட்டுக. அவ்வா றாயின், 'மேல் கீழ்வரை பொருந்த' என்பதை மேல்வரை கீழ்வரை பொருந்த என அமைத்துக்கொண்டு மேற்றிசை கீழ்த்திசைகளி லுள்ள அத்தகிரியிலும் உதயகிரியிலும் தனித்தனித்தங்க என்பது இதன் பொருளென்றறிக. ஆகவே, இது பௌர்ணமி காலத்தைச் சுட்டியது. எவ்வாறெனின், பௌர்ணமியில் சூரியன் அத்தகிரியை யடையும்போது சந்திரன் உதயகிரியி லுதித்தமர்வான். ஆகலின் ஆசிரியர் அக்காலஞ்சுட்டி வர்ணித்தாரென்க. தரையிடை என்பதில் இடை-ஏழாம் வேற்றுமை யுருபு. (39)

ஒண்மணிப் பசும்பொற் பூணிள முலையார்க்
குளத்திட மெலாமளித் தடியார்
கண்மணிக் கமையா விருந்துசெய் தருணீ
கணமிருப் பதற்கிடம் புரியேன்
வெண்மணிக் கழைமுன் கரியநெற் றிதழி
வேங்கைபொன் சொரியமா சுணங்க
டண்மணிப் பைக ளவிழ்த்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வெண் மணி கழைமுன் - வெண்மையான முத்துக் களைச் சொரிகின்ற மூங்கில்களுக்கு முன், கரிய நெற்று இதழி- கருமையான நெற்றுக்களையுடைய கொன்றையும், வேங்கை-வேங்கை யும், பொன் சொரிய-பொன்னைப்போன்ற மலர்களைத்தூவ, மாசுணங் கள்-பாம்புகள், தண்மணிப் பைகள் - குளிர்ச்சியான மணிகளையுடைய படங்களை, அவிழ்த்திடும் - விரிக்கின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, ஒள் மணி பசும்பொன் பூண்-ஒளிபொருந்திய மணிகள் பதித்த பசுமையாகிய பொன்னுபரணங்களை அணிந்த, இளமுலை யார்க்கு - முதிராத தனங்களையுடைய மகளிர்க்கு, உளத்து இடம் எலாம் அளித்து-அடியேனுடைய உள்ளம் முழுவதையும் கொடுத்து (உரிமையாக்கி), அடியார் கண்மணிக்கு - அன்பர்களுடைய கண் மணிகளுக்கு, அமையா விருந்து செய்தருள்நீ-தெவிட்டாத விருந்

தைப் புரிகின்ற தேவரீர், கணம் இருப்பதற்கு - கணநேரமேனும் எழுந்தருள, இடம் புரியேன்-சிறிதளவு இடமேனும் அமைத்திலேன் (எவ்வாறுய்வேன்); எ-று.

(ம-ரை.) பட்டினத்தார்

"பிறந்திடத்தை நாடுதே பேதைமட நெஞ்சே
கறந்திடத்தை நாடுதே கண்" எனவும்,

"சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீர்ப்பாய்ந் தேறி
உகிராற் கீற வுலர்ந்துள் ளுருகி
நகுவார்க் கிடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்
குலையும் காமக் குருடர்க் குரைப்பேன்"

எனவும் கூறியபடி, தனம் மாதர்களின் அவயவங்களின் முக்கியமானதாய் விளங்குவதாலும், முலையின்றேல் பெண்டன்மையானது விசேடியாதாகலானும் காமுகர்களின் கண்களையும் மனத்தையும் கவர்வது அதுவேயாகலானும், 'முலையார்' என்றார். ஸ்தனமுடைய மாதர்கள் தமது இளமைப்பருவத்தில் ஸ்தனங்கள் ரமணீகரமாக இருக்கும். அவர்களே வயோதிகர்களாகின், முன்னர் ரமணீகரமாக இருந்த அந்த ஸ்தனங்களே தொங்கி வற்றிப் போகுமாதலால் இளமையுடைய ஸ்தனங்களையுடைய மாதர்களைக் குறிப்பார் 'இளமுலையார்' என்றார். இதனை, இவ்வாசிரியர்.

நால்வர் நான்மணிமாலை

'இளமுலை மாதர் வளமை துறந்தும்'

எனப் பிறண்டும் கூறுதல் காண்க. இளமைவாய்ந்த ஸ்தனங்களையுடைய மாதர்களாயிருப்பினும் அழகிய இரத்தினங்கள் அழுத்திய பசிய பொன்னுபரண மின்றேல் அந்த ஸ்தனங்களுக்கு அழகு இன்றாகலின் 'ஒண்மணிப் பசும்பொற் பூணிள முலையார்' என்றார். சிவபெருமானை நினைத்தற்குரிய நெஞ்சை அவ்வழியிற் செலுத்தாது மங்கையர் வழியிற் செலுத்தினே னென்பார் 'இளமுலையார்க் குளத்திடமெலா மளித்து' என்றார். அடியார்களின் கண்மணிகளுக்குத்

தெவிட்டுதலில்லாத காட்சியென்னும் விருந்தினைப் பாலித்தருள்பவன் சிவபெருமானென்பார் 'அடியார் கண்மணிக் கமையா விருந்து செய் தருணி' என்றார். சிவபெருமானை க்ஷணநேரமேனும் இருந்தருளு தற்கு சிறிதளவு இடமேனும் அமைத்திலேன்; அங்ஙனம் இருக்க அடியேன் எவ்வாறுய்வேன்; ஆகையால் என் அறியாமை இருந்த வாறு என்னே என்பார் 'கணமிருப்பதற் கிடம்புரிந்திலன்' என்றார். 'எலாம்' என்றமையின் 'சிறிதளவு' என்பது வருவிக்கப்பட்டது.

### தேவாரம்

"வாழ்த்தவாயும்நினைக்கமடநெஞ்சுந்
தாழ்த்தச்சென்னியுந்தந்ததலைவனைச்
சூழ்த்தமாமலர்தூவித்துதியாதே
வீழ்த்தவாவினையேனெடுங்காலமே"

என்க் கூறியபடி சிவபிரானை நினைத்தற்குரிய நெஞ்சை அவ்வழியிற் செலுத்தாது மங்கையர் வழியிற் செலுத்தினேன். அவரைச் சற்றும் நினைந்திலேன், அங்ஙனமாக வாளை வீணாகக் கழித்த அடியேன் எவ்விதம் உஜ்ஜீவிப்பேன் எனக் கூறினாரென்க. யானை பன்றி என்பவற்றின் கொம்புகளும், முத்துச் சிப்பிகளும், கமுகங்காய்க் குலையும், வாழைக்காய்க் குலையும், சங்கும், சலஞ்சலமும், மீன்தலை யும், கொக்கின் தலையும், தாமரையும், மாதரது கழுத்தும், செந்நெற் கதிர்க்குலையும், மூங்கிலும், கரும்பும், பசுவின் பல்லும், பாம்பும், மேகமும், சந்திரனும், உடும்பின் தலையும், முதலையும் ஆகிய இருபது பொருள்களும் முத்தைத்தருமாகலின் 'வெண்மணிக் கழை' என்றார். இதனை,

### இரத்தினச்சுருக்கம்

"தந்தி வராக மருப்பிப்பி பூகந் தனிக்கதலி
நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமன்னார்
கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகா
ரிந்து வுடும்புக ராமுத்த மீனு மிருபதுமே"

என்பதனானறிக. நெற்று-முதிர்ந்த காய். வெண்மையான முத்துக் களைச் சொரிகின்ற மூங்கில்களுக்கு முன்னே கறுத்து முதிர்ந்த

காய்களையுடைய கொன்றை மரமும் வேங்கை மரமும் பொன் போன்ற மலர்களைத் தூவப் பாம்புகள் தம்மிடத்துள்ளதான நாகரத் தினங்களைக் கக்கும் என்பார் 'வெண்மணிக் கழைமுன் கரியநெற் றிதழி வேங்கைபொன் சொரியமா சுணங்க டண்மணிப்பைக ளவிழ்த் திடும்' என்றார். எனவே, மூங்கில் முத்தங்களை யுதிர்ப்பதற்கு முன், இதழியும், வேங்கையும் அதற்கெதிராகப் பொன் சொரிகின்றன வென்றும், மாசுணங்கள் மணிப்பைகளை யவிழ்த்து அம்மணிகளைச் சொரிகின்றனவென்றும் கொடைமிகுதியைக் கூறுவார் போன்று மலைவளத்தையும் கூறினார்.

திருவேங்கடமாலை

"கொன்றைகொடை வேந்தனெனப் பொன்சொரியும் வேங்கடமே"

என்றார் பிறரும். பை-பாம்பின் படம். இதனை,

திருவிளையாடற்புராணம்

"பையரா வணிந்த வேணிப் பகவனே"

என்பதனுலறிக. கொன்றை வேங்கை இவற்றின் மலர்கள் பொன் னிறம் போன்றவை. கணம் என்பது க்ஷணம் என்னும் வடமொழி யின் திரிபு. இதழி வேங்கை-உம்மைத்தொகை. அவித்திடும் என் பதில் இடு என்பது பகுதிப்பொருள்விகுதி. (40)

அருங்கலம் புனையு மகளிரோ ரிருவ
ரணிமணம் புணர்த்திவா ரணமுந்
துரங்கமும் புலவர்க் குதவுநின் றனையே
துதித்திடா துழன்றனன் வறிதே
மருங்குநின் றழகா லத்திதாங் குவபோன்
மரைமலர்ப் பெருஞ்சுனை யொடுபூந்
தரங்கநின் றிலங்க விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மருங்கு நின்று - பக்கத்தில் நின்றுகொண்டு, அழகு ஆலத்தி - அழகிய அலங்கார தீபங்களை, தாங்குவபோல் - தாங்குவன

வற்றைப்போல, மரை மலர் பெருஞ் சுனையொடு-செந்தாமரை மலர்களையுடைய பெரிய சுனைகளோடு, பூந்தரங்கம்-அழகுடன் கூடிய அலைகள், நின்று இலங்க விளங்குறும் - நின்று பிரகாசிக்கும்படி விளங்குகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, புலவர்க்கு-நாவலர் பெருமானாகிய நம்பி ஆரூரர்க்கு, அருகலம் புனையும்-அழகிய வேலைத் திறமிக்க அணிகலை அணிந்த, மகளிர் ஓர் இருவர்-ஒப்பற்ற இரண்டு மகளிரை, அணிமணம் புணர்த்தி - அழகிய திருமணஞ் செய்வித்து, வாரணமும் துரங்கமும்-யானைகளையும் குதிரைகளையும், உதவும் நின்றனை-கொடுத்தருளிய தேவரீரை, துதித்திடாது-நாவாரப் புகழ்ந்து பாடாமல், வறிதே யுழன்றனன் - வீணாக நாள் கழித்து அலைந்தேன்; எ-று.

(வி-ரை.) மகளிர் இருவர் என்றது, பரவையாரையும், சங்கிலியாரையும் குறித்தது. துரங்கம் பெற்றது திருநாகைக்காரோணத்தும், வாரணம் பெற்றது திருவஞ்சைக்களத்துமாம். புலவர்-நம்பியாரூரர். நம்பியாரூரர் திருநாகைக் காரோணத்துக்குச் சென்ற போது, சிவபிரானைநோக்கி,

"கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டும் எனவும்,

"கந்தமுத லாடையா பரணம் பண்டாரத்தே
யெனக்குப் பணித்தருள வேண்டும்" எனவும்,

"வீழிமிழலை தனில்நித்தல் காசருளிச் செய்தீர்
இன்றெனக் கருள வேண்டும்" எனவும்,

"காற்றனைய கடும்பரிமா ஏறுவதும் வேண்டும்"

எனவும், வேண்டிப் பொன்னும், நவரத்தினங்களும், ஆபரணங்களும், வஸ்திரங்களும், குதிரைகளும், உடைவாளும், பிறவும் பெற்று மீண்டார் என்று **பெரியபுராணத்துள்** கூறப்படுகின்றது. "பத்தூர்புக் கிரந்துண்டு" என்னும் பதிகத்தைக்கண்டு தெளிக.

சிவபெருமான் தம்மைப் புகழும் நாவலர்கட்கு அவாவிய அனைத்தும் அளிக்கும் தடங்கருணைப் பெருங்கடல் வள்ளலாயிருத்தலை

அடியேன் அறியானும் அப்பெருமானை யிந்நாள் வரையிலும் புகழாது அப்பிரயோசனமாகக் காலம் கழித்தேன் என்பார் 'புலவர்க் குதவுநின் றனையே துதித்திடா துழன்றனன் வறிதே' என்றார். எனவே, அடைந்தார்க்கு இம்மை மறுமை யின்பங்களை அளிக்கும் பெருமானை வழுத்தாது வீணாள் கழித்தேன் என இரங்குகின்றாரென்க. பக்கங் களினின்று ஆலத்தி தாங்குவபோலப் பெரிய சுனைகளினிடத்து அலைகளுடன் செந்தாமரையசைய விளங்கும் சோணசைலம் என் பார் 'மருங்குநின் றழகா லத்திதாங் குவபோன் மரைமலர்ப்பெருஞ் சுனையொடுபூந் தரங்கநின் றிலங்க விளங்குறும்' என்றார். மரை- தாமரை; முதற்குறை விகாரம். உழன்றனன்-இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று. (41)

ஏனுறு மமரர் கடைகட லளித்த
விருளொடு மணிமிடற் றடியே
னாணவ விருளுங் கலந்திடிற் கருமை
யழகுமிக் கிலங்குறுங் கண்டாய்
மாணெழில் வராக முழும்புழை யனந்தன்
மணியொளிப் பிழம்பெழல் சிறுதீத்
தாணுவின் முருக னெழுதனேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மாண் எழில் வராகம் - பெருமை பொருந்திய பன்றி கள், உழும் புழை-கிண்டுதலால் உண்டான துவாரத்தில், அனந்தன்- ஆதிசேடனுடைய, மணி ஒளிப் பிழம்பு எழல்-தலையில் உள்ள மாணிக் கங்களின் செவ்வொளித்திரட்சி மேலே தோன்றல், சிறுதீ தாணுவின்- சிறிய அக்கினித்திரள் வடிவாக, முருகன் எழுதல் நேர்-முருகக் கடவுள் தோன்றுந் தோற்றத்தை நிகர்த்த, சோணசைலனே! கைலை நாயகனே!—, ஏண் உறும் அமரர்-திறமை மிக்க தேவர்கள், கடை கடல் அளித்த-கடைந்த பாற்கடல் கொடுத்த, இருளொடு - (விஷ மாகிய) இருளோடு, அடியேன்-அடியேனுடைய, ஆணவ இருளும்- ஆணவமாகிய இருளையும், கலந்திடின்-சேர்த்துக் கொள்வீராயின், கருமை அழகு-தேவரீருடைய திருக்கழுத்தின் கருமணிபோன்ற அழ கின்தோற்றம், மிக்கு இலங்குறும்-மிகுந்து (நன்றாக) விளங்கும்; எ-று.

(வி-ரை.) ஏண் உறும் - திறமைபொருந்திய என்றும் பொருள் கூறலாம்; ஆனால் அவ்வளவு சிறப்புடைத்தன்று; திறமைமிக்க எனப் பொருள் கோடலே சிறப்புடைத்து. அமரர்-தேவர்கள்; மரணமில் லாதவர்கள்; கற்பமுடிவில் இறப்பவர்களை மரண மில்லாதவர்கள் என்று கூறுவது மங்கலவழக்கு. மங்கலவழக்காவது மங்கலமில்லா ததை மங்கலமாகக் கூறுவது. செத்தாரைத் துஞ்சினார் என்றும், ஓலையைத் திருமுகம் என்றும் வழங்கும் இவை முதலானவை மங்கல வழக்கு ஆகும்.

கடைகடல் - வினைத்தொகைநிலைத்தொடர். இருள் என்பது பண்பாகுபெயராய் விடத்தை யுணர்த்திற்று. கலந்திடல் என்பது எதிர்காலத் தெரிநிலை வினையெச்சம்: கல - பகுதி, த் - சந்தி, து- சாரியை, சந்தித் தகரம் நகரமானது மெலித்தல் விகாரம், இடு- பகுதிப்பொருள் விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, இல்-எதிர்கால வினையெச்ச விகுதி, உகரக்கேடு சந்தி. கண்டாய்-முன்னிலை யசை.

தேவர்கள் காமதேனு, கற்பகவிருக்ஷம், அயிராவதம், உச்சைச் சிரவம், சிந்தாமணி முதலிய செல்வங்களை யுடையவர்க ளாகலானும், அரம்பை, மேனகை, உருப்பசி, திலோத்தமை முதலிய தேவஸ்திரீ கள் ஆடல் பாடல் சிறப்புடையவர்க ளாகலானும், இமையாநாட்டம் பெற்றவர்க ளாகலானும் இன்னோரன்ன பல காரணங்களானும், 'ஏணுறும் அமரர்' என்றார். அமுதத்தை முன்னிட்டுத் தேவர் கடைந்த இடம் திருப்பாற்கடலாகலின் 'அமரர் கடைகடல்' என்றார். அமிர்தத்திற்குப் பதிலாக அக்கடலில் விஷம் உண்டான தாகலின் 'கடலளித்த விருளொடு' என்றார். சோணசைலம் பெரிய தீர்த்தானு என்பது தோன்ற "சிறுதீர்த்தாணுவின் முருகனெமுதனோர்" என்றார். அடியேனிடம் குடிகொண்டுள்ள ஆணவமலம் தேவரீர் உட்கொண்ட விஷத்தைக் காட்டிலும் வருத்தம் செய்யும் இயல்புடைய தாகலால் அவ்வாணவமலத்தையும் கழுத்திலிருத்தி யருளவேண்டும். அவ்வாறு தேவரீர் அடியேன் அபீஷ்டப்படி அடியேனுடைய ஆணவவிருளைத் தேவரீர் திருக்கண்டத்தி லமர்த்தி யருளுவீராயின் திருநீலகண்டர்

என்னும் அருமைத் திருநாமமுடைய தேவரீர் திருக்கண்டமானது கருமையினது அழகு அதிகரித்து விளங்காநிற்கும். அதனால் இரு திறத்தாராகிய அடியேனுக்கும் தேவரீருக்கும் இலாபமே என்பது தோன்ற 'மணிமிடற் றடியே னுணவ விருளுங் கலந்திடிற் கருமை யழகு மிக்கிலங்குறுங் கண்டாய்' என்றார். எழில்-தொழிற்பெயர்; எழு-பகுதி, இல்-தொழிற்பெயர் விகுதி, உகரக்கேடுசந்தி. பன்றிகள் கிண்டிய துவாரத்தின் வழியாக ஆதிசேடனுடைய சிரசிலுள்ள இரத்தினங்களின் ஒளிப்பிழம்பு சிறிய அக்கினித்திரள் வடிவாக முருகக் கடவுள் தோன்றும் தோற்றத்தை யொத்திருக்கும் என்பார் 'மாவெண் ழில்வராக முழும்புழை யனந்தன் மணியொளிப் பிழம்பெழல் சிறுதீத் தாளுவின் முருக னெழுதனேர்' என்றார்.

**சிவபெருமான் விஷத்தைத் தன் கண்டத்திலணிந்த வரலாறு:**—பூர்வத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் உண்டான யுத்தத்தில் பலர் இறந்தனர். ஆகையால் இருதிறத்தாரும் மரணம் உண்டாகாதபடி அமிர்த மளிக்கவேண்டுமென்று பிரமனிடம் சென்று பிரார்த்திக்க, அப்பிரமதேவன் அவர்களுடன் விஷ்ணுவி னிடஞ்சென்று அவர்கள் கருத்தை யறிவிக்க, திருமால் மந்திர மலையை மத்தாக நாட்டி, வாசுகியைத் தாம்பாகப் பூட்டி, ஒரு பக்கம் தேவர்களும் மற்றொரு பக்கம் அசுரர்களுமாக இருந்துகொண்டு கடையச் செய்தனர். பலகாலம் கடைந்தமையால் வாசுகி இரு திறத்தாராலும் உண்டான வருத்தஞ் சகிக்க முடியாமையால் துடித்து விஷத்தைக் கக்கியது. அவணுள்ள அனைவரையும் அழிப்பான் போந்த அக்கொடிய விஷத்திற்குப் பயப்பட்டுச் சகல தேவர் களும் தடங்கருணைப் பெருங்கடலாகிய சிவபெருமானைச் சரண மடைந்தனர். சரணமடைந்த தேவர்களைக் காக்கும் பொருட்டு விஷத்தைத் தன் கழுத்தில் நிலைபெறச் செய்தார். அவ்விஷமானது ஒரு நீலமணிபோலத் திருக்கண்டத்தில் பிரகாசித்துக்கொண் டிருந் தலின் காளகண்டரென்னும் அருமைத் திருநாமம் பெற்றனர். பிறகு சிவபெருமான் கட்டளைப்படி மீட்டும் திருப்பாற்கடல் கடைய அமுதமும் மற்ற வஸ்துக்களும் பிறந்தன. இதனை,

**கந்தபுராணம்-ததீசியுத்தரப்படலம்**

"ஐயநீ யன்றி யாரிவ் வனல்விட மாற்று நீரார்
செய்யகைக் கொண்ட வற்றாற் சிறிதெனக் காட்டிற் றன்றே
வெய்ய தோரிதனை யின்னே விட்டனை யென்னிற் பின்னை
யுய்வரோ யாரு மின்னே யொருங்குடன் முடிந்தி டாரோ."

"முடிவிலா வுனக்கே யன்றோ முன்னுறு பாக மெல்லாம்
விடமதே யெனினு மாக வேண்டுது மிதனை வல்லே
யடியரே முய்யு மாற்றா லருந்தினை யருண்மோ வென்னக்
கடிகம ழிதழி வேய்ந்தோன் கலங்கலீ ரினிநீ ரென்றான்."

"என்றனன் விரைவிற் றன்கை யேந்திய விடமுட் கொள்ளச்
சென்றது மிடற்றி லன்ன திறத்தினை யாரு நோக்கி
இன்றெம துயிர்நீ காத்தற் கிங்கிது சான்று மங்கண்
நின்றிட வருடி யென்றே நிமலனைப் போற்ற லுற்றார்."

என்பதனாலும்,

**காஞ்சிப்புராணம்**

"அடுக்கால மிதுவென்ன விடமெழலு
நனிவெருவி யயன்மா லேனோர்
கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற்கீழ்ச்
சரண்புகுதக் கொதித்து வாழ்நாள்
பிடுங்காம லருள்புரிந்த பிரானன்றிப்
பின்னையுமோர் பிரானுண் டென்ன
நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினு
மென்னுள்ள நடுங்கு மாதோ"

என்பதனாலும்,

**மறைசையந்தாதி**

"அன்றாலி னூட்டந் துயின்றோ னிக ரண்ணலே திருமான்
பொன்றாலி நாட்ட நஞ்சுண்டார்"

என்பதனாலு மறிக. இவ்விஷயத்தை **சிவபராக்கிரமம் விஷாப ஹரண மூர்த்தியிற்** காண்க. திருமால், பிரமன் முதலிய தேவர்க

ளாலும் அடக்கமுடியாத ஆலஹாலவிடத்தை அடக்கி அமரரைக் காத்ததுபோல, அடியேனுக்குப் பெருந்தீங்கு பயக்கும் ஆணவமாகிய பேரிருளையும் நீக்கியருளிக் காத்தருள்கவென வேண்டுகின்றார் என்பதாம். (42)

மின்னவிர் சடிலக் கற்றையு மருள்கூர்
விழிகளுந் திருமுகத் தழகுங்
கன்னவி றிரடோ ணான்குமீ ரடியுங்
கண்டுகண் களிக்குநா ளுளதோ
வின்னிசை யொலிகேட் டுருகுதல் கடுப்ப
விழிதர வருவிகிம் புருடர்
தன்னிக ரிசைகூர் சாரலஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) இன் இசை ஒலி கேட்டு-இனிமையான இசையினது முழக்கத்தைக் கேட்டு, உருகுதல் கடுப்ப - (மலையே) உருகுதலைப் போல, அருவி இழிதர-அருவிகள் எல்லாத் திசைகளிலும் ஒழுகா நிற்க, கிம்புருடர்-கிம்புருடர்களால் பாடப்படுகின்ற, தன் நிகர் இசை கூர்-தனக்குத் தானே நிகராக உயர்ந்த இசை மிகுதியாக நிறைந்த, அம் சாரல்-அழகிய சாரலையுடைய, சோணசைலனே! கைலைநாயகனே!—, மின் அவிர் - மின்னலைப்போல் பிரகாசிக்கின்ற, சடிலம் கற்றையும்-சடைக் கூட்டமும், அருள் கூர் விழிகளும்-கருணைமிகுந்த திருக்கண்களும், திருமுகத்து அழகும்-திருமுகத்தில் அழகும், கல் நவில் - மலையென்று சொல்லும்படியான, திரள் தோள் நான்கும்-திரண்ட நான்கு தோள்களும், ஈரடியும்-இரண்டு திருவடிகளும் (ஆகிய இவற்றுடன் கூடிய தேவரீர் திருமேனியை), கண்டு கண் களிக்கும் நாள் உளதோ-தரிசித்துக் கண்கள் மகிழ்வெய்துங் காலமும் உண்டோ?; எ-று.

(வி-ரை.) கற்றை-கூட்டம், அல்லது திரட்சி. திரள் தோள் வினைத்தொகை. இச் செய்யுளின் பின்னிரண்டடியும் தற்குறிப் பேற்ற அணி: அஃதாவது இயற்கையாகவுள்ள ஒரு பொருளினிடத்துக் கவி தனது கற்பனை ஏற்றிக் கூறுவது. இதனை வடநூலார்

'உத்ப்ரேக்ஷா லங்காரம்' என்பர். கடுப்ப - உவமை உருபு. கூர்-மிகுதிப்பொருளைக் காட்டும் உரிச்சொல். இதனை,

நன்னூல்

"சால வுறுதவ நனிகூர் கழிமிகல்"

என்பதனுற் காண்க. சடிலம், விழி, முகம், தோள், கண்-இனைப் பெயர்கள். சிவபெருமானது சடைக்கூட்டம் மின்னலைப்போலப் பிரகாசிக்கின்றமையால் 'மின்னவிர் சடிலக் கற்றையும்' என்றும், அப்பெருமானுடைய திருக்கண்கள் கருணை மிகுந்த திருக்கண்களாக லின், 'அருள்கூர் விழிகளும்' என்றும், முகம் மிக அழகாக விளங்கு கின்றமையின், 'திருமுகத் தழகும்' என்றும், மலைபோன்ற சதுர்ப் புஜங்களும் உபயத் திருத்தாளும் அப்பெருமானுக்கு உளவாகலின் 'கன்னவி றிரடோ ளுன்குமீ ரடியும்' என்றும் கூறினரென்க. சடிலக் கற்றையையும், அருள்மிக்குத் திகழும் திருக்கண்களையும், திருமுகத்தையும், சதுர்ப்புஜத்தையும், உபயத் திருத்தாளையும் அடியேன் கண்கள் தரிசித்து மகிழும் காலமும் உண்டோ என்பார் 'கண்டுகண் களிக்குநா ளுளதோ" என்றார். (43)

அள்ளிவெண் டிருநீ றுடன்முழு தணியு
மடியவர்ப் பெறினெழுந் திளங்கன்
றுள்ளிநின் றுருகு மன்னையின் மனநெக்
குருகுபு சென்றிறைஞ் சிலனே
யெள்ளிவெம் புலியெண் கரிதிரு மேனி
யேறுத றகாதெனை வெகுண்டு
தள்ளிவந் தருவி யிழிதனேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வெம்புலி எண்கு அரி - கொடிய புலியும் கரடியும் சிங்கமும், எள்ளி - அவமதித்து, திருமேனி ஏறுதல் தகாது என - தேவரீருடைய திருமேனியில் ஏறக்கூடாதென்று, வெகுண்டு-அவற் றின்மேற் கோபம் கொண்டு, அருவி-நீரருவியானது, தள்ளிவந்து இழிதல் நேர் - அப்புலி முதலியவற்றைக் கீழே தள்ளிக்கொண்டு இறங்குவதை ஒத்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—;

வெண் திருநீறு அள்ளி-வெண்மையான விபூதியை எடுத்து, உடல் முழுதும் அணியும்-தேகம் முழுதும் பூசுகின்ற, அடியவர் பெறின்-சிவனடியார்களைக் காணப்பெற்றால், எழுந்து-இருக்கைவிட் டெழுந்து, இளங் கன்று உள்ளி நின்று-இளங்கன்றை நினைத்து நின்று, உருகும் அன்னையின் - மனமுருகுந் தாய்ப் பசுவைப்போல, மனம் நெக்கு உருகுபு-நெஞ்சம் இளகிக் கசிந்து, சென்று இறைஞ்சிலனே-போய் வழிபடுகின்றிலேன் (என் செய்வேன்?); எ-று.

(வி-ரை.) நீறு - அணிகின்றவர்களுடைய வினைகளை நீறாக்கும் இயல்புடையது (விபூதி). அளவிறந்த புண்ணியத்தைத் தருவது வெண்ணிற விபூதியேயாகலின் அவ் வெண்ணிற விபூதியேயன்றி, பலவித கெடுதியையும் விளைக்கும் மற்ற நிறமுடைய விபூதிகளைச் சிவனடியார்கள் தரிக்கமாட்டார்களாகலின் 'அள்ளிவெண் டிருநீ றுடன்முழு தணியு மடியவர்' என்றார். இதனை,

பிரமோத்தரகாண்டம்

"நீலந் தீப்பிணி தாம்பிர மாயுக நீக்குங்
கோல மாஞ்சிவப் பிசையின்மை பீதநல் குரவா
மேலு மித்திற நிறம்படா தெடுத்திடு நீற்றிற்
சாலும் வெண்ணிற மெண்ணிலாப் புண்ணியம் தருமால்" எனவும்,

தணிகைப்புராணம்

"உலகருக் குரிய மறைவழி வேட்டு
மோங்கிய விரசையிற் பொடித்த
விலகுவெண் ணீறு வைதிக பூதி
யின்னது புத்தியே யளிக்கும்
மலமறு சத்தி பதிந்தவர்க் குரித்தாய்
வயங்குமா கமவழி தீக்கை
நிலவுசெங் கனலிற் பொடித்தவெண் பூதி
நிகரிலாச் சைவவெண் ணீறு" எனவும்,

"முத்தியே யன்றிப் புத்தியும் வெஃகின்
முகிழ்க்குமாற் சைவவான் பூதி" எனவும்,

வருவன வற்றுனறிக. இளங்கன்றை நினைத்து மனமுருகிய தாய்ப் பசு அணுகியபோது, அதனைக் கண்டு விரைந்து செல்லும் கன்று போல அடியார்கள் எதிர்ப்பட்டபொழுது அன்புடன் விரைந்து சென்று வணங்கிலேன்; அடியேன் எவ்வாறு உய்வேன் என்பார் 'அடியவர்ப் பெறினெழுச் சிளங்கன் றுள்ளிநின் றுருகு மன்னையின் மனநெக் குருகுபு சென்றிறைஞ் சிலனே' என்றார். திருநீறு முதலிய சாதனங்களை அணிந்த பெரியோர்களைக் காணின், சிவனெனவே கண்டு வழிபட வேண்டுமென்பதே ஆன்றோர் துணிபாகலின் இங்ஙனம் கூறினரென்க. மலையின்மேல் ஏறுகின்ற புலி முதலிய வற்றைக் கீழே தள்ளிக்கொண்டு அருவி வீழ்தலை, 'திருமேனி ஏறுதல் தகாதெனத் தள்ளிவந்தருவி யிழிதனோர்' எனக் கூறியது **தற்குறிப்பேற்றஅணி.** இதனை, 'உத்ப்ரேக்ஷாலங்காரம்' என்பர் **வடநூலார்.** அடியவர்ப்பெறின்-இரண்டாம் வேற்றுமைத்தொகை; இயல்பின் விகாரம். அன்னை - முறைப்பெயர். உருகுபு என்பது - செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்; உருகு - பகுதி, பு-இறந்தகால வினையெச்சவிகுதி. இறைஞ்சிலன்-எதிர்மறை வினைமுற்று. (44)

இழையெனத் தளர்சிற் றிடையுறு முலையா
  ளெனக்குவண் புகலிவேந் தயின்ற
கழுமணிப் பசும்பொற் குலவுபாற் கிண்ணங்
  கழுவுநீர் வார்ப்பதற் குரையாய்
முழையிடைக் கதிர்மா மணிவிளக் கேற்றி
  முசுக்கலை பிணவொடு மசோகத்
தழையிடைத் தழுவி யுறங்குறுஞ் சோண
  சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) முசுக்கலை - ஆண் குரங்குகள், முழையிடை-குகையினிடத்து, கதிர் மாமணி விளக்கு ஏற்றி-ஒளி பொருந்திய பெரிய மணிகளை விளக்காக வைத்து, அசோகத் தழையிடை - அசோக மரத்தினது தழைகளைப் பரப்பி அதன்மேல், பிணவொடும்-பெண் குரங்குகளுடனே, தழுவி உறங்குறும்-தழுவிக்கொண்டு தூங்குகின்ற,

சோணசைலனே! கைலைநாயகனே!—, இழை எனத் தளர்-நூலிழை போலத் துவளுகின்ற, சிறு இடை உண்ணாமுலையாள் - மெலிந்த இடையையுடைய உண்ணாமுலையம்மையார், வண் புகலி வேந்து அயின்ற - வளம்பொருந்திய புகலி யென்னும் சீர்காழிப் பிரானாகிய திருஞானசம்பந்தர் உண்டருளிய, கழுமணிப் பசும்பொன் குலவு பால் கிண்ணம்-கழுவப்பட்ட மணிகள் பதித்துப் பசும்பொன்னாற் செய்யப்பட்டு விளங்குகின்ற பாற்கிண்ணத்தை, கழுவும் நீர்-கழுவிய ஜலத்தை, எனக்கு வார்ப்பதற்கு உரையாய் - அடியேனுக்கு வார்க்கும்படி உரைத்தருள்வீராக; எ-று.

(வி-ரை.) உமாதேவியார் திருமுலைகள் ஒருவரும் வாய்வைத்து அருந்தாத முலைகளாகலின் 'உண்ணாமுலை' என்று உமாதேவியாருக்கு அருமைத் திருநாமம் வாய்த்துளது. வடநூல்களில் அபீதகுஜாம்பாள் என்றும் கூறியுள்ளது காண்க. சிவபெருமான் உமாதேவியைப் பார்த்து "உனது முலைப்பாலைப் பொன் வள்ளத்திற் கறந்து இவனுக்கு ஊட்டுக" எனத் திருவருள்செய்ய, தேவியார் அவ்வாறே பொன்வள்ளத்திற் கறந்து கொடுக்கச் சாப்பிட்டார் புகலி வேந்தர் என்க. இதனை,

திருவிளையாடற்புராணம்

"கவுணியர்க்குப் பால்சுமந்த கலசம் போற்றி" எனவும்,

"வரையுரங் கிழித்த வேலும்வாய் வைத்த
தருந்தாத விளமுலைவாய் வைத்தருந்தப் பாவைதனக் களித்தும்"

எனவும் வருவனவற்றாற் காண்க. புகலி - சீர்காழி; யாவருக்கும் புகலிடமாயுள்ளது என்பதாம். உமையவள் அளிக்கும் ஞானப்பாலை உண்ணும் பக்குவமில்லேனாகலின், அஃது அடியேனுக்குக் கிடைத்திலதேனும், அப்பாற் கிண்ணங் கழுவிய ஜலமேனும் கிடைப்பின் ஒருவாறு உஜ்ஜீவிப்பேன் எனக் கூறியருளினாரென்க. கழுவும் என்பது இடைக்குறை விகாரம்பெற்றுக் கழுமணி என்றாயிற்று: "ஓதி முது போத்து" என்பதைப்போல. அயின்ற என்னும் பெயரெச்சம் கிண்ணம் என்னும் பெயரோடும், பிணிவொடும் என்பது

உறங்குறுமென்னும் பெயரெச்சத்தோடும் முடிந்தது. முழையிடை, தழையிடை என்பனவைகளில் இடை ஏழாம்வேற்றுமை உருபு. முசு-ஒருவித குரங்கு: முசுகுந்தச் சக்கரவர்த்தி முன்ஜென்மத்தில் இந்த ஜாதிக் குரங்காக (முசுவாக) இருந்தான் என்க. 'உறங்குறும்' என்பதில் 'உறு' பகுதிப்பொருள் விகுதி. (45)

வினைவழி யுடலிற் கமைந்துறு முணவே
வேண்டினர் வினைகொடு புணரா
நனைமலர் புனைநின் றிருவடி யடைவா
னொடொறும் வேண்டில ருலகர்
கனையிருள் கரந்த விடமறிந் துணப்போங்
காட்சியிற் புனக்கிளித் தொகுதி
தனையெறி மணிகண் முழைபுகுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) புனக்கிளி தொகுதி தனை - தினைப்புனத்திலுள்ள தினைகளைக் கவர வருகின்ற கிளிக் கூட்டங்களை, எறி மணிகள்- (ஓட்டுதற்குக்) குறமகளிர் வீசி எறிகின்ற மணிகள் (மாணிக்கக் கற்கள்), கனை இருள் கரந்த இடம் அறிந்து-மிகுந்த இருள் மறைந் திருக்கும் இடத்தைத் தேடி யறிந்து, உணப்போம் காட்சியின்-அவ் விருளை யோட்டுதற்குச் செல்லுந் தோற்றம்போல, முழை புகும்- குகையினிடத்துச் செல்லுகின்ற,- சோணசைலனே! கைலைநாய கனே!—, வினைவழி உடலிற்கு-முன் செய்த இருவினைகட்கு ஏற்ப உண்டாகிய இவ்வுடம்பிற்கு, அமைந்து உறும் உணவே -ஏற்பட்டிருக் கின்ற அநுபவமாகிய உணவையே, வேண்டினர் - வேண்டி நிற்கின் றவர், வினை கொடு புணரா - இருவினைகளைக்கொண்டு எய்த முடி யாத, நனை மலர் புனை - தேன் சொரியும் மலரால் அலங்கரிக்கப் பட்ட, நின் திருவடி அடைவான் - தேவரீருடைய திருப்பாதங்களை அடைய, நாடொறும் வேண்டிலர் - தினந்தோறும் வேண்டினாரிலர் (எவ்வாறுய்வர்?); எ-று.

(வி-ரை.) வினை என்றது நல்வினை, தீவினையாகிய இருவினை களை யென்க. நாம் செய்த நல்வினைக் கீடாகச் சுகமும் தீவினைக்

கீடாகத் துக்கமும் அனுபவிக்கிறோம். நல்வினை தீவினைகளுக் கீடாகவே, மனைவி, மக்கள், சுற்றம், செல்வம் முதலிய சகலமும் பெறுகிறோம். நல்வினை தீவினைகளை வேண்டினும் வேண்டாவிடினும் வரும் வினைகள் வாராமலிராவாம். இதனை,

நாலடியார்

"ஈண்டுநீர் வையத்து ளெல்லாரு மெத்துணையும்
வேண்டார்மற் றீய வினைபய னல்லவை
வேண்டினும் வேண்டா விடினு முறற்பால
தீண்டா விடுத லரிது"

என்பதனானறிக. எனவே இருவினைக் கீடாக எடுத்த தேகமாகலின் 'வினை வழி யுடல்' என்றார். பேறு, இளமை, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு என்பன முன்செய்த வினையளவாகக் கருவிலே யமைந்து கிடப்பனவாகலின் 'வினைவழி யுடலிற் கமைந்துறு முணவு' என்றார். நல்வினையுந் தீவினையுமாகிய இரண்டும் உயிர்கள் இறைவனடி சேரவொட்டாது தடுத்தலிற் பொன் விலங்கும் இருப்பு விலங்கும்போலத் தம்முட் சமமுடையனவென் றுணர்ந்து இவ் விரண்டினிடத்தும் வெறுப்புண்டாகி இருவினைஒப்பு கைவந்தவரே இறைவனடி சேர்தற் குரியவராகலின் 'வினைகொடு புணரா நனை மலர் புனைநின் திருவடி' என்றார். திருவடி-சினைப்பெயர். நனை-அரும்பு. கனை-நெருக்கம். காட்சியின்-ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருள். உலகத்தார் சிவபெருமான் திருவடியை யடையும் பொருட்டுத் தினந்தோறும் வேண்டினரிலர்; அவர்கள் அங்ஙனம் இருப்பின் எவ்வாறு அவர்கள் உஜ்ஜீவிப்பார்கள் அந்தோ பாவம் என்பார் 'நின்றிருவடி யடைவா னொடொறும் வேண்டில ருலகர்' என்றார். முழை இருளுக்கு இடமாகலின், முழையை 'கனை இருள் கரந்த விடம்' என்றார். ஈண்டு கொடு-மூன்றும் வேற்றுமைச் சொல் லுருபு; இடைக்குறையுமாம். புணரா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (46)

மாங்குயின் மிழற்று நாவலூர்ப் புலவன்
மறுப்பவு முடிமிசை யிருத்தும்
பூங்கழ லடியேன் றலைமிசை யிருத்தப்
புகலினு மென்கொனீ யிரங்கா
யோங்குறு மண்ட கோளகை யளவு
முயர்ந்துமோர் மழவிடை முதுகிற்
றாங்குபு நடக்க விருந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) ஓங்குறும் அண்டகோளகை அளவும் - உயர்ந்திருக்கின்ற அண்டத்தின் பரப்புவரையில், உயர்ந்தும் - உயர்ந்திருந்தும், ஓர் மழவிடை-ஒரு இளமை பொருந்திய இடபம், முதுகில் தாங்குபு நடக்க-தன் முதுகின்மேல் தாங்கிச் செல்ல, இருந்திடும்-(அதற்கு இலேசாகத் தோன்றும்படி) எழுந்தருளுகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, மாங்குயில் மிழற்றும் - மாமரங்களிற் குயில்கள் இனிதாகப் பாடுகின்ற, நாவலூர்ப் புலவன்-திருநாவலூரில் திருவவதாரம் செய்த நாவலராகிய நம்பியாரூரர், மறுப்பவும் - தடுக்கவும், முடி மிசை இருத்தும்-அவருடைய முடியின்மேற் சூட்டும், பூங்கழல்-தாமரை மலர்போன்ற திருவடிகளை, அடியேன் தலைமிசை இருத்த-அடியேனுடைய சிரசின்மே லணியும்படி, புகலினும்-அநேக முறை வேண்டிக்கொண்டாலும், நீ இரங்காய்-தேவரீர் இரங்குகின்றிலீர், என் கொல்-என்ன காரணமோ? (அடியேனறியேன்); எ-று.

(வி-ரை ) நாவலூர்ப் புலவன்-சுந்தரமூர்த்தி சுவாமிகள், மறுத்தது-திருவதிகைக் கருகிலுள்ள சித்தவட மடத்தில் என்க. 'அண்ட கோளகை யளவும் உயர்ந்துமோர் மழவிடை முதுகிற் றாங்குபு நடக்க விருந்திடும்' என்றது சிவபெருமான் உமாதேவியாரோடும் சண்முகப் பெருமானோடும் இடப மூர்ந்து செல்லும் இயல்புடையதாகலின் அத்திருக்கோலத்தைக் குறித்ததென்க. 'ஓர்' என்பது சிறுமைப் பொருண்மேனின்றது. தாங்குபு-செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்: தாங்கு - பகுதி, பு - இறந்தகால வினையெச்ச விகுதி.

நாவலூர்ப்புலவர் மறுப்பவும் அவர் முடிமிசை சிவபெருமான் திருவடியை யிருத்திய விவரம்:—சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிதம்பர நடராஜனை தரிசிக்க வரும்போது திருவதிகைக் கருகே சூரியாஸ்த மனமாயிற்று. திருநாவுக்கரசர் திருவவதார க்ஷேத்திரமாகிய அப் பதியை மிதிக்க அஞ்சி அந்நகர் புறத்திலுள்ள சித்தவட மடத்தில் அன்றிரவு நித்திரை செய்தார். அப்போது திருவதிகை வீரட்டா னேசர் அவர்க்கு அருள்புரியத் தாம் ஒரு விருத்த வேதியராய் அம்மடத்திற் கெழுந்தருளி அவர் திருமுடியில் தமது திருவடியை பலகால் வைக்கவும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் சிவபெருமா னுக்கும் வாக்குவாதம் பலமாக இறுதியில் நாவலூரர் தம்மை தலையில் மிதித்தவர் சிவபெருமானென்று அறிந்து வீரட்டானேசர்மேல்.

## தேவாரம்

"தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட
லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்
தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்று
மாசையால் வாழ்கின்ற வறிவிலா நாயேன்
எம்மானை யெறிகெடில வாவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே"

எனவரும் பதிகம் பாடியருளினர் என்பதாம். இதனை,

## பெரியபுராணம்

"திருத்துறையூர் தனைப்பணிந்து சிவபெருமா னமர்ந்தருளும்
பொருத்தமா மிடம்பலவும் புக்கிறைஞ்சிப் பொற்புலியூர்
நிருத்தனார் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று
வருத்தமிகு காதலினால் வழிக்கொள்வான் மனங்கொண்டார்."

"மலைவளர்சந் தகில்பீலி மலர்பரப்பி மணிகொழிக்கு
மலைதருதண் புனற்பெண்ணை யாறுகடன் தேறியபி

ணிலகுபசும் புரவிநெடுந் தேரிரவி மேல்கடலிற்
செலவணையும் பொழுதணையத் திருவதிகைப் புறத்தணைந்தார்."

"உடையவர சுலகேத்து முழவாரப் படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்
திடையுமதற் கஞ்சுவனென் றந்நகரிற் புகுதாதே
மடைவளர்தண் புறம்பணையிற் சித்தவட மடம்புகுந்தார்."

"வரிவளர்பூஞ் சோலைசூழ் மடத்தின்கண் வன்றொண்டர்
விரிதிரைநீர்க் கெடிலவட வீரட்டா னத்திறைதாள்
புரிவுடைய மனத்தினராய்ப் புடையெங்கு மிடைகின்ற
வரிசனமுந் துயில்கொள்ளப் பள்ளியமர்ந் தருளினார்."

"அதுகண்டு வீரட்டத் தமர்ந்தருளு மங்கணரு
முதுவடிவின் மறையவராய் முன்னொருவ ரறியாமே
பொதுமடத்தி னுட்புகுந்து பூந்தாரான் றிருவடிமேற்
பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார் போற்பயின்றார்."

"அந்நிலையா ரூரனுணர்ந் தருமறையோ யுன்னடியென்
சென்னியில்வைத் தனையென்னத் திசையறியா வகைசெய்த
தென்னுடைய மூப்புக்கா ணென்றருள வதற்கிசைந்து
தன்முடியப் பால்வைத்தே துயிலமர்ந்தான் றமிழ்நாதன்."

"அங்குமவன் றிருமுடிமேன் மீண்டுமவர் தாணீட்டச்
செங்கயல்பாய் தடம்புடைசூழ் திருநாவ லூராளி
யங்கென்னைப் பலகாலு மிதித்தனீ யாரென்னக்
கங்கைசடைக் கரந்தபிரா னறிந்திலையோ வெனக்கரந்தான்."

"செம்மாந்திங் கியானறியா தென்செய்தே னெனத்தெளிந்து
தம்மானை யறியாத சாதியா ருளரேயென்
றம்மானைத் திருவதிகை வீரட்டா னத்தமர்ந்த
கைம்மாவி னுரியானைக் கழல்பணிந்து பாடினார்."

ன்பதனுணறிக.

ஈரமு மருளு மொழுக்கமுஞ் சால்பு
மின்சொலு மிந்தியப் பகைவெல்
வீரமு மருளி யெனதுவெம் பிறவி
விலக்கியாட் கொள்ளுநா ளுளதோ
வாரமு மகிலுந் தடிந்துசெம் மணிக
ளரித்தெறிந் தெறுழ்வலிக் குறவர்
சாரலி னிறுங்கு விதைக்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) எறுழ் வலிக் குறவர் - மிகுந்த வலிமையையுடைய வேடர்கள், சாரலில் - மலைச் சாரலில் உள்ள, ஆரமும் அகிலும் தடிந்து-சந்தன மரங்களையும் அகில் மரங்களையும் வெட்டித் தள்ளி, செம்மணிகள் அரித்து எறிந்து-பூமியிலுள்ள செந்நிறமான மாணிக்கக் கற்களை அரித்தெடுத்து அப்பால் வீசி, இறுங்கு விதைக்குறும்-சோளங்களை விதைத்து விளைவிக்கின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, ஈரமும்-அன்பும், அருளும்-கருணையும், ஒழுக்கமும்-நல்வழியிற் பயிலுதலும், சால்பும்-நிறைந்த குணமும் இன் சொலும்-இனிய மொழிகளும், இந்தியப் பகை வெல் வீரமும்-ஐம்பொறிகளாகிய பகையை வெல்லும்படியான மனத்திட்பமும், அருளி-அடியேனிடம் உண்டாகச் செய்து, எனது வெம்பிறவி விலக்கி-அடியேனுடைய கொடுமையான பிறவித் துயரை அகற்றி, ஆட்கொள்ளும் நாள் உளதோ-அடிமையாகக் கொண்டருளுங் காலமும் உளதோ? (அறியேன்); எ-று.

(வி-ரை.) அன்பு - தொடர்புடையார்மாட்டுச் செல்லும் மனநெகிழ்ச்சி. அருள்-தொடர்பு பற்றாது இயல்பாகவே எல்லா வுயிர்களிடத்துஞ் செல்லுங் கருணை. சகலமான வுயிர்களிடத்துஞ் செல்லுங் கருணை பிறவிப்பிணி நீங்கிப் பேரின்ப வீடெய்துதற்கு அன்பு முதலிய குணங்கள் வேண்டற்பாலனவாகலின் அவற்றை முறைபடக் கூறினார். மலையினிடத்து வாழுங் குறவர் ஆரம், அகில், செம்மணி முதலியவற்றைப் பொருட்படுத்தாராகலின். 'தடிந்து' என்றும், 'அரித்து எறிந்து' என்றுங் கூறினார். எறுழ்வலி - ஒருபொருட் பன்மொழியாகலின் சிறப்புப்பொருளுணர்த்தியது. (48)

தொகைமிகு மமரர் முனிவரர் பரவித்
தொழுதகை யொடுவிரை கமழ்பூம்
புகைமிகு மணிமண் டபத்திடை நெருங்கப்
புழுகுநீ யணிதல்கண் டுவந்தேன்
குகைமிகு வாயிற் சோதிமா மரஞ்சேர்
குளிர்மதி விழுங்கவாய் வைத்த
தகைமிகு மூரற் றிரளைநேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) குகை மிகு வாயில் - மலைக் குகையினுடைய பெரிய வாயின்கண் வளர்ந்து நிற்கும், மா சோதி மரம் சேர்-பெரிய சோதி மரத்தின் உச்சியிற் சேர்ந்திருக்கிற, குளிர் மதி-தண்ணிய சந்திரன், விழுங்க வாய் வைத்த-விழுங்கும் பொருட்டு வாயின்கண் வைத்திருக்கின்ற, தகை மிகும்-வெண்ணிற மிகுந்த, மூரல் திரளை நேர்-அன்னத்திரளை ஒத்து விளங்குகின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, விரை கமழ்-வாசனை வீசுகின்ற, பூம்புகை மிகும்-விரும்பத்தக்க புகை மிகுந்த, மணி மண்டபத்திடை - மணிக ளிழைத்த மண்டபத்தில், தொகை மிகும் அமரர் - கூட்டமாகிய தேவர்களும், முனிவரர்-முனிவர்களும், பரவி-துதிசெய்து, தொழுத கையொடு - கும்பிட்ட கைகளுடன், நெருங்க - நெருங்கி நிற்க, நீ புழுகு அணிதல் கண்டு-தேவரீர் புழுகினை அணிந்துகொள்ளுங்காட்சி யைக்கண்டு (தரிசித்து), உவந்தனன்-மகிழ் வெய்தினேன்; எ-று.

(வி-ரை.) சோணசைலப் பெருமானுக்குக் குகையை வாயாக வும், சோதி மரத்தை அன்னப் பாத்திரமாகவும் சந்திரனைப் பாலுடன் கூடிய அன்னமாகவும் உருவகித்தலின் இஃது உரு வகவணி. உருவகவணியாவது, உபமேயத்தி னிடத்து உபமா னத்தின் தன்மையை ஏற்றிக் கூறுவது. இதனை வடநூலார் 'ரூபகாலங்காரம்' என்பர். விரைகமழ் புகை-பஞ்சதூபம், தசாங்கம் முதலியன. மூரல்-அன்னம். கூட்டமாகிய முப்பத்து முக்கோடி தேவராதியர்களும், முனிவர்களும், ஒருவரோடொருவர் நெருங்கித் துதித்த கையோடு பரவ, தேவரீர் புழுகணியும் திருவிழாவைத்

தரிசித்து மகிழ்வெய்தினேன்; இதற்கு எப்புண்ணிய மியற்றினேனே அறிந்திலேன் என்பார், 'தொகைமிகு மமரர் முனிவரர் பரவித் தொழுதகை யொடுவிரை கமழ்பூம் புகைமிகு மணிமண்டபத்திடை நெருங்கப் புழுகுநீ யணிதல்கண் டுவந்தேன்' என்றார். பண்டைக் காலத்தில் ஒரு புழுகுபூனை திருவண்ணாமலையில் எழுந்தருளிய பெருமானுக்குப் புழுகுசாத்தி வழிபட்ட புண்ணிய விசேடத்தால் மறு பிறப்பில் அயோத்திமாநகரில் மனுகுலத்தில் ஏமாங்கதனென்னும் பெயருடைய அரசனாகப் பிறந்து பழம் பிறப்புணர்ச்சிபெற்று இந்த க்ஷேத்ரத்தை யடைந்து புழுகு முதலிய வாசனைத் திரவியங்களைச் சிவபெருமானுக்கு அணிவித்து வழிபட்டுச் சிவப்பேறெய்திய ஐதீகம் பற்றி நடக்கும் மகோற்சவ தரிசனங் கிடைக்கப்பெற்ற ஆர்வ மேலீட்டால் துதித்தவாறு. இச்சரித்திர விரிவை அருணகிரி புராணம் தாரபதி புழுகு சாத்திய சருக்கத்திற் காண்க. சோதிமரம் என்பது பகன்முற்றும் ஏனைய மரங்கள்போலிருந்து இரவில் சோதி மயமாய் விளங்கும் ஓர்வித மரம் என்பர். இதனை,

பெரியபுராணம்

"செந்தழ லொளியிற் பொங்குந் தீபமா மரங்க ளாலு
மந்திகண் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலு
மைந்துமா றடக்கி யுள்ளா ரரும்பெருஞ் சோதி யாலு
மெந்தையார் திருக்கா ளத்தி மலையினி லிரவொன் றில்லை"

எனவருஞ் செய்யுளானறிக. கை-சினைப்பெயர். மண்டபத்திடை என்பதில் இடை ஏழாம்வேற்றுமை உருபு. (49)

சினம்படு முளங்கொன் றவரவை யெனையுஞ்
சேர்ப்பது தகுமுனக் கிசைவண்
டினம்படு மலரி னகவித ழொடுபுல்
லிதழுமொன் றுதலுல குடைத்தே
மனம்படு மடிமை யுளன்சிலை யெறிக்கு
மனங்குழைந் துமையவள் களபத்
தனம்பட வடிவங் குழைந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மனம் படும் அடிமை உளன் - மனத்தில் தொண்டு பூண்டொழுகிய சாக்கியநாயனார், எறிசிலைக்கு - எறிந்த கல்லுக்கு, மனம் குழைந்து-திருவுள்ளம் உருகி, உமையவள் களபம் தனம்பட-பார்வதியினுடைய கலவைச் சாந்தணிந்த தனங்கள்தைக்க, வடிவம் குழைந்திடும் - திருமேனி குழைந்துகாட்டி மகிழ்ந்தருளிய, சோண சைலனே! கைலைநாயகனே!—, இசைவண்டு இனம் படும் மலரின்-இசைபாடுகின்ற வண்டுக் கூட்டங்கள் மொய்க்கின்ற பூக்களினிடத்து; அக இதழொடுபுல் இதழும் ஒன்றுதல் - அகவிதழ்களோடு புறவிதழ்களும் பொருந்தியிருத்தல், உலகு உடைத்து-இவ்வுலக இயற்கையாம் (ஆதலால்), உளம் படும்-உள்ளத்தில் தோன்றுகின்ற, சினம் கொன்றவர் அவை-கோபமாகியகுணத்தை யழித்த அடியார்களின் கூட்டத்தில், எனையுஞ் சேர்ப்பது-அடியேனையுஞ் சேர்த்து வைப்பது, உனக்கு தகும் - தேவரீருக்குப்பொருந்தும்; எ-று.

(வி-ரை.) காஞ்சிப்புராணம்

"வெகுளியே யுயிர்க்கெலாம் விளைக்குந் தீவினை
வெகுளியே குணந்தவம் விரத யாய்க்குமால்
வெகுளியே யறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறொன் றில்லையால்"

எனக் கூறியுள்ளபடி உள்ளத்தே தோன்றுங் கோபத்தை அடக்காதொழிந்தால் அதனாற் பலதீமை விளையுமாகலின், அதனை அழிப்பவரே உண்மை யடியார்களாகலின் 'சினம்படுமுளங் கொன்றவர்' என்றார்.

திருமுருகாற்றுப்படை

"கடுஞ் சினங் கடிந்த காட்சியர்"

எனக் கூறியதுங் காண்க. 'எனையும்' என்புழி உம்மை இழிவுசிறப்புப்பொருளது. இறைவனுக்குச் சாத்துதற்குரிய அக இதழுடன் பூவிதழ் என்னும் இயைபுபற்றிப் புறவிதழும் ஒன்றி நிற்றல்போலத் தானும் அவ்வுண்மை யடியவர்களோ டிருத்தற்குரியவன் என்பதை விளக்க 'சினம்படுமுளங் கொன்றவரவை யெனையுஞ் சேர்ப்பதுதகு முனக்கிசை வண்டினம் படுமலரி னகவிதழொடு புல்லிதழு மொன்

றுத லுலகுடைத்தே' என்றார். சாக்கியநாயனார் அகத்திறற்றொண்டு பூண்டொழுகினாராகலின் 'மனம்படு மடிமையுளன்' என்றார். அக விதழுக்கு அல்லி யென்றும், புறவிதழுக்குப் புல்லி யென்றும் பெயர்.

சாக்கியநாயனார் கல்லெறிக்கு மனங்குழைந்த சரிதம்:—சாக்கிய நாயனார் காஞ்சிநகரையடைந்து பௌத்தராகி அம்மத நூலனைத்தும் ஆராய்ந்து உண்மை காணாது, சிவபிரானிடத் தன்புடையராய், காஞ்சிநகரில் வெளியிடத்துள்ள ஒரு சிவலிங்கத்தைத் தரிசித்துக் கல்லெறிதலை அர்ச்சனையாகக்கொண்டு வழிபட்டு வருநாளில் ஒருநாள் அதனை மறந்து உணவு கொள்ளப்போம்பொழுது நினைத்து விரைந்து வந்து கல்லெறியப் பரமன் விண்ணகத்தே தோன்றி அருள்புரிந்தான் என்பதாம். இதனை,

**திருத்தொண்டர் புராண சாரம்**

"சங்கமங்கை வரும்வேளாண் டலைவர் காஞ்சிச்
சாக்கியரோ டியைந்தவர்தந் தவறுஞ் சைவத்
துங்கமலி பொருளுமுணர்ந் தந்த வேடந்
துறவாதே சிவலிங்கந் தொழுவோர் கண்டோ
ரங்கன்மலர் திருமேனி யழுந்தச் சாத்தி
யமருநாண் மறந்தொருநா ளருந்தா தோடிச்
செங்கலெறிந் திடுமளவின் மகிழ்ந்த நாதன்
றிருவருளா லமருலகஞ் சேர்ந்து ளாரே" எனவும்,

**நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி**

"தகடன வாடையன் சாக்கியன் மாக்கற் றடவரையின்
மகடனந் தாக்கக் குழைந்ததிண் டோளர்வண் கம்பர்செம்பொன்
நிகழ்தரு மேனியிற் செங்க லெறிந்து சிவபுரத்துப்
புகழ்தரப் புக்கவ னூர்சங்க மங்கை புவனியிலே"

எனவும் வருவனவற்று னுணர்க.

உமையவள் களபத்தனம்பட வடிவம் குழைந்த சரிதம்:—ஒருநாள் உமாதேவியார் சிவபெருமானை நோக்கி, சந்திரரும் சூரியரும் யாவரென்று கேட்க, அதற்குச் சிவபெருமான் அந்த இருசுடர்களும்

தன்னுடைய கண்களென்று திருவாய் மலர்ந்தருள, உமாதேவியார் வேடிக்கையாக அவரது திருக்கண்களைத் தன் இரண்டு கைகளாலும் மூடினாள். மூடினவுடன் பூமியும் பூமியிலுள்ள சகல பொருள்களும் கறுத்துபோயின. அச்சமயம் திரிமூர்த்திகள் வந்து சிவபிரானிடம் முறையிட, அவர் தனது நெற்றிக்கண்ணைத் திறக்க உலத்தை மூடியிருந்த இருணீங்கி வெளிச்சம் உண்டாயிற்று. உடனே உமாதேவி கண்களை மூடியபாவம் நீக்கும்படியாக பூலோகத்தில் தொண்டை மண்டலத்திலிருக்கும் காஞ்சிபுரத்திற்கு வந்து கம்பாநதிக் கருகில் மணலைக்குவித்து இலிங்கரூப முண்டாக்கிப் பூஜை செய்யும்போது, சுவாமியின் கிருபையால் கம்பாநதி பெருகிவர, இலிங்கத்திற்கு அபாயம் உண்டாகுமென்று பயந்து காமங்கொண்ட ஆசையினால் அணைபவள்போல் உமாதேவி தன்னுடைய வளையலணிந்த கைகளாலும் இரண்டு ஸ்தனங்களாலும், இறுக விறுகத் தழுவுதலும் வாசனை பொருந்திய சந்தனம் அணிந்த திருமார்பு உருகிக் குழைந்தார் என்பதாம். இதனை,

அருணசலபுராணம்

"மங்கா நதியின் மணலிலிங்க மழியா திருக்கும் வகைபுனையாள்
வெங்கா தலினா லணைபவள்போல் வெற்பா ரிமைய வெற்படன்
சங்கார் காத்தா லிருதனத்தா லிறுக விறுகத் தழுவுதலுங்
கொங்கார் களபத் திருமார்பு முருகி யுருகிக் குழைந்தாரே"

என்பதனையறிக. இச்சரித்திர விரிவை **அருணசல புராணத்தும், காஞ்சிப்புராணத்தும்** காண்க. (50)

வாம்பரி கரிதேர் சிவிகைபொற் குவியன்
மணிப்பணி பெரும்புவி யாட்சி
யாம்பரி சலவென் றன்பத மருவி
னன்றியென் கவிகளென் கவிகள்
காம்பரி முரண்மும் மதகரி வளைத்த
கைவிட மோதலாற் கதிர்த்தேர்த்
தாம்பரி துணுக்கென் றீர்த்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மூரண் மும்மதக் கரி-வலிமை பொருந்திய மூன்று மதங்களையுடைய யானை, காம்பு அரி வளைத்த கைவிட - மூங்கிலை வளைத்த கையை விட்டவுடனே, மோதலால்-(அம்மூங்கில் நிமிர்ந்து சென்று) தாக்குதலால், கதிர் தேர் தாம் பரி-சூரியன் தேரிற் பூட்டிப் பாய்ந்து செல்லும் குதிரைகள், துணுக்கு என்று ஈர்த்திடும்-விரைவாகத் தேரை இழுத்துச் செல்லுகின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, வாம் பரி கரி தேர் சிவிகை - தாவுகின்ற குதிரைகளும் யானைகளும் தேர்களும் சிவிகைகளும், பொன் குவியல் மணி பணி-பொன் திரள்களும், மணிகளிழைத்த ஆபரணங்களும், பெரும் புவி ஆட்சி - பெரிய பூமியை ஆளுதலும் (ஆகிய இவைகள்), ஆம் பரிசு அல என்று - நன்மைக்காந் தன்மையன வல்லவென்று வெறுத்து, உன்பதம் மருவின் அன்றி - தேவரீருடைய திருவடியை வழுத்தும் பேறுபெற்றா லல்லாமல், என் கவிகள் - அடியேனுடைய பாடல்கள், என் கவிகள்-என்ன பயனைத்தரும் பாடல்களாகும்? (ஒரு பயனுந்தரா); எ-று.

(வி-ரை) பரி முதலிய செல்வங்களெல்லாம் அநித்தியமாகலானும், திருவடிப் பேறொன்றே நித்தியமாகலானும் 'வாம்பரி கரி தேர் சிவிகைபொற் குவியன் மணிப்பணி பெரும்புவியாட்சி யாம்பரி சலவென் றுன்பதம்' என்றார். இதனை,

பட்டினத்தார்

"ஊருஞ் சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வம் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே"

என்பதனானறிக. செல்வங்களெல்லாம் அநித்தியமென்று அறிந்து கொண்டு, உலகவாழ்க்கையை வெறுத்து, சிவபெருமான் திருவடியை வழுத்தும் பேறுபெற்றா லல்லாமல் பாடல்கள் அப்பிரயோசனமாமென்பார் 'ஆம்பரி சலவென் றுன்பத மருவி னன்றியென் கவிகளென் கவிகள்' என்றார். கன்னமதம், கபோலமதம், பீஜமதம்

என்னும் மும்மதங்களுடன் வலிமையுமுள்ள யானையானது துதிக் கையினால் மூங்கில்களை வளைத்துப் பிறகு விட்டுவிட அம் மூங்கில்கள் சூரியனுடைய தேரிற் பூட்டப்பட்டுள்ள தாவிச் செல்லும் குதிரை மேல்பட அதனால் அக்குதிரை விரைவாகத் தேரை இழுத்துச் செல்லும் என்பார் 'காம்பரி முரண்மும் மதகரி வளைத்த கைவிட மோதலாற் கதிர்த்தேர்த் தாம்பரி துணுக்கெனத் தீர்த்திடும்' என்றார். வாம், ஆம், தாம் என்பன இடைக்குறைகள். (51)

துன்னுறு துயரப் பிறவிவெங் கொடுநோய்
தொலைப்பினுந் தொலைத்திடா துறினு
நின்னடி மலரை யன்றியான் மறந்து
நினைப்பனோ விறக்கும்வா னவரை
மன்னளி பருக வுடையிறுன் மதுவும்
வாரண மதமும்வெள் ளருவி
தன்னொடு மிகலி யொழுகுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மன் அளி பருக - நிலைபெற்ற வண்டுகள் உண்ணுத லால், உடை இறல் மதுவும்-உடைந்த தேனடையினின்றும் வழி கின்ற தேனும், வாரண மதமும்-யானையினது மத ஜலமும், வெள் ளருவி தன்னொடும் இகலி-வெண்ணிறமாகிய அருவி ஜலத்துடன் மாறுபட்டு, ஒழுகுறும்-ஒழுகப்பெற்ற, சோணசைலனே! கைலைநாய கனே!—, துன்னுறு துயரம்-மிகுந்த துன்பமயமாகிய, பிறவி வெங் கொடு நோய்-பிறப்பாகிய வெவ்விய கொடிய நோயை, தொலைப் பினும் - அடியேனுக்கு ஒழித்தாலும், தொலைத்திடாது உறினும்- ஒழிக்காமல் மேன்மேலும் உண்டாகும்படி செய்தாலும், நின் அடி மலரை யன்றி-தேவரீருடைய திருவடிக் கமலங்களையே யல்லாமல், இறக்கும் வானவரை-அழியும் தன்மையுடைய தேவர்களை, யான் மறந்தும் நினைப்பனோ - அடியேன் மறந்தேனும் நினைப்பேனோ? (நினைக்கமாட்டேன்); எ-று.

(வி-ரை.) காரண காரியத் தொடர்ச்சியாக உயிர்களைப்பற்றி நிற்பதானும், எஞ்ஞான்றும் துன்பமே பயத்தலானும் 'துன்னுறு

துயரப் பிறவிவெங் கொடுநோய்' என்றார். அடியேனுக்குப் பிற வியை ஒழித்தாலும் ஒழிக்காமல் மேன்மேலும் உண்டாகும்படி செய் தாலும் சிவபெருமான் திருவடித்தாமரை மலரையே யல்லாமல் இறக் கும் வானவரை மறந்தேனும் நினைக்கமாட்டேன் என்பார் 'தொலைப் பினுந் தொலைத்திடாதுறினு நின்னடி மலரை யன்றியான் மறந்து நினைப்பனோ விறக்கும் வானவரை' என்றார். வண்டுகள் மொய்த் துண்ணுதலால் தேனடையினின்று ஒழுகும் தேனும், யானையின் மதஜலமும் வெள்ளருவியோடு மாறுபட்டு ஒழுகப்பெறும் என்பார் 'மன்னளி பருக வுடையிறூன் மதுவும் வாரண மதமும்வெள் ளருவி தன்னொடு மிகலி யொழுகுறும்' என்றார். பிரமன், விஷ்ணு, இந்தி ரன் முதலிய எல்லாத் தேவர்களும் பிறந்து இறந்து உழல்வாராக லான் 'இறக்கும் வானவர்' என்றார். இதனை,

### தேவாரம்

"நூறு கோடி பிரமர்க ணொங்கினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
மாறில் கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவ னீச னொருவனே"

எனவும், பிரமனும் விஷ்ணுவும் தத்தமக்குரிய காலவரையறையில் இறப்பதனால், அவர்கள் சங்கியை புலப்படுமாறு அவர்களுடைய நரம்பு என்பு முதலியவற்றைச் சிவபெருமான் திருமேனியில் அணிவ ரென்க. இதனை,

### திருவாசகம்

"நங்காயி தென்னதவ நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடீ
கங்காள மாமாகேள் காலாந்த ரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ"

எனவும் வருமாற்றானறிக. தேன் நிறம் செம்மையும், மதநிறம் கருமையுமாகலின், அது தோன்ற 'வெள்ளருவி தன்னொடுமிகலி'

என்றார். 'அடிமலர்' என்பதில் 'மலர்' என்பது தாமரை மலரைக் குறிக்கின்றது. இதனை,

தேவாரம்

"பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை" எனவும்,

நால்வர் நான்மணிமாலை

"பூவெனப் படுவது பொறிவாழ் பூவே"

எனவும் வருமாற்றானறிக. 'மன்' என்னும் இடைச்சொல் அசைத்து நிற்றற் பொருளிலும், ஒழிந்த சொற்பொருளிலும், ஆக்கப்பொருளிலும், கழிதற்பொருளிலும், மிகுதிப்பொருளிலும், நிலைபெறுதற் பொருளிலும் ஆக இந்த ஆறு பொருளில் 'மன் அளி' என்பதில் மன் என்பது ஈண்டு நிலைபெறுதற் பொருளில் வந்தது. இதனை,

நன்னூல்

"மன்னே யசைநிலை யொழியிசை யாக்கங்
கழிவு மிகுதி நிலைபே றாகும்"

என்பதனு னறிக. ஒழுகுறும் என்பதில் உறு - பகுதிப்பொருள் விகுதி. (52)

நீரினு லழலால் வருங்கொடும் பிணியா
 னிருதரா லலகையால் விலங்காற்
சோரரால் வருந்து மவரலர் நினது
 தூயநா மம்புகன் றிடுவார்
சீருலா மணியா லரிபர வுதலாற்
 றிசையுற நீள்கையா லெழின்மை
சார்தலா லுமையாள் விழிநிகர் சோண
 சைலனே கைலநா யகனே.

(ப-ரை.) சீர் உலாம் மணியால்-சிறப்பமைந்த இரத்தினமணிகளாலும் (கண்மணிகளை யுடைமையாலும்), அரி பரவுதலால் - சிங்கங்கள் உலவுதலினாலும் (செவ்வரி படர்ந்திருத்தலானும்), திசை உறல் கையால்-எட்டுத் திசைகளிலும் பொருந்த நீண்டிருத்தலானும்

(நோக்கம் அமைய நீளமாக இருத்தலானும்), எழில் மை சார்தலால்- மேலெழுந் தன்மையுடைய மேகங்கள் படிதலாலும் (அழகுபொருந் திய மை தீட்டப் பெற்றமையாலும்), உமையாள் விழிநிகர் - பார்வதி யாரின் திருக்கண்களை ஒத்திருக்கின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, நினது தூய நாமம்-தேவரீருடைய பரிசுத்தமான திருப்பெயரை, புகன்றிடுவார்-துதிக்கின்றவர்களை, நீரினுல் அழலால்- நீராலும் நெருப்பாலும், வரும் கொடும் பிணியால் - உண்டாகின்ற கொடிய நோய்களாலும், நிருதரால் அலகையால் - அரக்கர்களாலும் பேய்களாலும், விலங்கால் சோரரால்-துஷ்டமிருகங்களாலும் திருடர் களாலும், வருந்துமவர் அலர்-துன்பப்படுவாரல்லர்; எ-று.

(வி-ரை.) சிவபெருமானுக்கு அளவிறந்த திருநாம மிருப்பினும் அவற்றுள் சிறப்புடையது திருவைந்தெழுத்தே யாகலானும், அஃது இருவினையாற் கட்டுண்டு பிறவிப் பெருங்கடலில் அழுந்திக்கிடக்கும் உயிர்களைக் கரையேற்றும் பேராற்றலுடைத் தாகலானும், ஓதுகின்ற வரை நன்னெறியிற் சேர்ப்பதாகலானும், அத்தகைய மேன்மை யுடைய பஞ்சாக்ர மந்திரத்தைக் குறித்தே ஈண்டு 'தூயநாமம்'என்றார். இத்திரு வைந்தெழுத்தைக் குறித்தே,

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

"துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்தினு" எனவும்,

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" எனவும்,

திருநாவுக்கரசு சுவாமிகள்

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்"

எனவும் வரும் திருப்பதிகங்களால் திருவைந்தெழுத் துண்மை யறிக. எனவே, பஞ்சாக்கரத்தியானம் எல்லாத் துன்பங்களையும் நீக்கும் என்பது கருத்து. இச் செய்யுளில் பின் இரண்டடிகள் சிலேடைப் பொருள் பற்றியன. 'அரிபரவுதலால்' என்பதற்குத் திருமால் வழி படுதலால் எனக்கூறினும் அமையும். 'தூயநாமம் புகன்றிடுவார்' என்பதற்குச் சிவபெருமான் திருநாமங்களைக் கூறுபவர்கள் எனப் பொதுப்படக் கூறினு மமையும். எனவே, சிவபெருமான் திருநாமங்

களைப் புகலாதவர்கள் பலவிதத் துன்பங்களையு மடைவர் எனப் பெறப் பட்டது. இதனை,

பட்டினத்தார் பாடல்

"ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பல வாணர்தமைப்
போற்று தவர்க்கடை யாளமுண் டேயிந்தப் பூதலத்தில்
சோற்றுவி யற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்றே
எற்றாலும் பிச்சை கிடையாம லேக்கற் றிருப்பர்களே"

என்பதனு னறிக. (53)

முகவிளக் கென்ன மணிக்குழை மிளிர
முலைமுகட் டணிபெற மலராள்
பகல்விளக் கென்ன வொளிகெட வரும்பொற்
பாவையர்க் கிரங்கிடா தருளா
யகவிளக் கென்ன வகறிரி நெய்தீ
யாக்குவோ ரின்றியே யெழுந்த
சகவிளக் கென்ன விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** அக விளக்கு என்ன-வீட்டிலேற்றப்படும் தீபம்போல, அகல் திரி நெய் தீ ஆக்குவோர் இன்றியே-தகழியும், திரியும், நெய் யும், நெருப்பும், ஏற்றுகின்றவரும் இல்லாமலே, எழுந்த சகவிளக்கு என்ன - இயல்பாகவே ஒளியுடன் தோன்றிய உலக விளக்கென்று கூறும்படி, விளங்குறும்-பிரகாசிக்கின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, முகம் விளக்கு என்ன - முகத்திற்கு ஒரு தீபமெனக் கூறும்படி, மணிக்குழை மிளிர-அரதனங்க ளிழைத்த காதணிவிளங்க, முலை முகடு அணி பெற - தனங்களின்மேல் ஆபரணம் விளங்கித் தோன்ற, மலராள்-இலக்குமி, பகல் விளக்கு என்ன - பகலில் எரியும் விளக்கைப்போல, ஒளி கெட-தம்முள் ஒளி மழுங்க, வரும் பொன் பாவையர்க்கு - வருகின்ற அழகிய மகளிர் பொருட்டு, இரங்கிடாது அருளாய்-ஆசைகொண்டு மனம் வருந்தாமல் அருள்புரிக; எ-று.

**(வி-ரை.)** இருளை நீக்கிப் பொருள்களை விளக்குதலின் விளக்கு எனப்பட்டது. மணிக்குழைகள் முகத்திற்கு ஒரு தீபம் என்று சொல்

லும்படி விளங்குகின்றமையால், 'முகவிளக் கென்ன மணிக்குழை மிளிர' என்றார். 'முலை முகடு' என்புழி, முகடு என்பதற்கு உச்சி யெனப் பொருள்கூறினும் அமையும். இலக்குமி பகலில் எரியும் விளக்கைப்போல தம்முன் ஒளி மழுங்க வருகின்ற பொற்பதுமை போல்வாராகிய மகளிர் பொருட்டுக் காதல்கொண்டு மனம் வருந்தாத படி கிருபை செய்வீராக எனப் பெருமானைப் பிரார்த்திப்பார் 'மலராள் பகல் விளக்கென்ன வொளி கெடவரும் பொற்பாவையர்க் கிரங்கிடா தருளாய்' என்றார். எனவே, பகல் விளக்கென்றது, சூரி யன்முன் ஏற்றப்படும் எல்லாத் தீபங்களும் ஒளி மழுங்கல்போல ஒளி குறைய என்ற பொருளில் நின்றது. வீட்டி லேற்றப்படும் தீபம் போல அகலும், திரியும், நெய்யும், நெருப்பும் ஏற்றுவோரும் இல்லா மல் இயல்பாகவே ஒளியுடன் தோன்றிய உலகதீபமென்று அன்பர் கள் துதிக்குமாறு பிரகாசிக்கும் சோணசைலம் என்பார் 'அகவிளக் கென்ன வகறிரி நெய்தீ யாக்குவோ ரின்றியே யெழுந்த சகவிளக் கென்ன விளங்குறும்' என்றார். 'அகவிளக்கு' என்புழி, "அகமனம் மனையே பாவம்" என நிகண்டில் கூறப்பட்டிருப்பினும் ஈண்டு வீடு என்னும் பொருளில் வந்துள்ளது. வீட்டில் ஏற்றப்படும் விளக்குக்கள் போலாது தானே தோன்றிய தாதலாலும், புறவிருளை நீக்கும் தீபத் துடன் மாறுபட்டு, அகத்திருளாகிய ஆணவமுதலிய இருளை நீக்கும் இயல்புடைய தாதலாலும் 'எழுந்த சகவிளக்கு' என்றார். பெண் ணாசைக்குக் காரணம் அஞ்ஞானமாகலின், அதனை அகற்றி, அவ் வாசையையுங் கெடுத்து அருள் புரிக எனச் சிவபெருமானை வேண்டு கின்றார் என்பது கருத்து. (54)

நீலியோ டுனைநா டொறுமருச் சித்து
நின்றொழில் புரிந்திட வுடற்குக்
கூலியோ தனமென் றளிப்பவர்க் கன்றிக்
கூற்றினைக் கடக்குமா றெளிதோ
மாலியோ சனையின் வணங்குறுங் கைலை
மலைநிவே தித்திடக் குவித்த
சாலியோ தனமென் றிடத்திகழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மால்-திருமாலும், யோசனையின் வணங்குறும்-நெடுந் தூரத்தே நின்று வணங்கும்படியான, சைலம் மலை - திருக்கைலாச மலையானது, நிவேதித்திடக் குவித்த-நிவேதனஞ் செய்யும் பொருட்டாகக் குவிக்கப்பட்டிருக்கின்ற, சாலி ஓதனம் என்றிடத் திகழ்-செந்நெல்லாலாய அன்னமென (எதிரில்) விளங்கப்பெற்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, நீலியோடு உமை - பார்வதி தேவியுடன் கூடியிருக்கின்ற தேவரீரை, நாள்தொறும் அருச்சித்து-தினமும் பூசனை புரிந்து, நின் தொழில் புரிந்திட-தேவரீருடைய திருப்பணியைச் செய்வதற்காக, உடற்கு கூலி-இவ்வுடம்பிற்குக் கொடுக்கப்படுங் கூலிப்பொருள், ஓதனம் என்று அளிப்பவர்க்கு அன்றி-அன்னமென்று உணர்ந்து கொடுக்கின்ற பெரியோர்களுக்கேயல்லாமல், கூற்றினைக் கடக்கும் ஆறு எளிதோ-இயமனைக் கடந்து செல்லும் தன்மை எளிதாமோ; எ-று.

(வி-ரை.) நீலி-நீலநிற உருவமுடையவள் (உமாதேவி)

சிவப்பிரகாசம்

"பாந்தபரா பரையாதி பரன திச்சை
பராஞானங் கிரியைபர போக ரூபந்
தருங்கருணை யுருவாகி விசுத்தா சுத்தத்
தனுகரண புவனபோ கங்க டாங்க
விரிந்தவுபா தானங்கண் மேவி யொன்றாய்
விமலமா யைந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்
தரங்கைகெட மணிமன்று ளாடல் காணு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்"

எனக் கூறியபடி உமாதேவியார் கருணைத் திருவுருவ முடையாராகலானும், பஞ்சகிருத்தியங்களுக்கும் காரணியாகலானும்,

திருக்களிற்றுப்படியார்

"நங்கையினா ளுமைனத்துஞ் செய்தாற்போ னடனைத்து
நங்கையினாற் செய்தளிக்கு நாயகனு-நங்கையினு

நம்பியாய்த் தானடுவே நாட்டப் பெறுமிதுகாண்
எம்பெருமா ஞர்த மியல்பு"

எனக் கூறியபடி சிவபெருமான் செய்யும் கிருத்தியங்களுக்கெல்லாம் சத்தி காரணமா யிருப்பளாகலானும்,

திருவாசகம்

"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடி
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ"

எனக் கூறியபடி உமாதேவி வாமபாகத்தி லமர்ந்த மேன்மையானும் 'நீலியோடுனே' என்ருர். உமாதேவியாருடன் சிவபெருமானையும் தினந்தோறும் பூசித்து அப்பெருமானுடைய திருத்தொண்டினையே செய்து வருவதற்கும் அத்திருத்தொண்டின் பயனுக மோக்ஷமடைய விரும்புவோர்களுக்குத் தேகத்தின் மேற்பற்று இல்லையாயினும், சிவ வழிபாட்டிற்கும் சிவனடியார் வழிபாட்டிற்கும் தேகம் வேண்டி யிருத்தலின், திருத்தொண்டினைச்செய்து வருவதற்குத் தேகத்திற்குக் கூலியாகக் கொடுக்கற்பாலது அன்னமெனத் தேர்ந்து கொடுக்கும், துறவிகட்கே யல்லாது உடல்மேல் பற்றுள்ளவர்களாய்ப் போகாதி களை அனுபவிப்பதின் பொருட்டுத் தேகத்தைப் பாதுகாக்கும் தேகாபிமானிகளுக்கு இயமனைக் கடத்தலரிது என்பார் 'நீலியோ டுனை நாடொறு மருச்சித்து நின்ருெழில் புரிந்திட வுடற்குக் கூலி யோதனமென் றளிப்பவர்க் கன்றிக் கூற்றினைக் கடக்குமா றரிதோ' என்ருர். 'நின்தொழில்' என்பதால் சிவபிரானுக்குரிய திருத் தொண்டு சிவபூசை அன்பர்பூசை முதலியனவெல்லாம் கொள்க. யோசனை யென்பது நெடுந்தூரம் என்னும் பொருளைக் குறிக்கும். 'மால் யோசனையின் வணங்குறும்' என்றதனுல் ஏனைய பிரமாதி தேவர்கள் அணுகுதற்கும் உரியரல்லர் என்பது பெற்ரும். 'கைலைமலை சாலியோதன மென்றிடத்திகழ் சோணசைல' மென்பது மலையின் பெருமையைக் குறித்ததென்க. (55)

தோற்றிடும் பிறவி யெனுங்கடல் வீழ்ந்து
துயர்ப்பிணி யெனுமலை யலைப்பக்
கூற்றெனு முதலை விழுங்குமுன் னினது
குரைகழற் கரைபுக விடுப்பா
யேற்றிடும் விளக்கின் வேறுபட் டகத்தி
னிருளெலாந் தன்பெய ரொருகாற்
சாற்றினு மொழிக்கும் விளக்கெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) ஏற்றிடும் விளக்கின் வேறுபட்டு-உலகத்தில் ஏற்றப் படுகின்ற தீபங்கட்கு மாறுபாடுடையதாய், தன் பெயர் ஒருகால் சாற்றினும்-தமது திருநாமத்தை ஒரு தடவை சொன்னபோதிலும், அகத்தின் இருளெலாம் ஒழிக்கும்-அவர்களுடைய அகவிருளாகிய ஆணவ முதலியவற்றை அகற்றுகின்ற, விளக்கு எனும்-விளக்கென்று சொல்லும்படியான, சோணசைலனே! கைலைநாயகனே!—, தோற் றிடும்-உண்டாகின்ற, பிறவி எனுங் கடல் வீழ்ந்து-பிறப்பாகிய சமுத் திரத்தில் விழுந்து, துயர் பிணி எனும் அலை அலைப்ப-துன்பத்தைத் தருகின்ற நோய்களாகிய அலைகள் இடையே அலையும்படி செய்ய, கூற்றெனு முதலை விழுங்குமுன் - இயமனென்னும் முதலையானது அடியேனை நெருங்கி உண்பதற்கு முன்பு, நினது குரை கழல் புக விடுப்பாய்-தேவரீருடைய ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடி யாகிய கரையிற் போம்படி அருள் செய்வீராக; எ-று.

(வி-ரை.) பிறவியைக் கடலென்றும், பிணியை அலையென் றும், இயமனை முதலையென்றும் திருவடியைக் கரையென்றும் உருவகித்தமையால் இஃது உருவகவணி; வடநூலார் இதனை "ரூபகா லங்காரம்" என்பர். புறத்திலுள்ள இருளை மாத்திரம் நீக்கும் உலக விளக்கைப்போ லல்லாமல், தன் பெயரை ஒருதரம் சொன்னவர்க ளுடைய மல இருளையும் போக்கும் தன்மையுடைத்தாகலின் "ஏற் றிடும் விளக்கின் வேறுபட் டகத்தி னிருளெலாம் தன்பெய ரொரு காற் சாற்றினு மொழிக்கும் விளக்கெனும்' என்றார். கடல் வீழ்ந்து-ஏழாம் வேற்றுமைத்தொகை. தோற்றிடும், ஏற்றிடும்: என்பன வற்றுள் இடு என்பது பகுதிப்பொருள் விகுதி. (56)

கந்தர மிருந்து மடகுநீ ரயின்றுங்
 கரநிலத் தமைத்திரு பதமு
மந்தர நிமிர்த்து நின்னிலை யறியா
 ரரும்பவ மொழியுமோ வுரையா
யிந்திரன் வனத்து மல்லிகை மலரி
 னிண்டைசாத் தியதென நிறைந்த
சந்திரன் முடிமேல் வந்துறுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) இந்திரன்-தேவேந்திரன், வனத்து மல்லிகை மலரின் தன்னுடைய நந்தவனத்திலுள்ள மல்லிகை மலர்களாற் கட்டிய இண்டை சாத்தியது என-கொண்டை மாலையைச் சாத்தியதென கூறும்படி, நிறைந்த சந்திரன்-முழு மதியானது, முடிமேல் வந்து உறும்-திருமுடியில் வந்து தங்கப்பெற்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, நின்நிலை அறியார்-தேவரீருடைய உண்மை நிலையை உணராதவர்கள், கந்தரம் இருந்தும் - மலைக்குகையில் வசித்தும் அடகு நீர் அயின்றும்-இலைகளையும் நீரையும் உணவாகக் கொண்டும் கரம் நிலத்து அமைத்து-கைகளைப் பூமியில் ஊன்றி, இருபதமும் அந்தரம் நிமிர்த்தும் - இரண்டு கால்களையும் மேலேதூக்கித் தலை கீழாக நின்று தவம்புரியினும், அரும்பவம் ஒழியுமோ - கடத்தற் கரிய பிறவி நீங்குமோ?, உரையாய் - உரைத்தருள்வீராக; எ-று.

(வி-ரை.) சிவபெருமானது உண்மை நிலையாகிய தன்வயத்த னாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், இயல் பாகவே பாசங்களினீங்குதல் முதலிய எண்குணங்களை உணராப் பெருதவர்கள் கடுந்தவங்களைக் காலவரையின்று செய்யினும் பயன் தராது ஆகலின் 'நின்னிலை யறியார் அரும்பவ மொழியுமோ' என்றார் எனவே, கடவுள் நிலையை உள்ளவாறு உணர்ந்தவர்கள் செய்யும் கருமங்களே பயன்தரும் எனவும், ஏனையோர் செய்யும் கருமயோகங் கள் பயன்தரா வென்பதும் பெற்றாம். அரும்பவம் என்பது-பொறுத் தற்கரிய துயர் செய்யும் பிறவியை யென்க. சோணசைலம் சந்திர மண்டலம் வரையில் உயர்ந்திருத்தலின், வெண்மதிப்பிறை திரு முடியில் தவழுதல், தேவேந்திரன் மல்லிகை மலரால் புனையப்பட்ட

இண்டை சாத்தியதுபோ லிருக்கின்றதென்பார் 'இந்திரன் வனத்து மல்லிகை மலரி னிண்டை சாத்தியதென நிறைந்த சந்திரன் முடிமேல் வந்துறும்' என்றார். (57)

கூம்புறு கரமு மலர்ந்திடு முகமுங்
கொண்டுநின் றனைவலம் புரிவோர்
மேம்படு சரண மலர்ப்பொடி மேனி
மேற்படிற் பவம்பொடி படுமே
பூம்பொழிற் புகலிக் கிறைவனு னிலஞ்சேர்
புண்ணியத் தலங்களி னடைந்து
தாம்புனை பதிகந் தொறும்புகழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) பூம் பொழில் - பூக்கள் நிறைந்த சோலை சூழ்ந்த, புகலிக்கு இறைவன் - காழி வேந்தராகிய திருஞானசம்பந்தர், நால் நிலம் சேர் புண்ணியம் தலங்களின்-நால்வகை நிலத்திலுள்ள நன்மை தரும் திருப்பதிகளில், அடைந்து - சென்று, தாம்புனை பதிகந் தொறும்-தாம் துதிக்கின்ற ஒவ்வொரு பதிகத்தினும், புகழ் - புகழு கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, கூம்புறு காமும்-குவிந்திருக்கின்ற கைகளும், மலர்ந்திடும் முகமுங்கொண்டு-மலர்ந்த முகமு முடையவர்களாய், நின் தனை வலம் புரிவோர்-தேவரீரை வலம் வருகின்றவர்களுடைய, மேம்படு சரணம் மலர் பொடி - மேன்மை பொருந்திய திருவடித் தாமரையிலிருந்து எழுந் தூளிகள், மேனி மேல் படில்-அடியேனுடைய உடம்பில் படுமாயின், பவம் பொடிபடுமே-அடியேன் பிறவி அழிந்தொழியுமே! (அங்ஙனம் பெற்றிலேன்); எ-று.

(வி-ரை.) திருவண்ணாமலையை வலம்புரிவோர் குவிந்திருக் கின்ற கைகளும், மலர்ந்தமுகமுடையவர்களாய் வலம்புரிகிறார்களாக லின், 'கூம்புறு காமு மலர்ந்திடு முகமுங் கொண்டுநின் றனைவலம் புரி வோர்' என்றார். இதனை,

அருணாசலபுராணம்

"அந்தமலை வலம்புரிந்தோர் சிவனிருக்குங்
கயிலையினி லேகும் போதிற்

சந்திரன்வெண் குடையெடுக்கு மிரவிவிளக்
கெடுக்குமங்கை தருமந் தாங்கு
மந்திரமே லிந்திரனூர் வழிக்குமலர்ப்
பரப்பிடுவா னளகை கோமான்
வந்தனைசெய் தருகுவருங் கந்தமலர்
மழைசொரிவர் வசுக்க டாமே"

என்று கூறியுள்ளபடி, இந்த அருணசைலத்தை வலம்புரிந்தவர்கள் கைலாயமலையைச் சேரும்போது சந்திரன் வெள்ளைக்குடை பிடிப்பான்; சூரியன் தன்னுடைய கையினாலே விளக்கெடுப்பான்; இந்திரன் வருகிற வழியில் மலர்களைப் பரப்புவான்; குபேரன் தண்டஞ்செய்து சமீபத்தில் வருவான்; அஷ்டவசுக்கள் பூமாரி பொழிவார்கள். இத்தகைய மேன்மை யடைபவர்களான தேவரீரைப் பிரதக்ஷிணம் செய்யும் சிவனடியார்களுடைய மேன்மை வாய்ந்த திருவடித் தாமரையில் எழுந் தூளிகள் அடியேன் தேகத்தில் படுமாயின் பிறவி அழிந்தொழியும்; ஆனால் அடியேன் அங்ஙனம் பெற்றேனில்லையே என வருந்துவார் 'மேம்படு சரண மலர்ப்பொடி மேனி மேற்படிற் பவம்பொடி படுமே' என்றார். எனவே, எதனானும் தீராத பிறவிப் பிணியைத் தீர்க்கும் மருந்து அடியார்களின் பாத தூளியே என்பது பெறப்பட்டது. இக்கருத்தையே,

### பட்டினத்தார் பாடல்

"ஒடுவிழுந்து சீப்பாயு மொன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன்-கடுவருந்துந்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவில்
போவா ரடியிற் பொடி"

என்னுஞ் செய்யுளிற் கூறப்பட்டுள்ள தறிக. நானிலம்: முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தமது திருப்பதிகள் ஒவ்வொன்றிலும் சோணசைலத்தைப் புகழ்ந்தே ஒரு திருப்பாடல் அருளிச்செய் திருக்கின்றாராகலின் 'தாம்புனை பதிகந் தொறும்புகழ் சோணசைலனே' என்றார். 'பதிகம் தொறும்

புகழ்' எனப் பொதுப்படக் கூறினாரேனும், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் ஒவ்வொரு திருப்பதியில் திருவாய்மலர்ந்தருளிய திருப்பதிகங்கள் ஒவ்வொன்றிலும் பெரும்பாலும் ஒன்பதாவது திருப்பாடலில் இந்த க்ஷேத்திரத்தின் விபவம் கூறியிருக்கிறது. ஒரோவழி ஒன்பதாவது திருப்பாடலில் கூறாது விடுத்து வேறே எந்த எண்ணுள்ள திருப்பாடலிலாகிலும் கூறியுள்ளார். எனவே, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருப்பதிகள்தோறும் சோணசைலத்தைக் கூறியிருக்கின்றது அறிக. இதனை, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரத்தில் கண்டு நீங்களே உணரலாம். (58)

கானமே மருவும் விலங்கினுங் கடையேன்
கற்பவை கற்றிலேன் விடய
ஞானமே யுடையே னறிஞரைக் காணி
னாணிலே னுய்யுநா ளுளதோ
வானமே யளவு நெடுங்கிரி மலய
வாதமோ துறுபவர் கட்குத்
தானமே யுதவ வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** வானம் அளவும் - ஆகாயத்தை யளாவியிருக்கின்ற, நெடு மலயகிரி வாதம்-பெரிய பொதியமலையி லிருந்துவரும் தென்றற் காற்றினால், மோதுறுபவர்கட்கு-தாக்கப்படுகின்றவர்கட்கு, தானம் உதவ-புகலிடம் கொடுப்பதற்காக, வளர்ந்திடும் - வளர்ந்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, கற்பவை கற்றிலேன்-படித்துணர வேண்டியவற்றைப் படித்துணர்ந்திலேன், விடய ஞானமே உடையேன் - பொறிகளால் நுகரப்படும் புலன்களின்மீது ஆசை கொண்டிருக்கிறேன், அறிஞரைக் காணின்-ஞானமுடைய பெரியவர்களைக் கண்டால், நாணிலேன்-நாணமடைகிலேன் (ஆகலின்), கானமே மருவும் விலங்கினும் - காட்டில் வாழுகின்ற விலங்குக் கூட்டத்தினும், கடையேன் - இழிவுடையவனா யிருக்கின்றேன், உய்யும் நாள் உளதோ - இத்தகைய அடியேன் உய்தற்குரிய நாளும் உண்டோ? எ-று.

(வி-ரை.) திருக்குறள்

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்"

எனக் கூறியுள்ளபடி கல்லாதோர் விலங்கனைய ராகலான் தமது கல்வி யறிவின் சிறுமையை நொந்து 'கானமே மருவும் விலங்கினுங் கடையேன்' என்றார். 'விலங்கினும்' என்பதில் 'இன்' உறழ்வுபொருள்.

நீதிநெறிவிளக்கம்

"அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாங்-கலகல"

எனக் கூறியுள்ளபடி கற்க வேண்டியதான வேதாகமங்களையும்,

"உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மைப் பிரகாசம்-வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று"

என்கிற செந்தமிழ்ச் சித்தாந்த சாத்திரம் பதினன்கையும், ஓதியுணராமலும், தமிழ்வேதமாகிய தேவார திருவாசகங்களைப் பண்ணோடத்தியயனம் பண்ணாமலும் பொறிகளால் நுகரப்படும் புலன்களின்மீது ஆசைகொண் டிருக்கின்றேனென்பார் 'கற்பவை கற்றிலேன் விடய ஞானமே யுடையேன்' என்றார். தென்றற் காற்றானது, ஆகாயத்தை யளாவி யிருக்கின்ற பெரிய பொதியமலையிலிருந்து தோன்றுவதால், 'வானமே யளவு நெடுங்கிரி மலய வாதம்' என்றார். தென்றிசையி லிருந்து வரும் மலய வாதத்தால் மொத்துண்டு திகைத்து நிற்பவர்களாகிய காமிகளும் துறவிகளும் ஆகிய இருதிறத்தவர்களுக்கும் அத்திசைப்பினை யகற்றிப் புகலிடம் கொடுப்பதற்காக வளர்ந்திருக்கின்ற சோணசைலம் என்பார் 'மோதுறு பவர்கட்குத் தானமேயுதவ வளர்ந்திடும்' என்றார். ஸ்தலம் என்னும் வடமொழி தமிழில் தலம் எனத்திரிந்து வந்தது: ஸ்தனம் என்பது தனம் எனத்திரிந்து வருதல் போல. 'வளர்ந்திடும்' என்புழி இடு-பகுதிப்பொருள் விகுதி. (59)

விழைவொடு மறஞ்செய் துய்கவென் றுரைக்கும்
விதியினைக் கவளமுண் கெனவுங்
கழைசுளி நெடுநல் யானையின் முனிந்து
கடக்குமென் பவமொழிந் திடுமோ
மழைமுகில் வந்து தவழ்ந்துவிண் படரு
மலிதரு புகையென வெழுந்து
தழலுரு வுண்மை விளக்குறுஞ் சோணா
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மழை முகில் வந்து தவழ்ந்து-நீர் நிறைந்த கரியமேகம வந்து படிந்து, விண் படரும் மலிதரு புகை என-ஆகாயத்தி லெழும் பிச் செல்லுகின்ற மிக்க புகைபோல, எழுந்து தழல் உரு உண்மை விளக்குறும்-தோன்றி (இம்மலையுருவம்) அக்கினி சொரூபம் என் னும் உண்மையைப் புலப்படுத்துகின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, கவளம் உண்க எனவும் - பாகன் கவளத்தை உண்க என்று உரைக்கவும், கழைசுளி நெடுநல் யானையின் - (அதனைச் செய் யாமல்) குத்துக்கோலை முறிக்கச் செல்லுகின்ற உயரமான நல்ல இலக்கண மமைந்த யானைபோல, விழைவொடும் அறம் செய்து உய்க என்று-அன்போடும் தருமத்தைச் செய்து மேன்மை யடைவா யென்று, உரைக்கும் விதியினை-சொல்லுகின்ற விதியை, முனிந்து கடக்கும்-வெறுத்துப் புலன் வழியே செல்லுகின்ற, என் பவம் ஒழிந் திடுமோ - அடியேனது பிறவி நீங்குமோ? (அடியேன் அறி யேன்); எ-று.

(வி - ரை.) அன்பினோடும் தருமத்தைச் செய்து மேன்மை யடைவா யென்று சொல்லுகின்ற விதியினைப் பாகன் கவளத்தை உண்க வென்று சொல்லவும் யானையானது கவளத்தை உண்ணமல் குத்துக்கோலை முறிக்கச் செல்லுகின்றதுபோலத் தருமஞ் செய்ய வெறுப்படைவே னென்பார் 'விழைவொடு மறஞ்செய் துய்கவென் றுரைக்கும் விதியினைக் கவளமுண் கெனவுங் கழைசுளி யானையின் முனிந்து' என்றார். அறம் செய்ய வேண்டியது அத்தியாவசிய

மாகலானும், அறத்தால் பலபலன்களையும் எய்துதல் திண்ணமாக லானும் 'அறஞ் செய்துய்க' எனக் கூறப்பட்டது. இதனை,

காஞ்சிப்புராணம்

"அறமே மறங்கண் முழுதழிக்கு
மறமே கடவு ளுலகேற்று
மறமே சிவனுக் கொருவடிவ
மாகுஞ் சிவனை வழிபடுவோர்க்
கறமே யெல்லாப் பெருமயனு
மளிக்கும் யார்க்கு மெவ்விடத்து
மறமே யச்சந் தவிர்ப்பதென
வறைந்தான் சாதா தபமுனிவன்" என்பதானறிக.

அறம் முப்பத்திரண்டு வகைப்படும். அவையாவன:—ஆதுலர்க்குச்சாலை - ஓதுவார்க்குணவு - அறுசமயத்தார்க்குண்டி - பசுவுக்குவாயுறை-சிறைச்சோறு-ஐயம்-தின்பண்டநல்கல் - அறவைச்சோறு - மகப்பெறுவித்தல்-மகவு வளர்த்தல்-மகப்பால் வார்த்தல் - அறவைப்பிணஞ்சுடுதல்-அறவைத்தூரியம்-சுண்ணம்-நோய் மருந்து - வண்ணான்-நாவிதன்-கண்ணாடி-காதோலை - கண்மருந்து - தலைக்கெண்ணெய் - பெண்டுபோகம்-பிறர்துயர் காத்தல் - தண்ணீர்ப்பந்தல் - மடம்-தடம்-சோலை-ஆவுரிஞ்சுதறி-விலங்கிற் குணவு-ஏறுவிடுத்தல்-விலைகொடுத் துயிர்காத்தல்-கன்னிகாதானம் என்பனவாம். இதனை,

இரத்தினச்சுருக்கம்

"வண்ணான்புன் னாவிதன் காதோலை சோலை மடந்தடம்வெண்
சுண்ணம் பறவைப் பிணஞ்சுடற் றூரியஞ் சோறளித்தல்
கண்ணாடி யாவிற் குரிஞ்சுகல் வாயுறை கண்மருந்து
தண்ணீர்ப் பந்த றலைக்கெண்ணெய் பெண்போகந் தாலையமே."

"மேதகு மாதுலர்க் குச்சாலை யேறு விடுத்தல்கலை
யோதுவார்க் குண்டி விலங்கிற் குணவோ டுயர்பிணிநோய்க்
கீதன் மருந்து சிறைச்சோ றளித்த லியல்பிறரின்
மாதுயர் காத்தனற் கன்னியர் தானம் வழங்கலுமே."

"கற்ற வறுசம யத்தார்க் குணவு கருதும்விலை
யுற்ற தளித்துயர் மீட்டல் சிறுருக் குதவனற்பான்
மற்று மகப்பெறு வித்தல் சிறுரை வளர்த்தலெனப்
பெற்ற விவற்றினை யெண்ணுன் கறமெனப் பேசுவரே."

என்பனவற்றுன றிக. அறம் என்பதற்குச் சிவபுண்ணியமெனக் கூறினு மமையும். விதியாவது, இவை செயற்பாலனவென்று வேத முதலாகிய உண்மைநூல்களில் அறுதியிட்டனவாம். உண்க என,என்று வரவேண்டியது, அவ்வாறு வராமல் 'உண்கென' என்று உண்க என்பதன் ஈற்று அகரந் தொக்கு வந்தது. இவ்வாறு வருவது செய்யுள் விகாரத்தின் பாற்பட்ட தொகுத்தல்விகாரம். இதனை,

நன்னூல்

"வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல்
விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி"

என்பதனுனறிக. 'கழை' என்பதற்குக் கரும்பென்றும் பொருள். கரிய மேகம் ஆனது வந்து படிந்து ஆகாயத்தி லெழும்பிச் செல்லுகின்ற மிக்க புகைபோலத் தோன்றி இம்மலையுருவம் அக்கினி சொரூபம் என்னும் உண்மையைப் புலப்படுத்துகின்றதென்பார்'மழை முகில்வந்து தவழ்ந்து விண்படரு மலிதரு புகையென வெழுந்து தழலுரு வுண்மை விளக்குறும்' என்ருர். அரி பிரமர் தேடிக் காணுதற்கரிய அக்கினி வடிவமாய் நின்றமையாலும், "சோணசைலன்" எனப் பேரேற்றமையாலும், 'தழலுறு வுண்மை விளக்குறுஞ் சோணசைலனே" என்ருர். இதனை,

அருணசலபுராணம்

"நடுக்கமுறு முனிவரெலா மமரரெலாம்
பயந்தவிர நாக மீது
படுக்கைபுரி திருமாலும் பங்கயத்தி
னுறுமயனும் பகைமை தீர
வடுக்கியிடும் புவனமெலா மடுக்கழியா
திருக்கமனத் தருள்வ தாகித்

தடுக்கரிய தழலுருவத் தோருவரையா
யிருவரையுந் தடுப்ப தானான்"

எனவருஞ் செய்யுளா னுணர்க. விதியினை முனிந்து கடக்கும் என்பவும் எனக் கூட்டிமுடிக்க. (60)

வாத்திய முழங்கச் சிவிகையுங் கரியு
மாறியூர்ந் துலவிவாழ்ந் தவரு
மேத்திய மொழியோ டிரக்கையா னின்குற்
றேவலே வாழ்வென வறிந்தேன்
பாத்திய மணிகள் கொண்டிழைத் திலங்கும்
பாரவா சிகைமணி மேகஞ்
சாத்திய தெனவில் வளைந்துறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) பாத்திய மணிகள் கொண்டு - பொறுக்கப்பட்ட நல்ல மணிகளால், இழைத்து இலங்கும் - பதிக்கப்பட்டு விளங்குகின்ற, பாரம் வாசிகை - பெரிய திருவாசிகையை, மணி மேகம் சாத்தியது என-நீலநிறமான மேகஞ் சாத்தியதுபோல, வில் வளைந்துறும் - "இந்திரதனுசு" என்னும் வில் மேலே வளைந்திருக்கப் பெற்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, வாத்தியம் முழங்க - பலவிதமான வாத்தியங்களும் ஒலிக்க, சிவிகையும் கரியும் மாறி ஊர்ந்து-பல்லக்கிலும் யானையின்மேலும் மாறிமாறி ஏறிச்சென்று, உலவி வாழ்ந்தவரும்-எவ்விடங்களிலும் சஞ்சரித்து வாழ்ந்த பெரும் பொருளுடையவரும், ஏத்திய மொழியோடு இரக்கையால் - (நல்வினை யகன்ற காலத்தில்) பிறர் கடைவாயிலை யடைந்து அவர்களைப் புகழ்ந்துரைக்கும் சொற்களோடு நின்று யாசிக்கக் காண்டலின், நின் குற்றேவலே வாழ்வு என-தேவரீருடைய திருவடித் தொண்டுபுரிதலே மேலானதென்று, அறிந்தேன்-நிச்சயமாக உணர்ந்தேன்; எ-று.

(வி-ரை.) வாத்தியம்-தோற்கருவி, தொளைக்கருவி, நரம்புக் கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என ஐந்து வகைப்படும். 'வாழ்ந்தவரும்' என்புழி உம்மை உயர்வு சிறப்புப்பொருளை யுணர்த்தியது.

### திருக்குறள்

"அறத் தாறிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

எனக் கூறியபடி புண்ணிய விசேடத்தால் வெண்கொற்றக் குடையும் நவமணிமுடியுஞ் சிங்காதனமுங் கொண்டு பஞ்சவாத்தியங்கள் கோஷிக்கப் பல்லக்கிலும் யானையிலும் வேண்டியவாறு மாறிமாறி யேறிச் சென்று எவ்விடத்திலும் சஞ்சரித்து வாழ்ந்த உலகமுழுதும் ஒரு குடைக்கீழாளும் அரசுரிமைப் பேறும் நிலையில்லாது அழியுந் தன்மை யுடையதாதலால் 'வாத்திய முழங்கச் சிவிகையுங் கரியு மாறி யூர்ந்துலவி வாழ்ந்தவரு மேத்திய மொழியோ டிரக்கையால்' என்றார்.

### நாலடியார்

"செல்வமொன் றுண்டாக வைக்கற் பாற்றன்று"

"அகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்"

"செல்வர்யா மென்றுதாஞ் செல்வுழி யெண்ணாத
புல்லறி வாளர் பெருஞ் செல்வம்-எல்லிற்
கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போற் றோன்றி
மருங்கறக் கெட்டு விடும்"

எனக் கூறியபடி, செல்வமானது நடுநிலைமை பொருந்த யாவரிடத்தும் நிற்காது தேரின் உருளையைப்போல கீழ்மேலாய் மேல்கீழாய் வரு மென்றும், செல்வமானது மின்னலைப்போலத் தோன்றி யழியு மெனவும் உணர்ந்து,

### திருவிளையாடற் புராணம்

"வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பு
மண்டர்தொழ வாழுன் னிறுமாப்பு மாலால
முண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்"

"குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க்
கிமையாக் குஞ்சரமும்

படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய்
மதுரைப் பரமேட்டி" எனவும்,

**காஞ்சிப்புராணம்**

"வான மேத்தயான் வைகுந்த வாழ்வுபெற் றதுவும்
ஞான நாயகன் சத்திய வுலகநண் ணியதும்
ஏனை விண்ணவர் தத்தம வாழ்க்கையெய் தியதும்
ஆனு யர்த்தவ னருட்குறி யருச்சனைப் பயனால்"

எனவுங் கூறியபடி, விண்டுவினது செல்வச் செருக்கும், பிரமனது செல்வச் செருக்கும், தேவேந்திரனது செல்வச் செருக்கும் சிவபெருமானால் அளிக்கப்பட்ட தாகலின் அவரே முழுமுதற் கடவுளும் தடங் கருணைப் பெருங்கடலு மாகலின் அவர் இம்மையின்பமே யல்லாமல் மறுமை இன்பமும் அளிப்பரெனக் கருதி அப்பெருமான் திருவடித் தொண்டு புரிதலே மேலானதென்று நிச்சயமாக உணர்ந்தேன் என்பார் 'நின்குற் றேவலே வாழ்வென வறிந்தேன்' என்றார். இந்திர தனுசு பல நிறத்துடன் கூடியதாகலின் குற்றம்நீக்கி ஆராய்ந்தெடுக் கப்பட்ட நல்ல மணிகளைக்கொண்டு இழைத்த பெரிய திருவாசிகை யென்றார். மணிமேகம் என்பதற்கு மணிகளைப் பொழியும் மேக மெனக் கூறுவாருமுளர். ஆராய்ந் தெடுத்த மணிகளால் பதிக்கப் பட்டு விளங்குகின்ற பெரிய திருவாசிகையை நீலநிறமான மேக மானது சாத்தியதுபோல "இந்திரதனுசு" என்னும் வில் மேலே வளைந்திருக்கப் பெற்றது என்பார் 'பாத்திய மணிகள் கொண்டிழைத் திலங்கு பாரவாசிகை மணிமேகஞ் சாத்தியதென வில் வளைந்துறும்' என்றார். அதாவது இந்திரதனுசு காணப்படுதல் எம்மாதிரி யிருக் கின்றதென்றால் மணிமேகம் ஆராய்ந்தெடுத்த நல்ல மணிகளால் பெரிய திருவாசிகையைச் சாத்தியதுபோலு மென்று நினைக்குமாறு இருக்கின்றது எனக் கூறினரென்க. இச்செய்யுளால் அரசர் முதலாயினோர் வாழ்வை வாழ்வெனக் கருதாமல் சிவபெருமான் குற்றேவலையும் (சிவனடியார்கள்) குற்றேவலையுமே பெரிய வாழ்வென்று நினைக்க வேண்டுமெனக் கூறினரென்க.

பட்டினத்தார் பாடல்

"குடைகொண் டிவ் வையமெலாங் குளிர்வித்
தெரிபொற் றிகிரிப்
படைகொண் டிகலெறு பார்த்திவ ராவதிற்
பைம்பொற் கொன்றைத்
தொடைகொண்ட வார்சடை யம்பலத்தான்
றொண்டர்க் கேவல்பூண்டு
கடைகொண்ட பிச்சைகொண் டிங்குண்டு
வாழ்தல் களிப்புடைத்தே"

என்ற செய்யுளும் ஈண்டு கவனிக்கற்பாலது. (61)

குலத்தினிற் பிறந்து மலகிலால் கற்றுங்
குணத்தினிற் சிறந்துநல் விரத
பலத்தினிற் கவர்ந்து நின்னடி யவர்க்குப்
பரிவிலார் கதியிலா தவரே
கலத்தினிற் பொலிந்த விமயமீன் றெடுத்த
கன்னிநுண் ணிடைமிசைக் களபா
சலத்தினிற் குறுதி கொடுத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) கலத்தினில் பொலிந்த - அணிகளால் நிலவுகின்ற, இமயம் ஈன்று எடுத்த-இமயமலை பெற்றெடுத்த, கன்னி - பார்வதியினுடைய, நுண் இடை மிசை-நுட்பமாகிய இடையின்மேலுள்ள, களப அசலத்தினுக்கு-கலவைச் சாந்து அணிந்த மலைநிகர்த்த தனங்கட்கு, உறுதி கொடுத்திடும்-உறுதியைச் செய்தருளும், சோண சைலனே! கைலைநாயகனே!—, குலத்தினில் பிறந்தும்-நல்ல குலத்தில் தோன்றியும், அலகு இல் நூல் கற்றும்-எண்ணிறந்த நூல்களைப் படித்தும், குணத்தினில் சிறந்தும்-நற்குணத்தால் சிறந்து விளங்கியும், நல் விரத பலத்தினில்-மேலாகிய விரத பலங்களில், கவர்ந்தும் ஆசை மிகப் பெற்றும், நின் அடியவர்க்கு பரிவு இலார் - தேவரீருடைய அடியவர்களிடத்தில் அன்பு இல்லாதவர்கள், கதி இலாதவரே-சிறந்த கதியை அடையப் பெறாதவரே யாவர்; எ-று.

(வி-ரை.) தனிப்பாடற்றிரட்டு-ஔவைப்பிராட்டியார்

"பெரியது கேட்கி னெரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான் முகன் படைப்பு
நான்முகன் கரியமா லுந்தி வந்தோன்
கரிய மாலோ வலைகடற் றுயின்றோன்
அலைகடல் குறுமுனி கையி லடக்கம்
குறுமுனி யோகல சத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறு மண்
புவியோ வரவினுக் கொருதலைப் பாரம்
அரவோ வுமையவள் சிறுவிரன் மோதிரம்
உமையோ விறைவர் பாகத் தொடுக்கம்
இறைவரோ தொண்ட ருள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே"

எனக்கூறியபடி சிவனடியார்களின் பெருமை ஒரு நாவால் எடுத்துச் சொல்ல முடியாத தனிப் பெரும்புகழா யிருப்பதாலும், அவ்வடியார்கள்,

திருவிளையாடற்புராணம்

"சுற்றமுந் தொடர்பு நீத்தேந் துன்பமு மின்பு மற்றேம் [ம்
வெற்றுடன் மானந் தீர்ந்தேம் வெறுக்கைமேல் வெறுக்கை வைத்தே
செற்றமுஞ் செருக்குங் காய்ந்தேந் தீவினை யிரண்டுந் தீர்ந்தேம்"

"தந்தைதாய் குரவ னீசான் சங்கர னிராசை பெண்டிர்
மைந்தர்பல் லுயிருஞ் சுற்ற மாசிலா வீச னன்ப
ரந்தமில் பிறவி யேழு மடுபகை யென்ப தோந்தேம்"

"ஊரெலா மட்ட சோறு நம்மதே யுவரி சூழ்ந்த
பாரெலாம் பாய றுன்னற் கோவணம் பரிக்கு மாடை
சீரெலாஞ் சிறந்த சாந்தந் தெய்வநீ றணிபூண் கண்டி"

"இறக்கினு மின்றே யிறக்குக வென்று மிருக்கினு மிருக்குக வேந்த
ளுறுக்கினு மொறுக்க வுவகையு முடனே யூட்டினு மூட்டுக வானிற்

சிறக்கினுஞ் சிறக்க கொடியதீ நரகஞ் சேரினுஞ் சேருகசிவனை [தார்"
மறக்கிலம் பண்டைப் பழவினை விளைந்தான் மாற்றுவர் யாரெனமறுத்

எனக் கூறியபடி அடியார்களின் இலக்கண மமைந்துள்ளமையாலும் அவர்கள் என்றும் சிவபெருமானை மறக்காத அன்புடையவர்க ளாக ளாலும்,

திருமந்திரம்

"அன்பு சிவமிரண் டென்ப ரறிவிலார்
அன்பு சிவமாவ தாரு மறிகிலார்
அன்பு சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப் பாரே"

என அவ்வடியார்கள் சிவபெருமானையே அன்பாகவும் அன்பையே சிவபெருமானாகவும் நினைப்பவர்களாகலானும் அவர்கள்,

பட்டினத்தார் பாடல்

"நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற வகழ்ந்து போக்கித் தூர்வைசெய்
தன்பெனும் பாத்தி கோலி முன்புற
மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலு
மார்வத் தெண்ணீர் பாய்ச்சி நேர்நின்று
தடுக்குநர்க் கஞ்சா திடுக்கண் செய்யும்
பட்டி யஞ்சிறுக் கன்றியுட் சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை யிளந்தளிர் காட்ட வருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப் படுத்துழிச் செம்மையி னோங்கி
மெய்ம்மயிர்ப் புளக முகிழ்த்திட் டம்மெனக்
கண்ணீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து
புண்ணிய வஞ்செழுத் தருங்காய் தோன்றி

நஞ்சுபொதி காளகண்டமுங் கண்ணொரு மூன்றும்
தோளொரு நான்குஞ் சுடர்முக மைந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவை யதனினு மறுசுவை யுடைத்தாய்க்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி
பையப் பையப் பழுத்துக் கைவர''

எனக்கூறியபடி அன்பு பொருந்திய பத்தியாகிய விதையை விதைத்து ஆசையாகிய நீரைப் பாய்ச்சுகின்ற சிவனடியார்களுக்கு ஆனந்தமே திருமேனியாகக் கொண்டருளிய சிவபெருமானது இனிய திருவருட்பயன் விளையுமாகலானும் இன்னோரன்ன பல காரணத்தானும், நற்குலத்தில் தோன்றியும் எண்ணிறந்த நன்னூல்களைப் படித்து ஆராய்ந்தும் நற்குணத்தால் சிறந்து விளங்கியும் மேலாகிய விரத பலங்களில் ஆசை மிகப்பெற்றும் சிவனடியார்க்கு அன்பு இல்லாதவர்கள் முத்தி அடையப் பெறாதவர்களே யாவர் என்பார் 'குலத்தினிற் பிறந்து மலகினுல் கற்றுங் குணத்தினிற் சிறந்த நல்விரத பலங்களிற் கவர்ந்து நின்னடி யவர்க்குப் பரிவிலார் கதியிலா தவரே' என்றார். எனவே, தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமில்லாதவர் குல முதலியவற்றாற் சிறந்தாரேனும் கதி காணார் என்பது கருத்து. பொலிந்த என்னும் பெயரெச்சம் கன்னி யென்னும் பெயர் கொண்டது. களப+அசலம்=களபாசலம். வடமொழிப்புணர்ச்சி தீர்க்கசந்தி. வடமொழித் தொடர்கள், தமிழில் வரும்போது பெரும்பாலும் அவ்வடநூற் புணர்ச்சியையே பெறும்; வடநூலார் புணர்ச்சியைச் சந்தி என்பர். அச்சந்தி உயிருடன் உயிர் புணர்கையில் தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி என மூவகைப் படும். 'இமைய மீன்றெடுத்த கன்னி' என்பதனை,

கந்தபுராணச் சுருக்கம்

''இற்றைவரை வரைவளைத்த காத்தோய் நின்னை
யெண்ணாத தக்கன்மக ளென்னு நாமம்

பொற்றனன்மே லதுபரிப்ப வெருவி னேனப்
பெயரகல வருடியெனப் பேச லோடுந்
தற்றுபொழி லிமயநெடுஞ் சைல வேந்தன்
றன்மகளாய் நினைப்பெறுவான் றவஞ்செய் கின்றான்
மற்றவன்பால் வளர்ந்திடுதி வந்தி யாம்பின்
மணத்துமென விடைகொடிம மலையிற் சேர்ந்தாள்"

என்னுஞ் செய்யுளானறிக. அழியாமைக் குணமுடைமையானும் மீனாக்ஷியம்மையாராகத் தோன்றி மகுடாபிஷேகம் செய்துகொண்டு மனுநீதி கோடாது செங்கோல் செல்ல கன்னிப்பருவத்தே அரசியல் நடாத்திய காரணத்தாலும் கன்னிகையாகவே உமையம்மையார், கன்னியாகுமரியில் வீற்றிருப்பதாகக் **கன்னியாகுமரித் தலபுராணம்** கூறுவதாலும் 'கன்னி' என்றார். இதனை,

**திருவிளையாடற் புராணம்**

"வரைசெய் பூண்முலைத் தடாதகை மடவாற் பிராட்டி
விரைசெய் தார்முடி வேய்ந்துதண் குடைமனு வேந்தன்
கரைசெய் நூல்வழி கோல்செலக் கன்னியாம் பருவத்
தரசு செய்தலாற் கன்னிநா டாயதந் நாடு" எனவும்,

"கன்னியொரு பங்கினர் கடம்பவன மெல்லாம்"

எனவும் கூறியதனானறிக. 'களபா சலத்திற் குறுதி கொடுத்திடும்' என்னும் விவரம் முன்னொரு செய்யுளில் கூறினோமாகையால் ஈண்டு கூறிற்றிலம். இவ்விவரம் அச்செய்யுளிலும், **அருணசலபுராணத்தும், காஞ்சிபுராணத்தும்** காண்க. (62)

மூடக விருளோ டுன்னையின் றண்ணு
முலையரா சாலகற் றுவலென்
சூடரு மொழியா லடைந்தனன் றமியேன்
சூள்வழு வாதுநீ யருளாய்
வீடுறுங் கவரி கீழ்விழ வுறல்கார்
மிசையனம் பன்றிதா மாறித்
தாடலை தருவ வடைதனேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வீடுறும் கவரி - மலையினுச்சியிலிருந்து நழுவிய கவரி மான், கீழ்விழ-கீழேவிழ, கார் மிசை உறல்-மேகம் கீழிருந்து சிகரத்தில் ஏறுதல், அனம் பன்றிதாம்-அன்னமும் பன்றியும், மாறி-முடியைத் தேடுதலும், அடியைத் தேடுதலுமாகிய முறைமாறி, தாள் தலை துருவ - திருவடியையும் திருமுடியையும் தேடும் பொருட்டு, அடைதல் நேர்-கீழும் மேலும் போகின்றதை நிகர்த்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, மூடு அக இருளொடு-அடியேனுடைய அறிவை மறைக்கின்றதான அக இருளாகிய ஆணவமலத்தோடு, உன்னை இன்று உண்ணுமுலை அரசால் அகற்றுவல்-உன்னை இன்றைய தினத்திலேயே உண்ணுமுலை யம்மையாருடைய கணவராகிய அண்ணமலை நாதரால் ஒழித்து விடுவேன், என் சூள் தரும் மொழியால்-என்னும்ம் சபதமொழியைச் சொல்லிவிட்டேனுகையால், தமியேன் அடைந்தனன் - துணையிலியாகிய அடியேன் தேவரீரைப் புகலிடமாக வந்து சேர்ந்தேன், நீ சூள் வழுவாது - தேவரீர் அடியேனுடைய சபதம் கெடாதவிதமாக, அருளாய் - அடியேனுக்கு அருள் பாலிப்பீராக; எ-று.

(வி - ரை.) அகவிருளாகிய ஆணவமலத்தோடு அடியேன், "உன்னை இன்றைய தினத்திலேயே அண்ணமலை நாதரால் நீக்கி விடுவே" னென்று சபத மொழியைச் சொல்லிவிட்டுத் தேவரீரை அடியேன். தஞ்சமாகச் சேர்ந்தேன். ஆகையால் அடியேனுடைய சபதம் வழுவாதபடிக்குத் தேவரீர் அருள வேண்டுமென்பார் 'மூடக விருளோ டுன்னையின் றுண்ணு முலையர சாலகற் றுவலென் சூடரு மொழியா லடைந்தனன் றமியேன் சூள்வழு வாதுநீ யருளாய்' என்றூர். ஆணவமலத்தோடு நான் 'உன்னை அண்ணமலையார் திருவருளால் நீக்கி விடுவேன்' என்று சபதம் செய்துவிட்டு அச்சபதம் பூர்த்தி யடையும்படியாகத் தேவரீரை யடைந்தேன். ஆகையால் அடியேன் ஆணவமலத்தோடு செய்துகொண்ட சபதம் முடிவுபெறும் படி தேவரீர் அருள்செய்ய வேண்டும். அப்படித் தேவரீர் அடியேன் அபீஷ்டப்படி ஆணவமலத்தை நீக்காவிட்டால் அதனுல் இகழ்ச்சி தங்களுக்கே யல்லாமல் அடியேனுக்கு அல்ல எனவும் பொருள் தோன்றுமாறும் கூறினுரென்க. இதனை,

## திருக்கருவை வெண்பா அந்தாதி

"என்னைச் சிரிப்பாரென் றெண்ணுதே யெம்பெருமான்
உன்னைச் சிரிப்பாரு முண்டு"

என்பதனலறிக. ஆணவமலத்தை அதிககாலம் அடியேனிடம் தங்கி யிருக்க இடம்கொடுக்க மாட்டேன் என்பார் 'இன்று நீக்குவல்' என்ருர். ஆணவமலமானது மிகவும் இருளாயிருப்ப தொன்ருகலின் 'இருளொடு' என்ருர். அடியேனுடைய அறிவை மறைக்கின்ற அகஇருள் ஆணவமலமாகலின் 'மூடக விருளொடு' என்ருர். ஆணவ மலத்தைப் போக்கும் ஆற்றல் அடியேனுக்கு இல்லை யென்றும், ஆகையால் அந்த ஆணவமலத்தை அண்ணுமலைநாதர் திருவருளினுல் இன்றைக்கே நீக்கி விடுவேனென்பார் 'உன்னையின் றுண்ணுமுலை யரசா லகற்றுவல்' என்ருர். ஒருதுணையு மற்றவன் (துணையிலி) என்று தன்னை இழித்து, 'தமியேன்' என்ருர். முன்னம் அடிமுடி தேடிய காலத்தில் விஷ்ணு பன்றிவடிவம் தாங்கி அடியைத்தேடியும் பிரமன் அன்னப்பக்ஷிவடிவம் தாங்கி முடியைத்தேடியும் பெருமானைத் தேடிக்காண முடியாதவர்களாகிய அவர்கள் இப்போதும் தேடவுத் தேசித்தவர்களாய் முன்னம்தேடிய முறையினின்று மாறி அஃதாவது பிரமனுகிய அன்னப்பக்ஷி அடியைத்தேடவும் விஷ்ணுவாகிய பன்றி முடியைத்தேடவும் உத்தேசித்துச் செல்லுவதைப்போலக் காணப்படு கின்றது என்பார் 'அனம் பன்றிதா மாறித்தாடலை துருவவடைத னோர்' என்ருர். சிகரத்திலிருந்து நழுவிய கவரிமான்கள் கீழேவிழு வதும் மேகம் கீழிருந்து சிகரத்திலேறுவதும் ஆகிய காட்சியைப் பார்த்தால் அன்னப்பக்ஷி அடியைத்தேடிக்காணவும் பன்றி முடியைத் தேடிக் காணவும் செல்லுதலைப்போன் றிருக்கின்றதென்பார் 'வீடு றுங் கவரி கீழ்விழ வுறல்கார் மிசையனம் பன்றிதா மாறித் தாடலை துருவ வடைதனோர்' என்ருர். கருநிற முடைமையால் பன்றிக்கு மேகமும் வெண்ணிற முடைமையால் அன்னத்திற்குக் கவரியும் உவமையாயின. அனம்-இடைக்குறை. தாள், தலை - சினைப்பெயர் கள். உண்ணுமுலை யம்மையார் என்பது இந்த க்ஷேத்திரத்தில் அம்மையாருக்குத் திருநாமம். இந்த க்ஷேத்திரத்திலுள்ள உண்ணு

மூலையம்மையாரின் கணவர் அருணசலேஸ்வர ராகலின் 'உண்ணு முலை யரசு' என்றார். (63)

ஐயநுண் மருங்குன் மாதர்மேல் வைத்த
வாதர வுன்பதாம் புயத்து
மெய்யுறு நறுமென் கலவையின் விருப்பு
வெண்டிரு நீற்றிலும் வருமோ
கொய்யுறு தினைவீழ்ந் திடுபசுங் கிள்ளைக்
குழுக்கடோ ரணமென வெழுந்து
தையலர் கடியப் பறந்துறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) கொய்யுறும்-அறுக்கத்தக்க, தினை வீழ்ந்திடு-தினைக் கதிர்களில் (அவற்றைக் கவரும்படி) விழுகின்ற, பசுங் கிள்ளைக் குழுக்கள்-பசுமையான கிளிக் கூட்டங்கள், தையலர் கடிய-புனத்தைக் காக்கும் குறமகளிர் கவண் கற்களாதியவற்றால் ஓட்ட, தோரணம் என - தோரணங் கட்டியதுபோல, எழுந்து பறந்துறும் - மேலெழுந்து வரிசையாகப் பறந்து போகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, ஐயம் நுண் மருங்குல்-உளதோ இலதோ என்று சந்தேகிக்கும்படியான நுட்பமாகிய இடையையுடைய, மாதர்மேல் வைத்த ஆதரவு-மகளிர்களிடத்தில் கொண்ட காதல், உன் பத அம் புயத்தும் - தேவரீருடைய தாமரை மலர்போன்ற திருவடிகளிலும், மெய் உறும் - உடம்பிற் பூசிய, நறு மெல் கலவையின் விருப்பு - நறிய மிருதுவான கலவைச் சாந்தில் வைத்த பிரியம், வெண் திருநீற்றிலும்-வெண்மையாகிய விபூதியினிடத்திலும், வருமோ-அடியேனுக்கு ஏற்படுமோ? (அறியேன்); எ-று.

(வி-ரை.) உளதோ இலதோ என்று சந்தேகிக்கும்படியான நுட்பமான இடைமகளிர்க்கு உளதாகையால் 'ஐயநுண் மருங்குன் மாதர்' என்றார். மகளிர்மேல் ஆசையும், கலவைச் சாந்தில் மேல் விருப்பும் கொண்டுள்ளேனே யல்லாமல் சிவபெருமான் பாததாமரை யில் விருப்பும் திருவெண்ணீற்றில் விருப்பும் கொண்டிலனென்பார் 'ஐயநுண் மருங்குன் மாதர்மேல் வைத்த வாதரவுன் பதாம்புயத்து

மெய்யுறு நறுமென் கலவையின் விருப்பு வெண்டிரு நீற்றினும் வருமோ' என்றார். அறுக்கத் தக்கதான தினைக் கதிர்களில் அவற்றைக் கவரும்படி கிளிக்கூட்டங்கள் மொய்த்துக் கொண்டிருக்கு மென்பார் 'கொய்யுறு தினைவீழ்ந்திடு பசுங்கிள்ளைக் குழுக்கள்' என்றார். தினைப்புனத்தைக் காவல்புரியும் குறமகளிர் கவண் கற்க ளாதியவற்றால் கிளிக்கூட்டங்களை ஓட்ட அக் கிளிக் கூட்டங்கள் தோரணங் கட்டியதுபோல மேலே யெழுந்து ஒழுங்காகப் பறந்து செல்லுமென்பார் 'தோரணமென வெழுந்து தையலர் கடியப் பறந் திறும்' என்றார். பத+அம்புயம்=பாதாம்புயம்: இது வடமொழிப் புணர்ச்சி தீர்க்கசந்தி. அம்புயம்-தாமரை: தண்ணீரில் தோன்றுவது என்பது இதற்குப் பொருள். அம்புஜம் என்பதும் இது. (64)

கனலினூ டமைத்த விழுதெனு வுருகக்
கற்றதின் றுள்ளமென் கரங்கள்
புனலுமாய் மலருங் கொடுநினைப் பூசை
புரிந்தில வென்செய்கோ வுரையாய்
சினவுநோய் மருந்து வேறுகொண் டிருக்குஞ்
சிலம்புக ளுணவுட் கொள்வோர்
சனனநோய் மருந்தா யெழுந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே

(ப-ரை.) சினவும் நோய் மருந்து-துன்பப்படுத்துகின்ற நோய் களை நீக்குதற்குரிய மருந்துகளை, வேறு கொண்டிருக்கும் - தமக்கு வேறாகக் கொண்டிருக்கின்ற, சிலம்புகள் நாண - மலைகளெல்லாம் நாணும்படியாக, உள் கொள்வோர் - மனத்தில் நினைக்கின்றவர்க ளுடைய, சனன நோய்-பிறவி நோயை நீக்கும், மருந்தாய் எழுந் திடும்-மருந்தாகி ஓங்கி வளர்ந்திருக்கின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, என் உள்ளம்-அடியேனுடைய மனம், கனலின் ஊடு அமைத்த-அக்கினியி னிடையே வைக்கப்பட்ட, இழுது என-வெண் ணெய்போல, உருக கற்றது இன்று - தேவரீரை நினைத்து உருகக் கற்றதில்லை, என் கரங்கள்-அடியேனுடைய கைகள், புனலும் ஆய் மலரும் கொடு - தீர்த்தமும் ஆராய்ந் தெடுக்கப்பட்ட பூக்களையுங்

கொண்டு, நினைப் பூசை புரிந்தில - தேவரீரைப் பூசையும் செய்தில, என் செய்கோ - அடியேன் யாது செய்யக்கடவேனோ, உரையாய்- தேவரீரே உரைத்தருளும்; எ-று.

(வி-ரை.) மனமானது அக்கினியில்பட்ட வெண்ணெய்போலச் சிவபெருமானை நோக்கி உருகக் கற்றதில்லை யென்பார் 'கனலினூட மைத்த விழுதென வுருகக்கற்றதின் றுள்ளம்' என்றார். இதனை,

**தாயுமானவர்**

"கல்லேனு மையவொரு காலத்திலுருகு மென்
கன்னெஞ்ச முருகவிலையே" எனக் கூறியதனாலறிக.

"உண்பதன் முன்மலர் பறித்திட் டுண்ணாராகில்"

எனத் **திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்தில்** கூறியபடி, அடியே னுடைய கைகள் ஜலமும் மலரும்கொண்டு பூசைசெய்தில. ஆகையால் அடியேன் என்ன செய்யக் கடவேனோ தேவரீரே உரைத்தருளும் என்பார் 'என் கரங்கள் புனலுமாய் மலருங்கொடு நினைப்பூசை புரிந் தில வென்செய்கோ வுரையாய்' என்றார். எனவே, உட்கரணங் களும் புறக்கரணங்களும் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய் தற்கு உரியன வாகலின், அது செய்யாதவர் ஒருபயனும் எய்தார் என்பதை ஈண்டு வலியுறுத்திக் கூறியுள்ளா ரென்றறிக. உலகத்தி லுள்ள மலைகள் உடற்பிணிக்குத் தக்க மருந்துகளான மூலிகைகளை தமக்கு வேறாக உடையதாக இருந்தாலும் அம்மூலிகைகளை யுட் கொள்வோர் தமது உடற்பிணியினின்று நீங்குவார்களே தவிரப் பிறவிப் பிணியினின்று நீங்கமாட்டார்கள்; ஆனால் திருவண்ணாமலை யாகிய இந்த மலையானது உடற் பிணியை நீக்குவது மாத்திரமல்லா மல் பிறவிநோய்க்குத் தானே மருந்தாக நிற்கின்றதினால் ஏனைய மலைகளெல்லாம் நாணமடையு மென்பார் 'சினவு நோய் மருந்து வேறுகொண் டிருக்குஞ் சிலம்புக ளனவுட் கொள்வோர் சனன நோய் மருந்தா யெழுந்திடும்' என்றார். எனவே, சோணசைலம் ஜனன நோய்க்கு மருந்து ஏனைய மலைகள் பிறவிநோய்க்கு மருந்து. மருந்து என்பதற்கியைய உட்கொள்வோர் என்றார். எனவே, மலைகளெல் லாம், எளிதாக நீங்கக்கூடிய நோயைநீக்கு மாற்றலுந் தமக்கில்லாமல்

தம்மிடத்தே வளர்ந்துள்ள மூலிகைகட்கு உளவாகப் பெற்றனவாகும். இச் சோணசைலமோ நீக்கமுடியாத பிறவிப் பிணிக்குத் தாமே மருந்தாக நிற்கின்றது. இந்த மலைக்குள்ளதான ஏற்றத்தைநோக்கி ஏனைய மலைகள் நாணமடையுமெனக்கூறி யருளினு ரென்க. (65)

ஊழுறு மணிப்பொற் கோயில்போய் வாவ
லுறக்கொடுத் தாங்குநிற் புணர்த்தாப்
பாழுறு மனம்பே ரவாக்குடி யிருப்பப்
பண்ணுமென் கண்ணுநண் ணுவையோ
வீழுறு மெயினர் கிழங்ககழ் குழியும்
வேழம்வீழ் குழிகளு நிரம்பத்
தாழுறு மருவி பொன்சொரி சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) எயினர்-வேடர்கள், வீழுறும்-விரும்புகின்ற, கிழங்கு அகழ் குழியும் - கிழங்குகளைத் தோண்டிய குழிகளும், வேழம் வீழ் குழிகளும்-யானைகள் வீழும்படியான குறவர்களால் அகழ்ந் தெடுக்கப் பட்ட குழிகளும், நிரம்ப-நிறையும்படி, தாழுறும் அருவி - மேலே யிருந்து கீழே ஒழுகுகின்ற அருவியானது, பொன் சொரி-பொன்னைச் சொரிகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, ஊழ் உறும் மணி பொன் கோயில்-வரிசையாகப் பதிக்கப்பட்ட இரத்தினங்கள் அமைந்த பொன்மயமான திருக்கோயிலை, வாவல் போய் உற-வெளவால் சென்று உறையும்படி, கொடுத்தாங்கு-கொடுத்ததுபோல, நின் புணர்த்தா-தேவரீரை இடைவிடாது அமைத்துத் தியானம் செய்யாமல், பாழுறும் மனம்-பாழாகி ஒழியும் மனத்தில், பேரவா குடியிருப்பப் பண்ணு-பேராசையானது குடியிருக்கும்படி செய்கின்ற, என் கண்ணும்-சிறியேனுகிய அடியேனிடத்திலும், நண்ணுவையோ-தேவரீர் எழுந்தருளி யிருப்பீரோ? (அறியேன்); எ-று.

(வி-ரை.) கோயிலை மனத்திற்கும், வாவலைப் பேராசைக்கும் உவமையாக்கினுர். வாவல் என்பது எழுத்து நிலைமாறி வெளவால் என வழங்கி வருகின்றது: சிவிறி என்பது விசிறி என வழங்கி

வருதல்போல. கோயில் என்பது - இலக்கணப் போலி. நின் + புணர்த்தா = நிற்புணர்த்தா என வந்தது. 'நின்னீ ரியல்பாம்' என்ற சூத்திர விதிப்படி இயல்பாகாமல் இரண்டாம் வேற்றுமைத் தொகையாகலின் நிலைமொழியீறு திரிந்தது. இஃது இயல்பின்விகாரம்.

திருச்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி

"இருக்கினு நிற்கும் போது மிரவுகண் டுயிலும் போதும்
பொருக்கென நடக்கும் போதும் பொருந்தியுண் டுய்க்கும் போது
முருக்கிதழ் கனிவா யாரை முழுங்கிநெஞ் சழியும் போதுந்
திருக்களா வுடைய நம்பா சிந்தையுன் பால தாமே"

எனக் கூறியபடி எந்த வேளையிலும் சிந்திக்க வேண்டியதான முறைமை இருக்க, அவ்வாறு சிவபெருமானை இடைவிடாது அமைத்துத் தியானஞ் செய்யாமல் பாழ்பட்டு ஒழியும் மனம் என்பார் 'நிற்புணர்த்தாப் பாழுறு மனம்' என்றார். அவா முதலிய தீக்குணங்கள் பிறவிக்குக் காரணமாக நிற்பதாலும் அவை நீங்கினவர்களான மனத்தூய்மை யுடையோரிடத்திலேயே சிவபெருமான் வாழ்வா னாகலானும் அவா முதலிய தீக்குணங்கள் குடியிருக்கின்ற அடியேனிடத்தில் பெருமான் எழுந்தருளமாட்டான் என்பார், 'பேரவாக் குடியிருப்பக் பண்ணுமென் கண்ணு நண்ணுவையோ' என்றார். இதனை,

திருக்குறள்

"அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

என்பதானறிக. 'என் கண்ணும்' என்புழி உம்மை இழிவு சிறப்பு.

(66)

பைம்மறிப் படுப்பி னுள்ளறி யாமற்
பணிநறுந் துகில்புனை மடவார்
மெய்ம்மிசைக் கருந்தோல் கண்டுவந் துழலும்
வினையினே னுய்யுநா ளுளதோ

செம்மலர்ப் பதம்பா தலங்கடந் திடவான்
திருமுடி கடப்பினு மூவர்
தம்மியற் செப்பி னடங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) செம் மலர்ப்பதம்-செந்தாமரை மலர்போன்ற திருவடிகள், பாதலம் கடந்திட-பாதல உலகத்தையுங் கடந்து அப்பாற் செல்ல, திருமுடி-திருமுடியானது, வான் கடப்பினும்-தேவலோகத்தைக் கடந்து மேலே சென்றாலும், மூவர் தம்-திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் முதலிய மூவர்களுடைய, இயல் செப்பின்-இலக்கணம் அமைந்த திருமுறைகளுக்குள், அடங்குறும்-அடங்கி யிருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, பை மறிப் படுப்பின்-பையினை மேலே பார்த்து மகிழாமல் அதைத் திருப்பி உள்ளே பார்ப்பதுபோல, பணி நறுந் துகில் புனை - அணிகளையும் அழகிய ஆடைகளையும் அணிந்திருக்கின்ற, மடவார்-பெண்களுடைய, உள் அறியாமல்-உள்ளே யிருக்குங் குற்றங்களை யுணராமல், மெய் மிசை-சரீரத்தின்மேல் அழகுடையதுபோலத் தோற்றுகின்ற, கருந்தோல் கண்டு-கருமையான தோலைப் பார்த்து, உவந்து உழலும்-களித்து அலைந்து திரிகின்ற, வினையினேன் - தீவினையேனாகிய அடியேன், உய்யும் நாள் உளதோ - பிழைத்துத் தேவரீர் திருவடி நிழலில் வாழக்கூடிய நாளும் உண்டோ? (தேவரீரே உரைத்தருளும்); எ-று.

(வி-ரை.) பையானது வெளிக்கு அழகாயிருந்தாலும் அந்தப் பையினைத் திருப்பிப் பார்த்தால் அதன் ஆபாசங்களெல்லாம் வெளிக்குத் தோற்றும்; அதுபோலவே மாதர்களைக் கண்டு அவர்களணிந்துள்ள விலையுயர்ந்த ஆடையாபரணாதிகளால் மயங்கி நின்று அம்மாதர்களுடைய மலமூத்திராதி பல இழிவுகளை நோக்காமல் அவ்விழிவு வெளிக்குத் தெரியாதபடி மிக்க அழகு வெளிக்குத் தோற்றும்படியாயுள்ள தேகத்தினுடைய தோலினைக் கண்டு ஆனந்தம் அடைந்து அலையும் தீவினையேன் என்பார் 'பைம்மறிப் படுப்பி னுள்ளறி யாமற் பணிநறுந் துகில்புனை மடவார் மெய்ம்மிசைக் கருந்தோல் கண்டுவந் துழலும் வினையினேன்' என்றார்.

## பட்டினத்தார் பாடல்

"சீறும் வினையது பெண்ணுரு வாகித் திரண்டுருண்டு
கூறு முலையு மிறைச்சியு மாகிக் கொடுமையினாற்
பீறு மலமு முதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்
டேறுங் கரைகண் டிலே னிறைவாகச்சி யேகம்பனே"

என்றபடி ஆன்மாக்களை வருத்துகின்ற வினையே பெண் வடிவமாக வந்து ஆடவர்களை அவ்வினையின்படி யுழலும்படி செய்வதாலும் தானும் அவ்வினையாகிய மாதர்கள்பால் இச்சை செலுத்தி,

## பிரபுலிங்கலீலை

"பாவமும் பழியு நல்கும் பல்வகைப் புகழ றங்கள்
யாவையு மழிக்கு மெய்து மின்பமு மதனு லெய்து
நோவுநன் மரபுஞ் செய்யு நோன்புநல் லொழுக்கு மேன்மை
சாவுமெண் ணுரும னிற்குந் தயங்குபுன் காம மென்பார்"

என்றபடி பலவிதத் துன்பத்திற்கும் ஏதுவாகிய காமத்தி லழுந்தும் படி தன்னைச் செய்வதனால் 'வினையேன்' என்றார். மாதர்கள் கருந் தோலைக் கண்டு சந்தோஷிக்கும் வினையேன் சிவபெருமான் திருவடி நிழலில் வாழக்கூடிய நாளும் உண்டாகுமோ என வருந்துவார் 'உய்யுநா ளுளதோ' என்றார். எனவே உடம்பின் இழிவைப்பற்றிக் கூறிறொென்க. இதனை,

## மணிமேகலை பளிக்கறைபுக்ககாதை

"வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
மூப்புவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
புற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா வுள்ளந் தன்பா லுடையது

மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்"

எனக் கூறியிருத்தல் காண்க. மறிப்படுப்பு - திருப்புதல். 'மறிப் படுப்பின்' ஒப்புப் பொருளில்வந்த ஐந்தாம் வேற்றுமை. 'பைம்மறிப் படுத்தி' எனப் பாடங் கொள்வாரு முளர். கருமை-அழகு எனப் பொருள் கூறினுமமையும். செப்பு என்பதற்குச் சொல் என்று பொருள். இது தமிழ்நாட்டுச் சொல் அன்று. தெலுங்கநாட்டுச் சொல். எச்சரிக்கை என்பதும் தெலுங்கநாட்டுச் சொல். ஆகவே, செப்பு - திசைச்சொல். ஆகுபெயராக நின்று திருநெறித் தமிழ் வேதத்தை உணர்த்திற்று. செப்பு என்பதற்குச் சிமிழ் என்று பொருளுரைத்தலும் உண்டு. (67)

செக்குறு திலத்தின் வருந்துபு பிறக்குஞ்
செல்லலு நாடியின் பிணிப்பு
நெக்குற வறிவு கலங்குசாக் காடு
நினைதொறு முளம்பதைக் கின்றேன்
மொய்க்குறு முகில்கண் டரிகரி யென்னு
முழக்கமு மரகர வென்னுந்
தக்கவர் முழக்கு மெதிரெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) அரி-சிங்கமானது, மொய்க்குறு முகில் கண்டு-மலையின்மேல் தவழ்ந்து செல்லும் மேகத்தைப் பார்த்து, கரி என்னும் முழக்கமும்-இது யானை என்று கருதி ஒலிக்கின்ற ஓசையும், தக்கவர் - தகுதியினையுடைய அடியார்கள், அர கர என்னும் முழக்கும்-அன்பு மிகுதியால் அரகர என்று துதிக்கும் ஓசையும், எதிர் எழும் - ஒன்றுக்கொன்று எதிராகத் தோன்றப்பெற்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, செக்கு உறு திலத்தின்-செக்கிலுள்ள எள்ளைப்போல, வருந்துபு பிறக்கும் - நெருக்கப்பட்டு நைந்து உதிக்கின்ற, செல்லலும்-துன்பமும், நாடியின் பிணிப்பு நெக்குற-நரம்புகளின் தொடர்ச்சி நெகிழ்ந்து விலக, அறிவு கலங்கும்-அறிவு அழிதற்குக் காரணமாகிய, சாக்காடும்-மரணத் துன்பமும் (ஆகிய இவ்

விரண்டையும), நினைதொறும் உளம் பதைக்கின்றேன் - நினைக்கும் தோறும் மனம் துடிக்கின்றேன் (என் செய்யக்கடவேன்); எ-று.

(வி-ரை.) உயிரானது கருவுற்ற நாள்முதல் பத்து மாதம்வரை யில் கருப்பாசயப் பையில் மலமூத்திராதிகளுக் கிடையில் பலவிதமான துன்பங்களையு மடைந்து பிறகு பிரசூதவாயு தள்ளத் தலைகீழும் கால்மேலுமாகப் பெரிய மலையிலிருந்து கீழேயுள்ள அடிவாரத்திற்குத் தள்ளுதல்போலத் தோன்றியவுடன் அவ்வாபத்தினின்றும் விலக வழியேற்படாமல் செக்கி லகப்பட்டுக்கொண்ட எள்ளைப்போல யோனித்துவாரத்தில் நெருக்குண்டு பிறத்தலாகிய துன்பம் என்பார் 'செக்குறு திலத்தின் வருந்துபு பிறக்குஞ் செல்லலும்' என்றார்.

### தேவாரம்

"புலனைந்தும் பொறி கலங்கி" எனவும்,

"பவனமாய் சோடையாய் நாவெழாப்
பஞ்சுதோய்ச் சட்டவுண்டும்" எனவும்,

### பட்டினத்தார் பாடல்

"ஐயுந் தொடர்ந்து விழியும் சொருகி யறிவழிந்து
மெய்யும் பொய் யாகி விடுக்கின் றநாள்"

எனவும் கூறியபடி மரணவேதனை பெரிதாகலானும், பிறத்தலாகிய துன்பத்திலும் மகா கொடியதாகலானும் நரம்புக் கட்டுக்களெல்லாம் நெக்குற அறிவு கலங்குதற்குக் காரணமாகிய மரணத் துன்பம் என்பார் 'நாடியின் பிணிப்பு நெக்குற வறிவு கலங்கு சாக்காடு' என்றார். பிறக்குந் துன்பமும் இறக்குந் துன்பமும் ஆகிய இரண்டு துன்பங் களைப்பற்றியும் பல நூல்களில் கூறப்பட் டிருக்கின்றதாலும் பிரத்தி யக்ஷமாகப் பார்த்துக்கொண்டு வருவதாலும் அவ்விரு துன்பத்தையும் எண்ணுந்தோறும் மனம் துடிப்படைகின்றேன் என் செய்யக்கடவே னென்பார் 'நினைதொறு முளம் பதைக் கின்றேன்' என்றார். உளம் பதைக்கின்றேன்-திணைவழுவமைதி. உளம்-இடைக்குறை. (68)

மரணமும் பிறவித் துயருநீங் குறநூல்
வாய்ச்சிலம் பிக்கருள் புரிந்த
கருணியென் றுனைவந் தடைந்தன னினிநின்
கருத்தினை யின்னதென் றறியேன்
முரணிபம் பரூஉக்கை தலைமிசை யெடுப்ப
முழைக்கரும் பாம்பென மணித்தேர்த்
தரணியுள் வெருவி யகன்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) முரண் இபம்-வலிமை பொருந்திய யானைகள், பரூஉக்கை-தமது பருத்த துதிக்கைகளை, தலைமிசை எடுப்ப - தலையின்மேல் தூக்க, மணி தேர் தரணி-அழகிய தேரினையுடைய சூரியன், முழை கரும்பாம்பு என-(அதனைப் பார்த்து) புற்றிலிருந்து தோன்றும் கரும் பாம்பு என நினைந்து, உள் வெருவி - மனத்தில் அச்சங்கொண்டு, அகன்றிடும் - நீங்கிச் செல்லுகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, நூல் வாய்ச் சிலம்பிக்கு - நூலிழைக்கும் வாயினையிடைய சிலந்திப் பூச்சிக்கு, மரணமும் பிறவித்துயரும் - இறத்தற் றுன்பமும் பிறத்தற் றுன்பமும், நீங்குற-நீங்கும்படியாக, அருள் புரிந்த கருணியென்று - கருணைசெய்த அருளுருக்கொண்ட மூர்த்தியென்று நினைத்து, உனை வந்து அடைந்தனன் - தேவரீரை வந்து சரண் புகுந்தேன், இனி நின் கருத்தினை-இனிமேல் தேவரீருடைய திருவுளக் கிடையை, இன்னது என்று அறியேன் - இன்ன தன்மை யுடையதென்று அடியேன் அறியேன்; எ-று.

(வி-ரை.) சிலந்திப் பூச்சிக்கு அருள்புரிந்தது ஸ்ரீகாளத்தியிலும் திருவானைக்காவிலுமென அத்தல புராணங்கள் கூறுகின்றன. சிலந்திப் பூச்சிக்கு ஜனன மரணத் துன்பங்களைப் போக்கி அருள்பாலித்த காருண்யமூர்த்தி அடியேனுக்கும் அருள் பாலிப்பாரென்று பெருமானைத் தஞ்சமாக அடைந்தேன். இனி அப்பெருமான் திருவுள்ளங் கிடையாதாக இருக்குமோ அடியேன் அறிந்திலே னென்பார் 'மரணமும் பிறவித் துயருநீங் குறநூல் வாய்ச்சிலம் பிக்கருள் புரிந்த கருணியென் றுனைவந் தடைந்தன னினிநின் கருத்தினை யின்னதென் றுணரேன்' என்றார். பரு என்பது பரூஉ என வந்தது.

நன்னூல்

"இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடி
லளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே"

என்னும் சூத்திரப்படி செய்யுளோசை ஈண்டு குன்றுதாயி னும், இன்னிசை நிறைத்தற் பொருட்டுக் குறில் நெடிலாய் அள பெடுத்தது; ஆகையால் இஃது இன்னிசை யளபெடை என்க. எனவே, இன்னிசை நிறைக்க வரும் அளபெடையாவது குற் றெழுத்து நெட்டெழுத்தாக நீண்டு இன்னிசை நிறைத்தற் பொருட்டு அளபெடுப்பது.

திருக்குறள்

"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை"

என்னும் குறட்பாவில் கெடுப்பதும், எடுப்பதும் என நின்றாலும் பாட்டின் ஓசை குறையாதாயினும், இன்னிசை நிறைத்தற்பொருட்டுக் குற்றெழுத்து நெட்டெழுத்தாக அளபெடுத்தது. இவ்வாறே வரும் மற்றவைகளையும் கண்டுகொள்க. யானையானது தனது பருத்த துதிக்கையை மேலே தூக்கவும் சூரியன் இது நம்மைப் பற்றுவதற்கு வருகின்ற பாம்பு என நினைத்து மனதின்கண் பயமடைந்து விரை வாகச் செல்லுகின்ற தென்பார் 'முரணிபம் பருஉக்கை தலைமிசை யெடுப்ப மழைக்கரும் பாம்பென மணித்தேர்த் தரணியுள் வெருவி யகன்றிடும்' என்றார். யானையினது துதிக்கையை பனைமரத்திற்கு சமமாகச் சொல்லுவது முண்டு.

இராகு கரும்பாம்பு என்றும், கேது செம்பாம்பு என்றும், இராகு சந்திரனையும் கேது சூரியனையும் பற்றுமென்றும் நூல்களும் ஆன்றோரும் கூறுவர். சூரியனுக்குத் தன்னைக் கேதுவாகிய செம்பாம்பு பற்றுதல் வழக்கம் நன்றாகத் தெரிந்து இருந்தாலும் ஒருக்கால் இனம் பற்றிக் கரும்பாம்பாகிய இராகுவும் பற்ற வருதல் கூடுமெனச் சந் தேகமடைந்தானெனக் கொள்க. தரணி-சூரியன். சிலந்திக்கு அருள் புரிந்த சரிதம் வெளிப்படை. இதனைச் சீகாளத்திப்புராணத்தில்

காண்க. 'சிலம்பிக் கரசளித்த கருணி' என்றமையானே, 'ஒரு மொழி யொழிதன்னி னங்கொளற் குரித்தே' என்னும் உபலக்ஷணத்தால் சிலந்திப் பூச்சிக்கு மாத்திரமே யல்லாமல் ஏனைய மிருகங்கள், பக்ஷிகள், ஊர்வன முதலியவற்றிற்கும் முத்தி கொடுத்தவனென்பதும் அஃறிணைப் பொருள்களுக்கு ஜெனனமரண நீக்கி முத்தி பாலித்த பெருமான் "மக்கடாமே யாறறி வுயிரே" என்றபடி ஆறறிவைப் பெற்று மனிதயாக்கையில் பிறந்த தனக்கும் கட்டாயம் ஜெனன மரணத் துன்பங்களைப் போக்கி ஆட்கொண்டு முத்தி யருளுவன் என்னும் துணிவுகொண் டுள்ளாரென்பது பெறப்பட்டது. சிலந்திப் பூச்சியைப் போலவே அந்த க்ஷேத்திரத்தில் பாம்பும் யானையும் முத்தி பெற்றுள்ளது. ஆகவே அந்த மூன்றும் பூசித்த க்ஷேத்திரத்திற்குச் சீகாளத்தியெனப் பேர் அமைந்தது.சீ-சிலந்திப்பூச்சி. காளம்-பாம்பு. அத்தி-யானை. எனவே சீகாளத்தி என்பது காரணப்பெயர். யானை பாம்பு இரண்டும் முத்தியடைந்த விஷயமும் சீகாளத்திப்புராணத்திலுள்ளது. மதுரையில் சோமசுந்தரப் பெருமான் கரிக்குருவிக்கு உபதேசித்ததும், நாரைக்கு முத்தி கொடுத்ததும் திருவிளையாடற்புராணத்தில் காண்க. இதைப்போலவே பற்பல க்ஷேத்திரங்களில் பெருமான் அஃறிணைப் பொருள்களுக்கும் முத்தி கொடுத்திருக்கின்றார். பல வுயிர்கள் முத்தியடைந்த விவரத்தை ஒருவாறு,

### தணியூர்ப்புராணம்-புழுகீசப்படலம்

"பிறைம ருப்புறற் கான்முறச் செவிப்பெரு வேழ
மிறைவ லிக்கொடுங் கூற்றெற நிகழ்தரு மடங்க
வறைமு ரட்சின வாளிகாற் கதியமை பாய்மா
வுறைசெ ருத்தலா னேங்கிமி லேறுழல் பன்றி."

"மரம்ப யின்றிடு வானர நச்சுவா ளெயிற்றி
னுரம்ப யின்றிடு வாளரா வுகண்டெழு மீனம்
பரப்பு மைந்தடக் காமைபல் வகைத்தாண் டுண்டு
நிரம்பு தேன்கவர் வண்டுநுண் சிறைநில வீயே."

"கதியின் மிக்கதாய் விரைசெலு முயல்கடி யுறவி
குதிய மைந்துபாய் தவளைபீ லிக்குரா னுரை

பொதிசி றைப்பெரும் பிணிமுகம் புகழ்க்கருங் குருவி
யதிர ருக்கடுங் கலுழன்முற் பற்பல வாக."

"சிவபி ரான்றிரு வருட்குறி யருச்சனை செய்தே
பவமொ ழித்தன கூடிய மட்டுமப் படியே
கவலை தீர்தரப் பூசைசெய் வாமெனக் கருதி
யவம கன்றவப் பூசையாங் கெழுந்ததன் போடும்."

என வருஞ் செய்யுள்களாற் றெளிக.

**சூரியன் பாம்பிற்றுப் பயப்படும் காரண விவரம்:**-பூர்வம் திருப் பாற்கடல் கடைந்தபொழுது கடைசியில் அமிர்தம் உண்டானது. அவ் வமிர்தத்திற்காகத் தேவர்களும் அசுரர்களும் சண்டையிட, விஷ்ணு மோகினி வடிவம்தாங்கி அவர்கள் முன்பாகவந்து யான் வேண்டுமோ? அமிர்தம் வேண்டுமோ? என்று கேட்க, அசுரர்கள் பெண்மேல் விருப்புற்றுத் தங்களுக்குள்ளே தாங்களே ஒவ்வொருவ ராக எதிர்த்துச் சண்டைசெய்து பலர் இறந்து போனார்கள். பிறகு விஷ்ணு தேவர்களை ஒரு பக்கமாக அமர்த்தி அவர்களுக்கு அமிர்தத் தைப் பங்கிட்டுக் கொடுக்கும்போது அசுரர்களில் இரண்டுபேர் தேவர்கள் கூட்டத்தில் சேர்ந்து கொண்டார்கள். விஷ்ணு அவர்களிரு வரையும் அசுரர்களென்று தெரியாமல் அவர்களுக்கும் அமிர்தம் கொடுக்க அவர்கள் சாப்பிட, இதனை யுணர்ந்த சூரிய சந்திரர் விஷ் ணுவுக்குக் கண் சைகையால் காட்ட, விஷ்ணு கோபம்கொண்டு தனது கையிலிருந்த சட்டுவத்தால் அவ்விரு அசுரர் தலைகளையும் வெட்டித் தள்ளிவிட்டார். ஆனால், அவர்கள் அமிர்தம் சாப்பிட்ட விசே டத்தால் இறவாமல் சிவார்ச்சனை செய்து இராகு கேது என்னும் கிரகங்களாகித் தம்மை விஷ்ணுவுக்கு கண் சைகையால் அசுரரெனக் காட்டிய சூரிய சந்திரர் மீது நீங்காது பகைகொண்டு அவர்களை துன்புறுத்தி வருவார்கள். அதுவே கிரஹணம் என்பதாம். கிரஹம் + அணம் = கிரஹணம். அணம்-சமீபித்தல். இதனை,

**கந்தபுராணம்**

"தண்டா மரைக்குப் பகைகண் பெனச் சாருநீரார்
கண்டார் புடையுற் றிங்கிவர் கள்வ ரேயாம்

உண்டா ரமுதங் கடிதென் றுளத்துன்னி யங்கண்
விண்டா னவற்குக் குறிப்பால் விழிகாட்டி னரால்."
"காட்டுற் றிடலு மரிநோக்கியிக் கள்வ ரேயோ
ஈட்டுற்ற வானோ ருடலுண்குவ ரென்று தன்கை
நீட்டுற் றிடுசட் டுவங்கொண்டு நிருதர் சென்னி
வீட்டிச் சுராருக் கமுதூட்டி விருந்து செய்தான்."
"புன்னாக நாக மணிவா னடிபோற்றி நோற்றுச்
செந்நாக மோடு கருநாகத்தின் செய்கை பெற்றுப்
பின்னாக முன்னந் தமைக்காட்டிய பெற்றி யோரை
அந்நாக மீது மறைப்பா ரமுதுண்ட கள்வர்."

என வருவனவற்றா னுணர்க. உனை-இடைக்குறை. நீங்குற என்பதில் உறு-பகுதிப் பொருள் விகுதி. அறியேன் என்பதில் எதிர்மறை விகுதி புணர்ந்து கெட்டது. தேர்த்தரணி-இரண்டாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்றொக்கதொகை. (69)

அங்கையின் வைத்த கூர்ங்கனன் மழுவா
லருவினைக் காடற வெறிந்து
மங்கலில் பத்தி வித்திட வடியேன்
மனத்தினைத் திருத்துநா ளுளதோ
பொங்குறு செக்கர் கருவிசும் புறவேள்
புரத்தெரி கதுவிட நோக்கித்
தங்குத லொப்ப நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** வேள் புரத்து-மன்மதனுடைய உடம்பில், எரி கது விட - நெருப்பு பிடிக்கும்படி, நோக்கித் தங்குதல் ஒப்ப - பார்த்து அமர்ந்தருளியதுபோல, பொங்குறு செக்கர் - ஒளிமிக்க செவ்வான 'ானது, கரு விசும்பு உற-நீலநிறமான வானத்தில் தோன்ற, நின் றிடும்-அதற்கு எதிராக எழுந்தருளிய, சோணசைலனே! கைலை ாயகனே!—, அம் கையில் வைத்த-அழகிய திருக்கரத்தில் லேந்திய, ூர் கனல் மழுவால்-கூர்மையான அனலுருவாகிய பரசுப்படையால், அரு வினைக் காடு அற எறிந்து - யாவராலும் விலக்குதற்கரிய

வினைகளாகிய காட்டை முழுதும் வெட்டி, மங்கல் இல் பத்தி வித்து இட - குன்றாத அன்பென்னும் விதையை இட்டு வளர்க்கும்படி, அடியேன் மனத்தினை-அடியேனுடைய மனத்தை, திருத்தும் நாள் உளதோ - திருத்தமாகச் செய்யும் தினமும் உண்டோ? (உணரேன்); எ-று.

(வி - ரை.) யாவராலும் விலக்குதற்கு அருமையாயுள்ளது நல்வினை தீவினைகளாகிய இருவினைகளுமே யாகலின் 'அருவினை' என்றார். இதனை,

**நாலடியார்**

"ஈண்டுநீர் வையத்து ளெல்லாரு மெத்துணையும்
வேண்டார்மற் றீய விழைபய னல்லவை
வேண்டினும் வேண்டா விடினு முறற்பால
தீண்டா விடுத லரிது"

என்பதனானறிக. சிவபெருமான் அடியேனுடைய வினைகளாகிய காட்டை முழுதும் வெட்டி ஒழித்தாலன்றி வேறெவராலும் வினைகளாகிய காட்டை வெட்டி ஒழிக்கமுடியாதாகலின் 'அருவினைக் காடற வெறிந்து' என்றார். பெருமான் தம்முடைய அழகிய திருக்கரத்தி லேந்திய கூர்மையான அனலுருவாகிய மழுவாயுதத்தால் வெட்டியருள வேண்டுமென்பார் 'அங்கையின் வைத்த கூர்ங்கனன் மழுவால்' என்றார். குறையாத பத்தி யென்னும் விதையை இட்டு வளர்க்கும்படி அடியேன் மனத்தைத் திருத்தமாகச் செய்யுநாள் எந்நாளோ வென்பார் 'மங்கலில் பத்தி வித்திட வடியேன் மனத் தினைத் திருத்துநா ளுளதோ' என்றார். எனவே,

**பட்டினத்தார் பாடல்**

"அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே"

என்றபடி ஆன்மாக்களை விடாது பற்றுவதாகிய நல்வினை தீவினை என்னும் இருவினைக் காட்டைச் சிவபெருமான் தனது திருக்கரத்தி

லுள்ள பாசாயுதத்தா லல்லாமல் வேறெதனாலும் காட்டை அகழ்தலும் ஆகாது என்பதும், சிவபெருமான் ஒருவரே திருக்கருணை கொண்டு மனமாகிய புலத்தைத் திருத்தினாலல்லாமல் ஆன்மாக்களது மனம் ஆகிய புலம் எக்காலத்தும் திருத்தமடையா தென்பதும் பெறப் பட்டது. பத்தியை வித்தாக உருவகித்து, மனத்தைப் புலமெனக் கூறாதொழிந்தமையில் இது ஏகதேச உருவகவணி. அஃதாவது: ஒரு பகுதியை உருவகப்படுத்தி, மற்றொரு பகுதியை உருவகப் படுத்தாவிடின் ஏகதேச உருவக அணியாம். (உ-ம்) இவன் பகை வூர்க்குச் சிங்கம். இங்கு, இவனைச் சிங்கமென்று கூறிப் பகைவரை யானையென்று கூறாமை காண்க. அருவினை என்பதில் அருமை-கொடுமை யென்னும் பொருள் கொண்டுள்ளது. மன்மதனுடைய தேகத்தில் அக்கினி பற்றும்படி பார்த் தமர்ந்தருளியதுபோல, ஒளி மிக்க செவ்வானமானது நீலநிறமுடைய வானத்தில் பொருந்த அதற்கெதிரில் எழுந்தருளும் பெருமானென்பார் 'பொங்குறு செக்கர் கருவிசும் புறவேள் புரத்தெரி கதுவிட நோக்கித் தங்குத லொப்ப நின்றிடும்' என்றார். எனவே, நீலநிறத்துடன் கூடிய ஆகாயம், கரியநிற முடையவனான மன்மதனுக்கும், செவ்வானம் மன்மதன் தேகத்தில் பிடித்துக்கொண்ட நெருப்புக்கும் சோண சைலமாகிய இம்மலை அந்த மன்மதனுக்கு எதிரில் நிற்கின்ற சிவ பெருமானுக்கும் உவமையாயின. புரம் - உடம்பு. "மூப்புரமாவது மும்மல காரியம்" என்பது திருமந்திரம். கருமை + விசும்பு = கருவிசும்பு. பண்புத்தொகை. "ஈறு போதல்" என்பதால் நிலைமொழி மகர ஐகாரம் கெட்டது. இல்-எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம் விகுதி குறைந்து நின்றது. அகம் + கை = அங்கை. என்னை?

நன்னூல்

"அகமுனர்ச் செவிகை வகினிடை யனகேடும்"

என்னும் சூத்திரத்தா னென்க. பெருமானே ஆண்டானெனவும், தான் அவனுக்கு அடிமைப்பட்ட அடிமை எனவும், ஆண்டான் அடிமை என்ற சைவசித்தாந்த கொள்கை விளக்கவும் 'அடியேன்' என்றார். சைவசித்தாந்திகள் தங்களை **ஆண்டானடிமை** யெனக்

கூறுவர். ஆண்டானடிமை வைத்தியலிங்க ஆச்சாரி முதலியோர் இதற்குதாரணம். இதனை,

திருத்தொண்டத்தொகை

"தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்"

எனவும், **தாயுமானவர் பாடல்களில்** பல இடங்களில் வருவதனாலும் அறிக. விரிக்கிற் பெருகும். (70)

சுருக்குமைம் புலனும் விரிக்குமூ தறிவுந்
துன்னுநல் லினமுநீத் தகன்றே
யிருக்கும்வெங் கயவ ரினமுமென் றருளி
யென்னைநின் னடிமைசெய் தருள்வாய்
முருக்குமங் கதமா மணியுமிழ்ந் தகன்ற
முழைதழற் றெனவுளம் வெருவித்
தருக்குமொண் புலிசென் றுறமருள் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) அங்கதம் - பாம்புகள், முருக்கும் மாமணி உமிழ்ந்து-இருளை ஓட்டுகின்ற பெரிய மணிகளைக் கக்கி, அகன்ற முழை-நீங்கிச்சென்ற குகையை, தழற்று என உளம் வெருவி-இஃது அக்கினி யுடைத்தென்று மனத்தில் அச்சங்கொண்டு, தருக்கும் ஒண் புலி-செருக்கடைகின்ற இயல்பினையுடைய அழகிய புலிகள், சென்று உற-அக்குகையிற் போய் உறைவதற்கு, மருள்-மருண்டு விலகி ஓடப் பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, சுருக்கும் ஐம்புலனும் - விஷயாதிகளிற் செல்லாது அடக்கிய ஐம்புலன்களையும், விரிக்கும் மூதறிவும் - நன்னெறிகளில் விரித்துச் செல்லக்கூடிய (பழமையான) பேரறிவையும், துன்னும் நல் இனமும் - சேர்ந்து வாழ்தற்குரிய அன்பர் கூட்டத்தையும், நீத்து அகன்றே யிருக்கும்-எந்நாளும் பிரிந்து விலகியே யிருக்கத்தக்க, வெம் கயவர் இனமும்-கொடிய கீழ்மக்களின் கூட்டத்தையும், என்று அருளி-எக்காலத்தில் அடியேனுக்குக் கொடுத்து, என்னைநின் அடிமை செய்து அருள்வாய்-அடியேனைத் தேவரீர் அடிமையாக்கிக் கொண்டருள்வீர்; எ-று.

(வி-ரை) ஐம்புலச் சுருக்கமும் அறிவின் பெருக்கமும், அன்பர் கூட்டத்தின் சேர்க்கையும், அல்லார் கூட்டத்தின் நீக்கமும் வேண்டுமெனக் கூறுபவர், சொற்களை முன்பின்னாக அமைத்து முரண் தொடை என்னும் இலக்கண மமையக்கூறி யிருத்தல் காண்க. முருக்கும் அங்கதம் என்பதற்கு உயிர்களைக் கொல்லும் பாம்பு எனப் பொருள் கூறினும் கூறலாம். 'தழற்று' என்பது படர்க்கை ஒன்றன்பாற் குறிப்புவினைமுற்று. முதுமை+அறிவு= மூதறிவு. "ஈறுபோதல்," "ஆதிநீடல்," என்னும் இருவிகாரங்கள் பெற்றது. விஷயாதிகளில் செல்லாது அடங்கிய ஐம்புலனும், நல்ல நெறிகளில் விரித்துச் செல்லக்கூடிய உயரிய உணர்வும், அடியார்களிணக்கமும், கீழ்மக்களை நீங்கியிருத்தலுமாகிய இவைகளை எக்காலத்தில் அடியேனுக்கு அருளி அடியேனைத் தேவரீர் அடிமையாக்கிக் கொண்டருளுவீர் என்பார் 'சுருக்கு மைம்புலனும் விரிக்கு மூதறிவும் துன்னுநல் லினமுநீத் தகன்றே யிருக்கும் வெங்கய வரினமு மென்றருளி யென்னை நின்னடிமை செய்தருள்வாய்' என்றார். பாம்புகள் குகைகளில் இருளை ஓட்டுகின்ற பெரிய நாகமணிகளைக் கக்கி அக்குகையைவிட்டு நீங்குமென்பார் 'முருக்கு மங்கதமா மணியுமிழ்ந்தகன்ற முழை' என்றார். குகைகளிலுள்ள நாகமணிகளைச் செருக்குக்கொண்ட புலிகள் பார்த்து அம்மணிகளிருக்கும் பிரகாசத்தால் இஃது அக்கினி யுடைத்தென்று மனதில் அச்சங்கொண்டு மருண்டு விலகி ஓடும் என்பார் 'தழற்றென வுளம் வெருவித் தருக்கு மொண்புலி சென்றுற மருள்' என்றார். (71)

அந்தரி குமரி யஞ்சலி கௌரி
யம்பிகை மனோன்மணி மதங்கி
சுந்தரி யுமையுண் ணாமுலை யெனநின்
றுணைவியை வாழ்த்துமா றருளாய்
வந்தரி சுருதி மருங்கினிற் பாட
வயங்குதும் புருவுநா ரதனுந்
தந்தரி யிசையாழ் பாடுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** *அரி மருங்கினில் வந்து-விஷ்ணு அருகில் அணைந்து, சுருதி பாட - வேதத்தை இசையுடன் பாட, வயங்கு தும்புருவும் நாரதனும்-கீர்த்தி விளங்கப்பெற்ற தும்புருவும் நாரதரும், தந்திரி யாழ்-நரம்புகளுடன் கூடிய யாழைக்கொண்டு, இசை பாடுறும்-(அவ் வேத இசைக்கேற்ப) இசை பாடுகின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, அந்தரி-உயர்வாகிய கதியை யுடையவளே!, குமரி- இளமைக்கோல முடையவளே!, அஞ்சலி-அடைந்தார்க்கு அபயம் அளிப்பவளே!, கௌரி-வெண்ணிறமுடையவளே!, அம்பிகை-அனைத் துயிர்க்குந் தாயே!, மனோன்மணி - மனாதீதமானவளே!, மதங்கி- இசைபாடி யமரும் திருக்கோலத்தவளே!, சுந்தரி - அழகுமிகப் பெற்றவளே!, உமை - உமை எனும் பெயர் பெற்றவளே!, உண்ணா முலை-அபீத குசாம்பாளே!, என நின் துணைவியை வாழ்த்துமாறு- என்று தேவரீருடைய துணைவியாராகிய எம்பெருமாட்டியைத் துதிக்கும்படி, அருளாய்-அருள் செய்வீராக. எ-று.*

(வி·ரை.) *'அந்தரி' என்பதற்கு மேலான இடத்தில் வாழ்பவள் என்றும் பொருள். 'கௌரி' என்பதற்குப் பொன்னிறமுடையவள் எனினும் அமையும். இல்லறம் நடத்துவதற்குப் புருஷனுக் குத் துணையாயிருப்பவள் மனைவியாகலின், 'துணைவி' எனப் பெயர் வந்தது. அவ்வாறே மனையாளுக்கும் புருஷனென்க. இரு வருங் கூடினாலொழிய ஒருவராலேயே இல்லறம் நடத்த முடியாது. இதனை,*

> *"மருவிய காதன் மனையாளுந் தானு*
> *மிருவருங் கொண்டீர்ப்பி னல்லா - லொருவரால்*
> *இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடம்*
> *செல்லாது தெற்றிற்று நின்று"*

*என்னும் செய்யுளானறிக. அருளே சத்தியாக "மெய்யருளாந் தாயுடன் சென்றுபின் தாதையைக்கூடி" எனப்* பட்டினத்தடிகள் *பணித்தவாறு சத்தியை வழிவிட்டே சிவத்துடன் கூடவேண்டு மென்பது அறிஞர் துணிபாகலின், அம்முறை தானும் பற்றவேண்டு மாகலானும், அருளே சத்தியாகலானும், அருளின்றிச் சிவமில்லையாக*

லானும், சிவமின்றிச் சத்தியில்லை யாகலானும், சூரியன் இருளை நீக்கி வெளிச்சத்தைக் கொடுப்பதுபோல அருளால் மருளினை நீக்குதலானும் 'நின் துணைவியை வாழ்த்துமா றருளாய்' என்றார். இதனை,

### சிவஞான சித்தியார்

"அருளது சத்தி யாகு மரன்றனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை
மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போல வீசன்"

என வருமாற்றானறிக. 'அரி' யென்பதற்கு வண்டு எனவும், 'சுருதி' என்பதற்கு இசை எனவும் பொருளுரைப்பினும் அமையும். விஷ்ணு சமீபத்தில் வந்து வேதத்தை இசையுடன் பாட, அவ்வேத இசைக் கேற்ப, தும்புருவும் நாரதரும் யாழைக்கொண்டு இசைபாடிப் பரவு வார்களென்பார் 'வந்தரி சுருதி மருங்கினிற் பாட வயங்கு தும்புருவு நாரதனுந் தந்திரி யிசையாழ் பாடுறும்' என்றார். தும்புரு, நாரதர் ஆகிய இருவரும் யாழினைக்கொண்டு இசைபாடிப் பரவும் கொள்கை கொண்டவர்கள். இதனை,

### பாரதம்

"தும்பைவகை மாலைசெறி வில்வமொடு கொன்றைமலர்
சூதமறுகே கமழ்தருஞ்
செம்பவள வேணிமிசை திங்கணதி சூடியருள்
செம்பொன்வட மேருவனையா
னும்பர்மணி யாழினொடு தும்புருவு நாரதனு
முருகியிசை பாடவருள்கூ
ரம்பையுட னேவிடையின் மீதொளிர நின்றதனை
யஞ்சலிசெய் தன்பொடுதொழா"

எனவருஞ் செய்யுளானறிக. இருவரினுஞ் சிறப்புடைமைபற்றித் தும்புருவை முன்னர்க் கூறினார். தந்திரி-நரம்பு. (72)

நீக்குறு மயலு நிலைத்தபே ரறிவு
நின்றிரு வடிமலர்க் கன்பு
காக்குறு மனமு முடையமெய்த் தொண்டர்
கணத்தினு ளெனைவிடுத் தருளாய்
தேக்குறு மிருலிற் கன்னல்காட் டுவபோற்
றென்றல்வந் தசைதொறு மெல்லத்
தாக்குறு காந்த டுடுப்பலர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) தென்றல் வந்து அசை தொறும் - தென்றற்காற்று வந்து வீசுந்தோறும், தேக்கு உறும் இருலில்-(தேன்) மிகுந்துள்ள தேனடையினிடத்து, மெல்லத் தாக்குறு காந்தள் துடுப்பு-மெது வாகச் சென்று மோதுகின்ற காந்த ளரும்பானது, கன்னல் காட்டுவ போல் அலர்-பூசைக்குரிய நாழிகையைத் தெரிவித்தல்போல் மலர் கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, நீக்குறும் மயலும்- நீக்கியிருக்கின்ற மயக்கத்தையும், நிலைத்த பேரறிவும் - உறுதியான பேருணர்வையும், நின் திருவடி மலர்க்கு-தேவரீருடைய தாமரை மலர்போன்ற திருவடிகளில், அன்பு காக்குறும் மனமும் - அன்பு மிகப்பெற்ற மனத்தையும், உடைய மெய்த் தொண்டர் - உடைய உண்மைத் திருத்தொண்டர்களுடைய, கணத்தினுள்-கூட்டத்தில், எனை விடுத்து அருளாய்-இழிவுடையேனை அடியேனையும் சேர்த் தருளுவீராக; எ-று.

(வி-ரை.) மயக்கம் நீங்கினவர்களும் உறுதியான பேருணர்வை யுடையவர்களும், சிவபெருமான் திருவடிபக்தி யுடையவர்களும் ஆகிய உண்மைச் சிவனடியார் திருக்கூட்டத்தில் தன்னையுஞ் சேர்த் தருளவேண்டுமென்று பிரார்த்திப்பார், 'நீக்குறு மயலு நிலைத்தபே ரறிவுநின் றிருவடி மலர்க்கன்பு காக்குறு மனமு முடையமெய்த் தொண்டர் கணத்தினு ளெனைவிடுத் தருளாய்' என்றார். இதனை,

**தாயுமானவர் பாடல்**

"இடத்தைக் காத்திட்ட சுவானெனப் புன்புலா விறைச்சிச்
சடத்தைக் காத்திட்ட நாயினே னுன்னன்பர் தயங்கு

மடத்தைக் காத்திட்ட சேடத்தால் விசேடமாய் வாழ
விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய் நின்னருள் வேண்டும்" எனவும்

"அரும்பனே னென்னினுங் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்"

எனவும் வருமாற்று னறிக. தென்றற் காற்றானது வந்து வீசுந் தோறும் தேன் மிகுந்துள்ளதான தேனடையினிடத்து மெல்ல மோதுகின்ற காந்த ளரும்பானது இதழ்கள் விரியப் பெறும்; அவ்வாறு இதழ்கள் விரியப்பெறுதல் பூசைக்குரிய நாழிகையைத் தெரிவித்தல்போல விருக்கின்றதென்பார், 'தேக்குறு மிறுலிற் ன்னல் காட்டுவபோற் றென்றல்வந் தசைதொறு மெல்லத் தாக்குறு காந்த ளுடுப்பலர்' என்றார். மயல் என்பது மையல் என்றும் வரும். நின் + திரு = நின்றிரு என்றாயது, "நின்னீ ரியல்பாம்" "னலமுன் றளவு" என்னும் இவ்விரு நன்னூல் சூத்திரத்தானு மென்க. திருவடி மலர்க்கு-நான்காம் வேற்றுமை ஏழாம் வேற்றுமையுடன் மயங்கியது; எனவே, இது வேற்றுமை மயக்கம். உருபுமயக்கமெனினும் ஒக்கும். இதனை,

நன்னூல்

"யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்"

என்னும் சூத்திரத்தா னுணர்க. (75)

பவமிலே மினியா மென்றிறு மாந்து
பயமற விருந்திடப் பத்தி
நவமிலே மடியே மென்செய்வா னிருந்து
நாளினை வறிதொழிக் கின்றே
மவமிலே மிமையா விழியினாற் காண்கை
யால்வலங் கொளவடி நிலந்தோய்
தவமிலே மெனவான் சுரர்தொழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** இமையா விழியினால்-இமைக்காத கண்களால், காண் கையால்-தரிசனஞ் செய்யப் பெறுதலால், அவம் இலேம்-பயனற்ற

செய்கை யுடையோமல்லோம், வலம் கொள-(ஆனாலும்) வலமாகச் சூழ்ந்து வருதற்கு, அடி நிலம் தோய்-பாதங்கள் பூமியிற் பொருந்தப் பெற்ற, தவம் இலேம் என-தவத்தைச் செய்திலேம் என்று, வான் சுரர் தொழும் - தேவலோகத்து வாழும் வானவர்கள் (இரங்கித்) தொழுகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, இனி யாம் பவம் இலேம் என்று-இனிமேல் யாங்கள் பிறப்பிற் புகுதல் இல்லேம் என்று, இறுமாந்து-இறுமாப்பெய்தி, பயம் அற இருந்திட-அச்சமற்றிருப்பதற்கு, பத்தி நவம் இலேம் - அன்பாகிய புதுமை இல்லா தொழிந்தேம், என் செய்வான் இருந்து-எந்தப் பொருளைத் தேடும் படியாக இருந்து, நாளினை - வாழ்நாளை, வறிது ஒழிக்கின்றேம் - வீணாகக் கழிக்கின்றேம். (இஃது என்ன பேதைமை); எ-று.

(வி-ரை.) இனிமேல் பிறவியில்லை என்று இறுமாப்பெய்தி பயமில்லாமல் இருப்பதற்கு பத்தியில்லை யென்பார் 'பவமிலே மினியாமென்றிறு மாந்து பயமற விருந்திடப் பத்தி நவமிலேம்' என்றார்; எனவே, தமது மனமானது கல்லினும் வலிமையுடையதாக இருக்கின்றது என்பதும்; அப்படி இருப்பதால் மனத்தில் பத்தி முளைத்தல் அருமை யென்பதும்; அத்தகைய அரிய பத்தி உண்டானால் மாத்திரம் பிறப்பை யொழிக்க முடியுமே தவிரப் பத்தியுண்டாகாவிட்டால் பிறப்பை யொழிக்க முடியாது என்பதும் பெறப்பட்டது. அப் பத்தியைப் பெறாதவர்களுடைய வாழ்வு பயனற்றதே யல்லாமல் ஒரு பயனும் உடையது ஆகாதாகலின் அடியேம் இவ்வுலகத்திலிருந்துகொண்டு வாணாளை வீணாளாகக் கழித்து விடுகின்றேம் என்பார், 'என்செய்வா னிருந்து நாளினை வறிதொழிக்கின்றேம்' என்றார். வாக்கு மனாதீதனாகிய சிவபெருமானைக் குவிதலில்லாத (இமையாக்) கண்களால் தரிசித்தலும் கால் நிலத்திற் பொருந்தப் பிரதக்ஷிணம் வருதலும் தவமாக இருக்க, குவிதலுடைய (இமைக்கும்) கண்களினாற் றரிசித்தலும், பிரதக்ஷிணம் செய்யப் பாதங்கள் பூமியிற் றோயப்பெறுமையும் அவமாயிருக்க, தேவர்கள் இமையா நாட்டத்தால் தரிசிக்கப் பெறுதலிற் றவமும், ஆனால் பிரதக்ஷிணஞ் செய்ய மாத்திரம் பாதங்கள் பூமியிற் றோயப் பெறாமையால் அவமுமுடைய மென்பார், 'அவமிலே மிமையா விழி

யினாற் காண்கையால் வலங்கொள வடிநிலந் தோய்தவ மிலேமென வான்சுரர்' என்றார். "பெற்றபொருள் சிறிதாகப் பெறுதவொன் றைப் பெரிதாகப் பேணுமவர் பெட்பேபோல" எனப் பெரியோர் கூறியபடி, பெருமானைக் கண்களார இமையா விழியாற் காணப் பெறுதலிற் றவமும் வலம் வருதலில் அவமுமுடைய சுவர்க்கலோக வாசிகளான தேவர்கள் வருந்தித் தொழப்பெறும் பெருமா னென்பார், "அவமிலேம்............தவமிலேமென வான்சுரர்தொழுஞ் சோண சைலனே"என்றார். எனவே, சிவபெருமானைக் கண்ணாற் காண்டலும், ாலால் வலம் வருதலுமே தவத்திற் சிறந்ததென விளக்கி யிருத்தல் ாண்க. செய்வான்-வினையெச்சம்: செய்-பகுதி, வான் - விகுதி, தோய்தவம்: தோய்தற்குக் காரணமாகிய தவம்; தவம் என்பது வடசொல், தபம் என்பதுமது: பாவத்தை எரிப்பது என்பது பொருள். தேவர்கள் கண்கள் இமையாத கண்களாகலின் அவர்களுக்கு இமை யவர், இமையோர் எனப் பெயர்க ளமைந்தன. (74)

கண்கணிற் பரிந்து கண்டுவப் பனவே
 கைகணிற் றொழுபவே செவிகள்
பண்களிற் புகழும் புகழ்ச்சிகேட் பனவே
 பதமினை வலம்புரி வனவே
யெண்குபுற் றிடப்ப வெழுமணி கரவா
 விருந்துசென் றிருள்கவர் வனபோற்
றண்கதிர்க் கற்றை கான்றிடுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப - ரை.) எண்கு புற்று இடப்ப - கரடியானது புற்றினைத் தோண்டுதலினால், எழும் மணி-அப்புற்றிலிருந்து வெளிப்படுகின்ற நாகரத்தினங்கள், கரவா இருந்து-மறைந்திருந்து, சென்று இருள் கவர்வனபோல்-வெளியேசென்று இருட் கூட்டத்தைக் கவர்கின்ற வைபோல, தண் கதிர்க் கற்றை-குளிர்ந்த கிரணக்கூட்டங்களை, கான் றிடும்-வீசப்பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, கண்கள் பரிந்து நின்கண்டு-அடியேனுடைய கண்கள் விருப்பங்கொண்டு தேவ ரீரைத் தரிசித்து, உவப்பனவே - மகிழ்ச்சியடையத் தக்கவைகளே,

கைகள் நின் தொழுபவே-கைகளிரண்டும் தேவரீரை வழிபடற்குரியனவே, செவிகள் - அடியேனுடைய காதுகள், பண்களில் புகழும்-அன்பர்கள் பண்ணோடுபாடிப் புகழ்கின்ற, புகழ்ச்சி கேட்பனவே-தேவரீருடைய பெரியகீர்த்திகளைக் கேட்கத்தக்கனவே, பதம்-அடியேனுடைய பாதங்கள், நினைவலம் புரிவனவே-தேவரீரை வலம் வருதற்குரியவைகளே (ஆகலின் இரங்குவீராக); எ-று.

(வி-ரை.)

"ஊர்வ பதிஞென்று மொன்பது மானுட
நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாஞ்-சீரிய
பந்தமாந் தேவர் பதினு லயன்படைத்த
வந்தமில்சீர்த் தாவரநா லைந்து"

என்றபடி, நால்வகைத் தோற்றத்து எண்பத்துநான்குலக்ஷம் யோனி பேதங்களில்,

**தாயுமானவர்**

"எண்ணரிய பிறவிதனின் மானுடப் பிறவிதா
னியாதினு மரிதரிதுகா
ணிப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
வேதுவருமோ வறிகிலேன்" எனவும்,

**தனிப்பாடற்றிரட்டு-ஔவைபிராட்டியார்**

"அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிதரிது மானிட ராத லரிது" எனவும்,

**விவேகசிந்தாமணி**

"மக்கள் யாக்கையிற் பிறத்த லேயரிது" எனவும்,

எனக்கூறியபடி, கிடைத்தற் கரியதான "மக்கடாமே யாறறிவுயிரே" என ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனர் கூறியபடி ஆறறிவோடுகூடிய மக்கள் யாக்கையைப்பெற்ற நாம் அவனருளாலேபெற்ற இவ்யாக்கையின் சகல உறுப்புக்களும் சம்பூரணமாகப் பெற்றோ

மாகலின் அவ்வவயவங்களால் அடையவேண்டிய பயனை யடைந்தா லல்லாமல் மனித யாக்கையாலும் மனித யாக்கையின் உறுப்பாலும் ஒரு சிறிதும் பயனில்லையென்று கூறுவான் தொடங்கி, கண்கள் இறைவனைக் களிப்போடு கண்டு ஆனந்திக்கத் தக்கவைகளேயன்றி வேறொன்றும் செய்யத்தக்கன வல்லவென்னுங் கருத்துத்தோன்ற, 'கண்கணிற் பரிந்து கண்டுவப் பனவே' என்றார். இதனை,

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்-திருவங்கமாலை

"கண்காள் காண்மின்களோ, கடல்-நஞ்சுண்ட கண்டன்றன்னை
எண்டோள் வீசிநின்றாடும் பிரான்றன்னைக், கண்காள்" எனவும்,

"கண்களிரண்டு மவன்கழல் கண்டுகளிப்பன வாகாதே"

எனவும் கூறியுள்ளதறிக. கைகள் சிவபெருமானைப் பலவித மலர் களைக்கொண்டு அருச்சித்து வணங்கத் தக்கவைகளே யல்லாமல் வேறொன்றும் செய்யத்தக்கன வல்லவென்னுங் கருத்துத்தோன்ற, 'கைகணிற் றொழுபவே' என்றார். இதனை,

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்-திருவங்கமாலை

"கைகாள் கூப்பித்தொழீர், கடி-மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக், கைகாள்"

எனக் கூறியதா னுணர்க. செவிகள் சிவபெருமானுடைய திவ்ய புகழ்ச்சியாகிய தேவாரம் முதலிய திருமுறைகளை அன்பர்கள் இசையொடுபாடக் கேட்கத் தக்கனவே யன்றி வேறொன்றும் கேட்கத் தக்கன வல்லவென்னும் கருத்துத்தோன்ற, 'செவிகள் பண்களிற் கமழும் புகழ்ச்சி கேட்பனவே' என்றார். இதனை,

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்-திருவங்கமாலை

"செவிகாள் கேண்மின்களோ, சிவ-னெம்மிறை செம்பவளம்
எரிபோல் மேனிப் பிரான்றிற மெப்போதுஞ், செவிகாள்"

எனக் கூறியதா னுணர்க. பாதங்கள் சிவபெருமான் திருக்கோயில் களை வலம்புரியத் தக்கனவேயன்றி வேறொன்றும் செய்யத்தக்கன

வல்லவென்னும் கருத்துத்தோன்ற, 'பதமினை வலம்புரி வனவே' என்றார். இதனை,

### திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்-திருவங்கமாலை

"கால்களாற் பயனென், கறைக்-கண்டனுறை கோயில்
கோலக் கோபுரக் கோகரணஞ் சூழாக், கால்"

எனக் கூறியதா னுணர்க. "ஒருமொழி யொழிதன் னினங் கொளற் குறித்தே" என்ற நன்னூற்சூத்திர விதிப்படி உபலக்ஷணத்தால், தலை, மூக்கு, வாய், நெஞ்சு முதலானவையுங் கொள்க. அவைகளையும் சிவ பெருமான் திருத்தொண்டுகளுக்கே ஈடுபடச்செய்து காலத்தை அவப்பொழுதாக்காமல் தவப்பொழுதாகப் போக்கவேண்டு மெனக் கூறினுரென்றறிக. இதனை.

### பிரமோத்தரகாண்டம்

"கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடு நன்றாவே நன்று
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவிக ளேசெவிக
ளண்ணல்பொலங் கழலினைக்கு நெஞ்சமே நெஞ்ச
மவனடிக்கீ ழடிமைபுகு மடிமையே யடிமை"

எனக் கூறியதா னுணர்க. 'உவப்பனவே' 'தொழுபவே' 'கேட் பனவே' 'புரிவனவே' என்பவைகளிலுள்ள ஏகாரம் நான்கும் பிரிநிலை. கண், கை, செவி முதலியன சினைப்பெயர்.

புற்றுக்களில் நாகமணிகள் இருக்க, அப்புற்றுக்களைக் காடிகள் தோண்டுதலினுல், அப்புற்றிலிருந்து வெளிவந்த நாகமணிகள் ஒளித் திருந்து வெளிதோன்றி இருட்கூட்டத்தைக் கவர்கின்றவைபோலக் குளிர்ந்த கிரணக்கூட்டங்களை வீசப்பெறும் என மலைவளம் கூறு வார் 'எண்கு புற்றிடப்ப வெழுமணி கரவா விருந்து சென்றிருள் கவர்வன போற்றண் கதிர்கற்றை கான்றிடும்' என்றார். காடிகள்

புற்றுக்களைத் தோண்டுவதற்குமுன் நாகமணிகள் ஒளித்திருந்து காடிகள் தோண்டுவதனாலே வெளிப்பட்டன வாதலின் 'எழுமணி கரவா விருந்து சென்று' என்றார். காடிகள் தோண்டுவதனாலே புற்றிலிருந்து வெளிவந்த நாகமணிகள் குளிர்ந்த கிரணக்கூட்டங்களை வீசினவாதலின் 'தண் கதிர்க் கற்றை கான்றிடும்' என்றார். இருட்டொகுதிபோன்ற காடியினிறம் தோன்றாதபடி அம்மணிகள் கிரணங்களை வீசினவாதலால் 'இருள் கவர் வனபோற் றண்கதிர்க் கற்றை கான்றிடும்' என்றார். இங்கு இருள்என்பது இருட்டிராட்சிபோன்ற காடியினிறம். கவர்தல்-கவளீகரித்தல்; போக்குதல். மணியினொளி இருணிறத்தைப் போக்குதல் போலவே காடியின் இருட்செறிவுபோன்ற நிறத்தைத் தோன்றாதபடி கிரணக்கூட்டங்களை வீசின என்க. எனவே, புற்றில் மறைந்து கிடக்கின்ற ஒளியுடைய மாணிக்கங்கள் இருணிறமாகிய காடி புற்றைத் தோண்டினபோது அதினின்றும் ஒளி பரப்புதலால், காடியி னிருள்நிறம் மறைய மாணிக்க ஒளியே மிகுந்து தோன்று மென்பது கருத்து. கரவா-செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்.

'பண்களிற் புகழும் புகழ்ச்சி' என்றது சிறப்புடைய மூவரும் அவர் வழிவந்த பெரியார் பலரும் பாடிய திருமுறைகளை அன்பர்கள் இசையோடுபாடி இறைவனைப் புகழ்தலைக் குறித்தென்க. கண்கள் தேவரீரை விருப்பத்தோடு தரிசித்து மகிழத் தக்கவைகளென்று தெரிந்திருந்தும், கைகள் தேவரீரை வணங்கத் தக்கவைகளென்று தெரிந்திருந்தும், செவிகள் தேவரீர் புகழ்ச்சி கேட்கத்தக்கவைகளென்று தெரிந்திருந்தும், பாதங்கள் தேவரீரை வலம்புரியத் தக்கவைகளென்று தெரிந்திருந்தும் அவ்வாறு செய்ய வேண்டுமாயினும் தேவரீர் திருவருள் பாலித்தாலன்றி அடியேனால் முடியாது ஆகலால் உறுப்புக்களின் தொழில்களெல்லாம் நிறைவேறும்படியாகச் சர்வாண்டங்களிலுமுள்ள ஆன்மகோடிகளை யாட்டுவிக்கும் தேவரீர் ஆண்டருள வேண்டுமென்று பிரார்த்தித்தா ரென்பதாம். சர்வாண்டங்களிலுமுள்ள ஆன்மகோடிகளைச் சிவபெருமானே யாட்டுவிக்கின்றானென்பதனை,

### தேவாரம்

“ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
யோட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே”

### பட்டினத்தார் பாடல்

“நன்றாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் றூர்தப்பினால்
தன்றாலு மாடிச் சலித்திடு மோவந்தத் தன்மையைப்போல்
உன்றாலி யானு முறைவதல் லான்மற் றுனைப்பிரிந்தால்
என்றாலிங் காவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே”

என வருமாற்றானறிக. இருள் கவர்வன-இரண்டாம் வேற்றுமைத் தொகை. கதிர்க்கற்றை-ஆறாம்வேற்றுமைத் தொகை. (75)

நிணந்திகழ் வடிவேற் காளையே யென்று
நேரிழை யவர்விழைந் திடுவோர்
குணந்திரி தளிரின் மடியவே கண்டுங்
கொடியனேன் வாழ்வுவந் திருந்தேன்
மணந்திமிர் மகளிர் சிலம்பொடு மைந்தர்
வார்கழ றுவக்கிட வலம்போய்த்
தணந்திடு மயத் தறிந்துநாண் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மணம் திமிர் மகளிர் சிலம்பொடு-வாசனைப் பொருள்களை உடம்பிற் பூசிய பெண்களணிந்த காற்சிலம்போடும், மைந்தர் வார் கழல்-ஆடவர்கள் காலில் அணிந்திருக்கின்ற பெரிய வீரக்கழல்கள், துவக்கிட-(மிகுந்த நெருக்கத்தால்) சிக்கிக்கொள்ள (அதனை உணராதவராகி), வலம் போய்-வலமாகச் சூழ்ந்துவந்து, தணந்திடும்

அமயத்து-நீங்கிப் போங்காலத்தில், அறிந்து நாண்-உணர்ந்து நாண மடையப்பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, நேர் இழை யவர்-செவ்விய அணிகளைப்பூண்ட மகளிரால், நிணம் திகழ் வடிவேல் காளையே யென்று-ஊன் விளங்கப்பெற்ற கூர்மை மிக்க வேற்படை தாங்கிய முருகக்கடவுளே இவ ரென்று, விழைந்திடுவோர்-விரும்பப் படும் ஆடவர்கள், குணம் திரி தளிரின்-பசுமையும், மிருதுத் தன் மையுமாகிய குணங்கள் மாறப்பெற்ற தளிர்போல, மடியவே கண்டும்-இளமையும் அழகும் மாறி இறந்துபடுதலை நேரே பார்த்தும், கொடியனேன்-தீவினையேறுகிய அடியேன், வாழ்வு உவந்து இருந் தேன்-இவ்வுலக வாழ்வையே பெரிதாக மதித்துச் சந்தோஷித்திருந் தேன் (எவ்வாறு தேவரீர் அருள்பெறுவேன்); எ-று.

(வி-ரை.) 'நிணந்திகழ் வடிவேற்காளை' என்றது முருகக்கடவுளை. சூரபன்மன் கடலி லொளித்தபோது முருகக்கடவுளால் ஏவப்பட்டு அக்கடலைக் கலக்கினமையும், சிங்கமுகாசுரன், தாருகாசுரன் முதலிய எண்ணிறந்த அசுரர்கள் கடல்போல் விளங்க அவர்களை நிலைகலங்க அழித்ததும், தாரகாசுரன் கிரவுஞ்சமென்னும் அசுரனது மாயா வடிவமாகிய மலையில் வசித்திருக்கும்போது தாரகனைச் சங்கரித்துக் கிரவுஞ்சகிரியைப் பிளவுபடுத்தினமையும், சூரபன்மனுடைய சைனி யங்களை முற்றுமழித்து அவன் மார்பைப் பிளந்தமையும் ஆகிய இத்யாதி கருமங்கள் பலவும் நிகழச் செய்தது வேற்படையாகலானும் அவ்வேற்படை யேந்தியவர் முருகக்கடவு ளாகலானும் 'நிணந்திகழ் வடிவேற்காளை' என்றார். இதனை,

திருவிளையாடற் புராணம்

"கறங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப் பெருங்கடலுங்
கலங்கக் கார்வக்
துறங்குசிகைப் பொருப்புஞ்சூ ரப்பொருப்பும் பிளப்பமறை
யுணர்ந்தோ ராற்று
மறங்குலவு மகத்தழலு மவுணமட வார்வயிற்றி
னழலு மூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள் சேவடிகள்
வணக்கஞ் செய்வாம்" எனவும்,

**திருமுருகாற்றுப்படை-தனிப்பாடல்கள்**

"குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்" எனவும்,

"குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவு
மன்றங் கமரிடர் தீர்த்ததுவு - மின்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல்"

"வீரவேல் தாரவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே டிருக்கைவேல் - வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
தொளைத்தவே லுண்டே துணை"

என வருவனவற்று னுணர்க. வேலாயுதத்தைத் திருக்கரத்திலேந்திய முருகக்கடவுளே என்று மங்கையரால் விரும்பப்படும் ஆடவர்களென்பார், 'நிணந்திகழ் வடிவேற் காளையே யென்று நேரிழை யவர் விழைந்திடு வோர்' என்றார். வனப்பு, அறிவு, திறம், அருள் முதலியவற்றில் மிக்க ஆடவர்கட்கு முருகக்கடவுளை நிகராகக் கூறுதல் கவிகளின் மரபாகலின் இவரும் அவ்வாறே கூறினார்.

**தணிகைப்புராணம்**

"திருவி ளங்கிய வனப்பினி லறிவினிற் றிறத்தினி லருடன்னி
லொருவர் தங்களை யுயர்த்தமுன் முருகனை யுவமை யாக்குவர்"

என்னுஞ் செய்யுளா னறிக. ஆடவர்க்குச் சிறப்புவமையாக முருகக்கடவுளை மாத்திரமல்லாமல், விஷ்ணு, குபேரன், தேவேந்திரன், மேகம், மன்மதன், வீமசேனன், அருச்சுனன், கர்ணன், தர்மநந்தனன், சீவகன், இருபத்தொரு வள்ளல்கள், சங்கநிதி, பத்மநிதி, பஞ்சதருக்கள், சிந்தாமணி, காமதேனு ஆகிய இவைகளையும் ஆடவர்க்கு உவமையாகச் சொல்லுதலுமுண்டு. இதனை,

**இரத்தினச்சுருக்கம்**

"திருமான் முருக னளகேச னிந்திரன் சேண்முகிலே
பொருமாரன் வீமன் விசயன் மெய்க்கன்னன் புகழ்த்தருமன்
வருமான சீவகன் மூவேழு வள்ளல் வனசநிதி
தருமா மணிசங்கந் தேனுவைப் போலவுஞ் சாற்றுவதே"

எனவருஞ் செய்யுளா னறிக. மகளிரால் விரும்பப்படுவோராகிய ஆடவர்கள், பசுமையும் மிருதுத் தன்மையுமாகிய குணங்கள் மாறப் பெற்ற தளிர்போல, இளமை முதலியவைகள் நீங்கி இறந்தொழி வதைக் காட்சி அளவையால் கண்டும் கொடியவனாகிய அடியேன் இவ்வுலக வாழ்வையே பெரிதாக மதித்து இருந்தேன்; அவ்வாறு இருந்தால், தேவரீரது அருளை எவ்வித மடைவேனென்பார், 'குணந்திரி தளிரின் மடியவே கண்டுங் கொடியனேன் வாழ்வுவந் திருந்தேன்' என்றார். தளிரானது எவ்வாறு பசுமையும் மிருதுத் தன்மையுமாறி இலை, பழுப்பு, சருகு எனப் பெயருறுகின்றதோ அதுபோலவே பாலர் எனப் பலராலும் முன்னே சொல்லப்பட்டவர்க ளாகிய அழகின் மிக்கவர்கள் நாள் செல்லச் செல்லக் குமரர், தருணர் என விளங்கி அந்தத்தில் விருத்தரெனப் பலராலும் இகழ்ந்து சொல்லப்படுவார்கள். மாதர்களால் புகழப்பட்ட அவர்களே அம்மாதர் களா லிகழப்படுவார்கள். இதனை,

பட்டினத்தார் உடற்கூற்றுவண்ணம்

"மயிர்முடி கோதி யறுபத நீல வண்டிமிர் தண்டொடை
கொண்டை புனைந்து மணிபொ னிலங்கு பணிக ளணிந்து
மாகதர் போகதர் கூடி வணங்கி—

மதன சொரூப னிவனென மோக மங்கையர் கண்டும
ருண்டு திரண்டு வரிவிழி கொண்டு சுழிய வெறிந்து
மாமயில் போலவர் போவது கண்டு—

மனது பொறுமை லவர் பிறகோடி மங்கல செங்கல
சந்திகழ் கொங்கை மருவ மயங்கி யிதழமு துண்டு
தேடிய மாமுதல் சேர வழங்கி—

ஒருமுத லாகி முதுபொரு ளாயி ருந்த தனங்களும்
வம்பி லிழந்து மதன சுகந்த விதனமி தென்று
வாலிப கோலமும் வேறு பிரிந்து—

வளமையு மாறி யிளமையு மாறி வன்பல் விழுந்திரு
கண்க ளிருண்டு வயது முதிர்ந்து நரைதிரை வந்து

வாத விரோத குரோத மடைந்து
செங்கையினி லோர் தடியு மாகியே.

வருவது போல தொருமூது கூனு மந்தியெ னும்படி
குர்தி நடந்து மதியு மழிந்து செவிதிமிர் வந்து
வாயறி யாமல்வி டாமன் மொழிந்து"

என்பதனு னறிக. பிரதக்ஷிணம் வருபவர்களான மகளிரும் ஆட வரும் தங்கள் தங்கள் மனம் பெருமானிடம் பதியப் பெற்றதாலும், மிகுதியான ஜனநெருக்கத்தாலும், ஆடவரும் மகளிரும் நெருங்கிச் சேர்தலாலும் மகளிர்கள் காற்சிலம்போடு ஆடவர்கள் காலிற் கட்டிய பெரிய வீரக்கழல் சிக்கிக்கொள்ள அதனை யுணராதவர்களாகிப் பிரதக்ஷிணம் செய்து முடிந்து தத்தம் இடத்திற்குச் செல்லப் போங் காலத்துக் காற்சிலம்பொடு வீரக்கழல் சிக்கிக்கொண் டிருப்பதைப் பார்த்து ஆடவரும் மகளிரும் வெட்கமடைவார்க ளென்பார், 'மகளிர் சிலம்பொடு மைந்தர் வார்கழ றுவக்கிட வலம்போய்த் தணந்திடு மம யத் தறிந்துநாண்' என்றார். பிரதக்ஷிணம் செய்ய வருபவர்களான மகளிர் தமது தேகத்தில் பரிமளம் வீசும்படி சுண்ணப்பொடி முதலிய வாசனைப் பொருள்களை உடம்பிற் பூசிக்கக் கொள்ளுவது வழக்கமாகலின் 'மணந்திமிர் மகளிர்' என்றார். ஏகாரம் இரண்டி னுள் முன்னது தேற்றம், பின்னது அசை. 'விழைந்திடுவோர்' என்பதில், படு விகுதிதொக்கது. (76)

மாந்தளிர் கவற்று மணிச்சிலம் படிகள்
வடுவகிர் பொருவும்வா ணெடுங்கண்
காந்தளி னிமைக்கு மங்கையென் றவலக்
கன்னியர்ப் புகழ்வினை யறுமோ
பூந்திரை சுருட்டுங் கடல்கடை குநரொண்
பொறியரா வின்றிமா தவர்க்குச்
சாந்துய ரகற்று மருந்தருள் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** பூ திரை சுருட்டும்-அழகிய அலைகளைமடக்கி வீசுகின்ற, கடல் கடைகுநர் - கடலைக் கடைகின்றவர்களும், ஒண் பொறி அரவு

இன்றி-ஒளிபொருந்திய புள்ளிகளையுடைய பாம்பும் இல்லாமலே, மாதவர்க்கு - மிக்க தவத்தைச் செய்கின்ற அன்பர்களுக்கு, சாம் துயர்-மரணத் துன்பத்தை, அகற்றும் மருந்து - நீக்கக்கூடிய மருந் தினை, அருள் - கொடுத்தருள்கின்ற, சோணசைலனே! கைலைநாய கனே!—, மணி சிலம்பு அடிகள்-அரதனங்களைப்பதித்த சிலம்பணிந்த பாதங்கள், மாந்தளிர் கவற்றும் (என்று) - மாமரத்தின் தளிர்களைக் கவலையுறச் செய்யுமென்னும், வாள் நெடுங் கண்-ஒளியமைந்த நீண்ட கண்கள், வடு வகிர் பொருவும் (என்று) - மாவடுவின் பிளப்பினை ஒத் திருக்குமென்றும், அம் கை - அழகிய உள்ளங்கைகள், காந்தளின் இமைக்கும் என்று - காந்தள் மலர்போற் பிரகாசிக்கும் என்றும், அவலம் கன்னியர் புகழ்வினை-(ஒரு பயனுமின்றி) வீணாகப் பெண் களைப் புகழும் செய்கை, அறுமோ - அடியேனைவிட்டு நீங்குமோ? (அறிகிலேன்); எ-று.

(வி-ரை.) மகளிரது பாதங்கள், கண்கள், கைகள் முதலிய பல அவயவங்களும் இளமைப் பருவத்தே மிக அழகாகத் தோன்றினு லும் முதுமைப்பருவத்தில் அவ்வழகு நீங்கிநிற்பன வாகலானும், அம்மகளிர் இயமன் அனுப்பிய தூதர்களாகையாலும், அம்மாதர்களை யும் அவர்களின் அவயவங்களையும் புகழ்ந்து நிற்பதால் யாதொருபயனு மில்லையாகலானும், அவ்வாறன்றி என்றும் ஒருப்படித்தாய் விளங் கும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை வாயாரப் புகழ்ந்து மனமாரத் தியானித்தால் எல்லாப் பேறுகளையு மடையலாமென் பதை யுணர்ந்தும் அடியேன் அப்பெருமானைத் தியானிக்காமல் வாணாளை வீணாளாகக் கழித்துக்கொண்டு வருகிறேன்; ஆகையால், அடியேன் தீவினையிருந்தவாறு என்னே! என வருந்துவார், 'மாந் தளிர் கவற்று மணிச்சிலம் படிகள் வடுவகிர் பொருவும்வா ணெடுங்கண் காந்தளி னிமைக்கு மங்கையென் றவலக் கன்னியர்ப் புகழ்வினை யறுமோ' என்றார். இதனை,

கந்தபுராணம்

"முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்

மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்" என்பதனாலும்,

திருக்குறள்

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்"

என்பதனாலு முணர்க. மகளிருடைய பாதங்கள் மாமரத்தின் தளிர்களைக் கவலச்செய்யு மெனவும், கண்கள் மாம்பிஞ்சின் பிளப்பினை நிகர்க்குமெனவும், உள்ளங்கைகள் காந்தள் மலர்போற் பிரகாசிக்கு-மெனவும் மகளிரைப் புகழ்தல் செய்கைகூறவே இவ்வாறே ஏனைய அவயவங்களையும்,

பட்டினத்தார் பாடல்

"வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால்
அள்ளும் வராலெனச் சொல்லித் துதித்தும்,
தசையு மெலும்பும் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென வியம்பியும்,
நெடுமுடை நாறி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்,
மலமும் சலமும் வழும்பும் திரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றும்,
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்,
வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தைப்
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்,
வெப்பு மூத்தையு மேவிய வாயைத்
துப்பு முருக்கின் றூய்மல ரென்றும்,
அன்னமுங் கறியு மசைவிட் டிறக்கு
முன்னிய பல்லை முத்தெனமொழிந்தும்,
நீருஞ் சளியு நின்றுநின் றொழுகும்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியும்,

தண்ணீர் பீலை தவிரா தொழுகும்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்,
உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியும்,
சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றும்,"

கூறிப் புகழ்வேனென்பார் என்பது உபலக்ஷணத்தால் பெறப்பட்டது. 'அவலக் கன்னியரைப் புகழ்தல்' என்பதனை:—

"வண்டுமொய்த் தனைய கூந்தல் மதனைபண் டார வல்லி
கெண்டையோ டொத்த கண்ணாள் கிளிமொழி வாயி னூறல்
கண்டுசர்க் கரையோ தேனோ கனியொடு கலந்த பாலோ
அண்டர்மா முனிவர்க் கெல்லா மமுதமென் றனிக்க லாமே"

"அன்னம் பழித்தநடை யாலம் பழித்தவிழி
யமுதம் பழித்த மொழிகள்
பொன்னம் பெருத்தமுலை கன்னங் கறுத்தகுழல்
சின்னஞ் சிறுத்த விடைபெண்
என்னெஞ் சுருக்கவவ டன்னெஞ்சு கற்றகலை
யென்னென் றுரைப்ப தினிநான்
சின்னஞ் சிறுக்கியவள் வில்லங்க மிட்டபடி
தெய்வங் களுக் கபயமே"

"நிலத்தினிற் சுழியின் மூழ்கி நின்றவ டன்னை நேரே
குலத்தலை மஞ்ஞை கண்டு கூவெனக் காவி லேக
முலைத்தலை யதனைக் கண்டு மும்மதக் கரிவந் தூற்ற
தலைத்தலை சிங்க மென்றக் களிறுகண் டேகிற் றம்மா"

என வருவனவற்று னுணர்க. எனவே, மகளிரைப் புகழ்தல் கூடா தென்றும், சிவபெருமானையே வாயாரப்புகழ்ந்து வழிபடவேண்டு மென்றும் விரும்புகின்று ரென்க.

திருப்பாற்கடல் கடைந்த பொழுது மந்தரமலையை மத்தாகவும் வாசுகியைத் தாம்பாகவும் பூட்டி விண்ணவ ரொருபுறமும் அசுரர்கள் மற்றொரு புறமும் கடைய அமிர்தமுண்டாயிற்று; ஆனல், இச்

சோணசைலமோ எனின் மத்திட்டுக் கடைகுநரும், பொறி (துத்தி) களையுடைய பாம்பும் ஆகிய இவைகள் ஒன்றுமே இல்லாமல் தம்மை யடைந்தவர்களாகிய தவத்தினர்க்கு மரணத்துன்பத்தைப் போக்கும் மருந்தினைக் கொடுக்கும் என்பார், 'பூந்திரை சுருட்டுங் கடல்கடை குந ரொண் பொறியரா வின்றிமா தவர்க்குச் சாந்துய ரகற்று மருந்தருள் சோண சைலனே' என்றார். எனவே, திருப்பாற்கடலும், கடைபவ ரும், மத்தும், கயிறும் ஆகிய இவைகளில்லாமல் அமுதமீயாது. ஆனால், இம்மலையோ அவ்வாறின்றி ஒன்றுமே யில்லாமல் அடைந்தவர்கட்கு அமிர்தமளிக்கும் என்பது பெறப்பட்டது. 'என்று' என்பது முன் னருங் கூட்டப்பட்டது. 'அகம்' என்னும் நிலைமொழியும் 'கை' யென்னும் வருமொழியும் புணர 'அங்கை' யென்றாயிற்று; இவ்வாறே 'அஞ்செவி' என்றும் வரும். இதனை,

நன்னூல்

"அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்"

என்பதானறிக. கன்னியர்+புகழ் என்பது கன்னியர்புகழ் என "பொதுப்பெய ருயர் திணைப்பெயர்" என்னும் நன்னூற்சூத்திர விதிப் படி இயல்பாக வேண்டியது அவ்வாறு இயல்பாகாமல், பகரமெய் மிகுந் தது இரண்டாம் வேற்றுமைத் தொகையாக இருத்தலின் என்க. இதனை இலக்கணத்தில் 'இயல்பின் விகாரம்' என்பர். இவ்வாறு வருதலை "இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்" என்னும் நன்னூல் சூத்திரத்தா னுணர்க. புகழ்வினை-வினைத்தொகை. பொறி-பாம்பின் படத்தினுள்ள புள்ளி; இதனைத் துத்தி என்றும் கூறுவர். 'கடைகு நர்' என்பதில், நகரம் பெயரிடைநிலை; செய்குநர் என்பதுபோல. அரா வென்பது அரவு யென்றாயிற்று; நிலா வென்பது நிலவு என் றாயதுபோல. இதனை,

நன்னூல்

"குறியதன் கீழாக் குறுகலு மதனோ
டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்"

என்பதா லுணர்க. துயரகற்றும்-இரண்டாம் வேற்றுமைத் தொகை. தளிர், திரை - என்பன இரண்டும் வினைமுதற் பொருட்பெயர்ப் பகு

பதங்கள். அவை இரண்டும் தனித்தனி இ என்னும் வினைமுதற் பொருள் விகுதி பெற்று, அவ்விகுதி கெட்டு, முடிந்தன. (77)

சிந்தனை கலங்கி யிணைவிழி யிருண்டு
செவிகளுஞ் செவிடுபட் டைம்மே
லுந்திட வுயிர்போம் பொழுதுநின் வடிவ
முளங்கொளும் பரிசெனக் கருளாய்
மந்தர சைலந் தருவிடங் களத்து
வைத்திடத் தினிலிம சைலந்
தந்திடு மமுதை வைத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மந்தர சைலம் - மந்தர மலையானது, தரு விடம்- கொடுத்த விடத்தினை, களத்து வைத்து-கழுத்தில் அமைத்து, இடத்தினில் - இடப(வாம)பாகத்தில், இம சைலம் தந்திடும் - இமயமலை பெற்ற, அமுதை வைத்திடும்-(உமையவளாகிய) அமிர்தத்தை வைத்தருள்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, சிந்தனை கலங்கி- மனநிலை மாறி, இணை விழி இருண்டு - இரண்டு கண்களும் பஞ்சடைந்து, செவிகளும் செவிடுபட்டு-காதுகளும் செவிடாகி, ஐ மேல் உந்திட - சிலேஷ்மம் மேலேறி ஓங்க, உயிர் போம் பொழுது-உயிர் உடம்பைப் பிரிந்து தனியே செல்லுங் காலத்தில், நின் வடிவம்-தேவரீருடைய திருவுருவத்தை, உளம் கொளும் பரிசு-மனத்தில் நினைக்குந் தன்மையை, எனக்கு அருளாய்-அடியேனுக்கு அருள்வீராக; எ-று.

(வி-ரை.) திருக்குறள்

"புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு"

என்றபடி உடலில் இருப்பதான உயிரானது இவ்வுடலைவிட்டு அகன்று செல்லுங்காலத்தில் இந்திரியங்களும் அந்தக்கரணங்களும் நிலைகலங்கிச் செய்கையற்று அழியுமாகலின் 'சிந்தனை கலங்கி யிணை விழி யிருண்டு செவிகளுஞ் செவிடுபட் டைம்மே லுந்திட வுயிர்போம் பொழுது' என்றார். இதனை,

## தேவாரம்

"பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்டவுண்டு
சிவனதாட் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கினாயே" எனவும்

## பட்டினத்தார் பாடல்

"ஐயுந் தொடர்ந்து விழியுஞ் செருகி யறிவழிந்து
மெய்யும் பொய்யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவல்யான்"

எனவும் வருமாற்றானறிக. உடல் உயிரைவிட்டு நீங்குங்காலத்தில், மனைவி மைந்தர்மேலுள்ள ஆசையை நீக்கவேண்டும். ஏனெனில், அம் மரணகாலத்தில் நினைப்பவையே அடுத்த ஜெனனத்திற்கு விதையாகுமாதலால், ஈஷணைதிகளை நீக்கி பெருமான் திருவுருவத்தை மனதிலே தியானிக்குந் தகைமையை அருளவேண்டுமென்பார் 'நின்வடிவ முளங்கொளும் பரிசெனக் கருளாய்' என்றார். மரண காலத்தில் எண்ணும் எண்ணங்களே அடுத்த பிறவி யெடுப்பதற்குக் காரணம் என்பதனை,

## வைராக்கிய சதகம்

"ஆமு னிச்சையே மேலுமே லும்பிறப்
பளிக்கும்வித் தென நெஞ்சே" எனவும்.

## திருக்குறள்

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

எனவும் வருவனவற்றாற் காண்க. ஆகிய இவ்வேதுக்களால், சிவ பெருமானை இடைவிடாது தியானிப்பவர்களான அவர்களுக்கே யல்லாமல் தியானமில்லாமல் இருப்பவர்களான ஏனையோர்களுக்குச் சிவத்தியானம் மரணகாலத்தில் உண்டாகாது. ஆகையினால் எக் காலத்திலும் அப்பெருமானை நினைக்கவேண்டு மென்பதாம். மந்தர மலை தந்த விஷத்தைத் திருக்கண்டத்தில் வைத்துக்கொண்டு இமய மலை தந்த அமிர்தத்தை வாமபாகத்தில் வைத்தருளும் பெருமான் என்பார் 'மந்தர சைலந் தருவிடங் களத்து வைத்திடத் தினிலிம

சைலந் தந்திடு மமுதை வைத்திடும்' என்றார். எனவே, ஒருமலை யளித்த விஷத்தைத் தமது திருக்களத்தும், ஒரு மலையளித்த அமிர்தத்தை வாம (இடப்) பாகத்தும் வைத்த மலையுருவானவர் எனக்கூறும் முறைமையால் சிவபிரானது பேராற்றலும் பெருங் கருணையும் விளக்கியவாறு காண்க. உளம்-இடைக்குறை. களம்+ அத்து = களத்து என்றாயது.

தொல்காப்பியம்

"அத்தி னகர மகாமுனை யில்லை"

என்னும் சூத்திரவிதியா னென்க. 'இடத்தினில்' என்பதில் அத்து இன்-சாரியைகள். (78)

நயங்கொளு மலரா னின்றிரு வடியை
நாடொறு முயிருணுங் கூற்றம்
பயங்கொள வகலா தருச்சனை புரிந்து
பாகதி யடையுநா ளுளதோ
வயங்கொளும் விடயப் பெரும்பகை கடந்து
வானநா டாண்டிட மதிப்போர்
சயங்கொள வடைதற் கரணமாஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வயம் கொளும் - தம்மை வெற்றி கொள்ளுகின்ற, விடயம் பெரும் பகை-விடயங்களாகிய பெரிய பகையை, கடந்து- ஜெயித்து, வானம் நாடு ஆண்டிட-உயர்ந்த முத்தியுலகத்தைக் கைக் கொள்ளும்படி, மதிப்போர் - எண்ணுகின்ற அறிஞர்கள், சயம் கொள - தாம் அப் பகையை வெல்லுமாறு, அடைதற்கு அரணம் ஆம்-அடைதற்குரிய காவலிடமான, சோணசைலனே! கைலைநாய கனே!—, உயிர் உணும் கூற்றம்-உயிர்களைக் கவரும் கொடிய இயமன், பயம் கொள-அஞ்சும்படியாக, நாடொறும்-தினமும், நின் திருவடியை- தேவரீருடைய திருப்பாதங்களை, அகலாது-விட்டு நீங்காமல், நயம் கொளும் மலரால்-விரும்பத்தக்க நல்ல மலர்களால், அருச்சனை புரிந்து- அர்ச்சனை செய்து, பாகதி-மேலான கதியாகிய முத்தி இன்பத்தை, அடையும் நாள் உளதோ-பெறுங்காலமும் உண்டோ? எ-று.

(வி-ரை.) புழுக்கடித்தனவும் வண்டு மொய்த்தனவும், பழமை யடைந்தனவுமாகிய மலர்கள் சிவபெருமானுடைய பூசைக்கு உரியன வல்லவாகலின் அத்தகைய குற்றமுடைய மலர்களைநீக்கி, அன்றலர்ந் தனவும் மணமுடையனவுமாகிய மலர்களையே கொண்டு பூசை செய்ய வேண்டுமாகலின் 'நயங்கொளு மலரால்' என்றார். இயமன் உயிர்களைக் கவர்ந்துகொண்டு போகும் கொடியவன் ஆகையால் அவனை, 'உயிருணும் கூற்றம்' என்றார். அவரவர்களின் ஆயுள் காலம் முடிந்தவுடன் வந்து உயிரைக்கொண்டு போதலால் அவன் 'காலன்' என்னும் பேரேற்றனன். இயமனைத் தப்பி நீங்கிப் பிழைத் தவர்கள் இவ்வுலகத்திலில்லை. ஆயுள் முடிந்தவுடனே வருவானே யல்லாமல் ஆயுள்முடிவதற்கு முன்னர் வாரான். இதனை,

நாலடியார்

"சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று"

"இழைத்தநா ளெல்லை யிகவா பிழைத்தொரீஇக்
கூற்றங் குதித்துய்ந்தா ரீங்கில்லை"

"தோற்றஞ்சான் ஞாயிறு நாழியா வைகலுங்
கூற்ற மளந்துநுந் நாளுண்ணு"

"ஆட்பார்த் துழலு மருளில்கூற் றுண்மையால்
தோட்கோப்புக் காலத்திற் கொண்டுய்ம்மின்-பீட்பிதுக்கிப்
பிள்ளையைத் தாயலறக் கோடலான் மற்றதன்
கள்ளங் கடைப்பிடித்த னன்று"

என வருவனவற்றானறிக. உயிர்களைக் காலவரையறை நோக்கிக் கவரும் இயமன் அடியேன் உயிரைக் கவர்தற்கு அஞ்சும்படி நாடோ றும் இடைவிடாமல் தேவரீர் திருவடிகளை நல்ல மலர்களால் அருச் சித்து முத்திப்பேற்றைப் பெறும் காலமும் உண்டோ என்பார் 'நயங்கொளு மலரா னின்றிருவடியை நாடொறு முயிருணுங் கூற்றம், பயங்கொள வகலா தருச்சனை புரிந்து பரகதி யடையுநா ளுளதோ' என்றார். சிவபெருமான் திருவடிப் புகழ்ச்சியைத் தேவாரத்தில் **திருவடித் திருத்தாண்டகத்தில்** காண்க. நாடாள்வோருக்கு அரண்

எவ்வளவு முக்கியமாக விளங்குகின்றதோ அம்மாதிரியே விஷயாதிக ளாகிய பெரும் பகைகளை வென்று வானநாடுஆள விரும்பும் ஞானி களுக்கும் இச் சோணசைலம் அரணமாக விளங்கு மென்பார் 'வயங் கொளும் விடயப் பெரும்பகை கடந்து வானநா டாண்டிட மதிப் போர் சயங்கொள வடைதற் கரணமாஞ் சோணசைலனே' என்றார். விஷயம்-என்னும் வடமொழி தமிழில் விடயம் என விகாரப்பட்டது. அஃதாவது ஆரியமொழியுள் முப்பத்தோரா மெய்யாகிய ஷகாரம் டகரமாகத் திரிந்தது. அஃதாவது, ஷகாரம் மொழி முதலிற் சகரமாகவும், இடையிலும் கடையிலும் டகரமாகவும் திரியும். "மேலொன்று சடவும்" என்னும் விதியா லென்க. பகை கடந்து- இரண்டாம் வேற்றுமைத் தொகை. 'ஆண்டிட' என்புழி 'இடு'- பகுதிப்பொருள் விகுதி. ஜயம் என்னும் வடமொழி தமிழில் சயம் என விகாரப்பட்டது. (79)

பிரம்பொரு கரங்கொண் டடிப்பநந் தீசர்
பெருங்கல்வீழ் பாசியி னிமையோர்
சிரம்பொர வொதுங்கி நெருங்குகின் னவையிற்
றீயனே னணையுநா ளுளதோ
வரம்பொர வகன்ற விலங்கிலை நெடுவே
லமர்த்தகட் கிரிமக ளிணைக்குஞ்
சரம்பொர விருந்து விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** அரம் பொர அகன்ற - அரம் என்னும் கருவியினால் தேய்த்தலால் விசாலமான, இலங்கு இலை நெடுவேல்-விளங்குகின்ற இலை வடிவமான நீண்ட வேற்படையை, அமர்த்த கண்-போர்செய்து வெற்றியடைந்த கண்களையுடைய, கிரிமகள் - பார்வதியினுடைய, இணை குஞ்சரம் பொர-இரண்டு தனங்களாகிய யானைகள் தாக்கும் படி, இருந்து விளங்குறும்-இருந்து விளங்குகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, நந்தீசர்-திருநந்திதேவர், பிரம்பு ஒருகரம் கொண்டு அடிப்ப - பிரம்பை ஒருகையில் தாங்கி அடித்தலினால், இமையோர் - கூடியிருக்கின்ற தேவரெல்லாம், சிரம் பொர-தங்கள்

சிரங்கள் ஒன்றோடொன்று மோதும்படி, பெருங் கல்வீழ் பாசியின்-இடையிற் பெரிய கல் விழப்பெற்ற பாசியைப்போல, ஒதுங்கி நெருங்கும்-விலகி மீண்டுங் கூடுகின்ற, நின் அவையில் - தேவரீருடைய திருச்சபையில் (சந்நிதியில்), நீயனேன் அணையும் நாள் உளதோ-கொடியேனாகிய அடியேனும் வந்து சேரும் நாளும் உண்டாகுமோ? அறியேன்; எ-று.

(வி-ரை) இமையோர்-இமைத்த லில்லாதவர் (தேவர்) இமயவரெனவும் படுவர். ஆகாரம் ஓகாரமாயிற்று, செய்யுளாகலின். இதனை,

நன்னூல்

"பெயர்வினை யிடத்து னளரய வீற்றய
லாவோ வாகலுஞ் செய்யுளு ளுரித்தே"

எனுஞ் சூத்திரத்தா னறிக. திருநந்திதேவர் பொற்பிரம்பினை ஒரு காத்திலேந்தி தேவர்களது சிரத்தில் தாக்கும்படிமோத, அத்தேவர்கள் அடிபட்ட மாத்திரத்தில் சற்றுநேரம் விலகி பிறகு மறுபடியும் முன்போல் நெருங்கிக் கொள்ளுவார்க ளென்றும், நந்திதேவரது அடிக்கு ஒதுங்கி மறுபடியும் சற்றுநேரத்திற்குள் தேவர்கள் தங்கள் சிரம் மோதும்படி நெருங்குதல், பெருங் கல்லானது தன்னிடையில் வீழப்பெற்ற பாசியைப்போல விருக்கின்ற தென்பார், 'பிரம்பொரு கரங்கொண் டடிப்பநந் தீசர் பெருங்கல்வீழ் பாசியி னிமையோர் சிரம்பொர வொதுங்கி நெருங்குநின் னவையிற் றீயனே னணையுநா ளுளதோ' என்றார். எனவே, தேவர்கள் நீர்பாச்சிக்கும், பிரம்படி நீர்பாசியில் வீழ்ந்த கல்லுக்கும், நீர்பாசி ஒதுங்கி மீண்டுஞ் சேர்தல் தேவர்கள் ஒதுங்கி மீண்டுஞ் சேர்தலுக்கும் உவமையாக்கினார்.

இரத்தினச்சுருக்கம்

"வேல்வாள் கணைவண்டு வேலை விடமமுதஞ்
சேல்பங் கயங்குடங்கை செங்காவி-காலன்
வடுமான் கருவிளையை வளர்சகோ ரத்தை
யடுமாங் குழையை யடர்ந்து"

எனக் கூறியபடி கண்ணுக்கு உரிய உவமைப்பொருள்களுள் வேலும் ஒன்றாதலால் 'நெடுவேல்' என்றார். வேலாயுதத்தையும் வெற்றி

கொள்ளும் கண் என்பார் 'நெடுவே லமர்த்த கண்' என்றார். அரம் என்னும் கருவியினால் தேய்த்தலால் விசாலமாக விளங்குகின்ற இலை வடிவமான நீண்ட வேலாயுத மென்பார் 'அரம்பொர வகன்ற விலங் கிலை நெடுவேல்' என்றார். உமாதேவியார், பர்வதராஜனுடைய தவப்புதல்வியாகத் திருவவதாரம் செய்தமையால், 'கிரிமகள்'என்றார். அகப்பட்டோரை வருத்து மியல்புடைமைபற்றியும், கூர்மையாக நீண்டிருப்பது பற்றியும் கண்ணுக்கு வேல் உவமையாகும். இதனை,

திருவிளையாடற் புராணம்

"கண்வலைப் பட்டு நெஞ்ச மழிபவர்"
"மருவிக் காமுகரைத் தங்கள்வடிக் கண்வேன் மார்பந் தைப்ப"

கலிங்கத்துப்பரணி

"தங்குகண் வேல் செய்த புண்களை
தடமுலை வேதுகொண் டொற்றியும்"

என வருமாற்றானறிக. மாதரார் கண்ணி னியல்பை,

இரத்தினச் சுருக்கம்

"குணமுங் கதமுங் கொடுந்தொழிலு மன்பின்
கணமுங் குடியிருப்பாக் காட்டு - மிணையாய்த்
துடிக்குஞ் சுழலுஞ் சுருட்டு மன்பருள்ளம்
குடிக்குமறு ராவஞ்சங் கூர்ந்து."

"வஞ்சங் கொலைபோர் மதனுகமம் விரகந்
துஞ்சுங் களவுசுகங் கலக - மஞ்சனமென்
செம்மைவெளுப் புக்கறுப்புச் செவ்வரிநீ லம்பெருமை
வெம்மைமதர்ப் புக்கடைக்கண் வேல்."

என்பனவற்றானறிக. குஞ்சரம்-உமையாகுபெயர்: காளை வந்தான். பாவை வந்தாள் என்பனபோல. கிரி என்பது ஈண்டு இமயமலை. அமர்த்த என்பது அமர் என்னும் பகுதியடியாகப் பிறந்த பெயரெச்சம். 'விளங்குறும்' உறு-பகுதிப்பொருள் விகுதி. (80)

30

காமரை முனிந்த முனிவரர் புகுமெய்க்
கதியிடைப் புகவிடுத் திடினும்
பாமர னிவனென் றிருளினுய்ப் பினுநின்
பதமல ரன்றிவே றுளதோ
வாமரை பொருந்து முலகுள குவட்டு
மலைகள்போ லாதுண்ணு முலையாந்
தாமரை பொருந்து மானுள்வாழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) வாம் மரை பொருந்தும்-தாவிச் செல்லுகின்ற மான்களைப் புறத்தே கொண்ட, உலகு உள - பூலோகத்திலுள்ள, குவடு மலைகள் போலாது - சிகரத்தையுடைய மற்றைய மலைகள் போலன்றி, உண்ணுமுலை ஆம் - உண்ணுமுலை எனக் கூறப்படும், தாமரை பொருந்தும் மான் - தாமரை அரும்புகள் பொருந்தப் பெற்ற மானாகிய (உமையம்மையார்), உள் வாழ் - தனக்குள் வாழப்பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, காமரை முனிந்த - மன்மதனை வெறுத்த, முனிவரர் புகும் - முனிவர்கள் செல்லுகின்ற, மெய்க் கதியிடை-அழிவில்லாத முத்தி யுலகத்தில், புக விடுத்திடினும்-போகச் செய்தாலும், பாமரன் இவன் என்று-(அல்லாமல்) இவன் ஒரு மூடனென்று திருவுளங்கொண்டு, இருளில் உய்ப்பினும்-நரகக் குழியில் வீழ்த்தினாலும், நின்பதம் மலர் அன்றி-தேவரீருடைய திருவடித் தாமரைகளே யல்லாமல், வேறு உளதோ-அடியேனுக்கு வேறு ஆதாரம் உளதோ? இன்று; எ-று.

(வி-ரை) முத்தியுலகத்தில் சேர்த்தாலும் அல்லது நரகத்தில் செலுத்தினாலும் சிவபெருமான் திருவடித்தாமரைகளே யல்லாது வேறு ஆதாரம் இல்லையென்பார் 'கதியிடைப் புகவிடுத்திடினும் இருளினுய்ப்பினு நின்பதமல ரன்றிவே றுளதோ' என்றார். மன்மதனை வெறுத்தமுனிவர்கள் செல்லும்படியானது அழிவில்லாதமோக்ஷமென்பார் 'காமரை முனிந்த முனிவரர் புகுமெய்க்கதி' என்றார். எனவே, "நரகம்புகினு மெள்ளேன் திருவருளாலே இருக்கப் பெறினிறைவா" என **மாணிக்கவாசகர்** அருளியபடி சிவபெருமானை யல்லாமல் முத்தி யுலகத்தில் சேர்ப்பவர்களும் நரகிற் செலுத்துவோரும் வேறெவரு

மில்லாமையினாலே கூறினரென்க. மானைப் புறத்தே கொண்டுள்ள மற்றைய மலைகள்போ லல்லாமல் உண்ணாமுலையாரென்னும் மானுள்ளே வாழ்கின்ற பெருமானென்பார் 'வாமமை பொருந்து முலைகுள குவட்டு மலைகள்போ லாதுணா முலையாந் தாமமை பொருந்து மானுள்வாழ்' என்றார். 'மானுள் வாழ்' என்றது அர்த்த நாரீசமூர்த்தத்தை. 'மெய்க்கதி' என்றது நறக்க முதலிய பொய்க் கதிகளை நீக்குதற்கென்க. அது நோக்கியே, 'காமமை முனிவரர் புகு மெய்க்கதி' என்றார். மூடர்க ளெய்துவது நரகமாகலின், 'பாமர னிவனென் றிருளி னுய்ப்பினும்' என்றார். எனவே, அழிவில்லாத சிவபோகத்தி லாழ்ந்து கிடக்கும் முனிவர்கள் விஷ்ணு பிரமேந்திராதி போகங்களை விரும்பாதவராகிச் சிவபெரு மான் திருவடிகளிற் பொருந்திய அன்பினையே கொண்டிருக்க விரும்புவராதலின் 'நின்பத மலரன்றி வேறுளதோ' என்றார். இதனை,

### கந்தபுராணச் சுருக்கம்

"அண்டர்பொய் வாழ்வையு மயன்பொய் வாழ்வையும்
விண்டுவின் வாழ்வையும் வெஃகிலே னியான்
தண்டைக ளணிந்தநின் சரணத் தன்மையே
கொண்டிட வேண்டுவ னென்று கூறினன்"

### திருவாசகம்

"போகம்வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்
ஏகநின் கழலிணை யலாதிலேனெ னெம்பிரா
னாகம்விண்டு கம்பம்வந்து குஞ்சியஞ்ச லிக்கணே
யாகவென்கை கண்கடாரை யாறதாக வையனே"

என வருமாற்றானறிக. மரை - மான். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கு உமாதேவியார் திருமுலைப்பா லூட்டிய காலத்தில் வள்ளத்திற் கறந்து ஊட்டினாராகலின் உண்ணாமுலையம்மை என்னும் திருப்பெய ரேற்றனர். இதனை,

பெரியபுராணம்

"வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி
எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
உண்ணடிசி லெனவூட்ட"

என வருமாற்றானறிக. 'கதியிடை' என்பதில் 'இடை' - ஏழாம் வேற்றுமை உருபு. (81)

தொடுக்குமா கமங்க ளெலாஞ்சொலைந் தெழுத்துந்
துணிந்தநெஞ் சிருக்கையாற் பகைவைப்
படைக்கைதா னிருந்து மஞ்சுறு மவர்போற்
பகட்டுமா மறலியை வெருவேன்
மடக்குவார் கலாப மயிறுயி லெழுந்து
மருவலர் வேங்கைமீ தகவத்
தடக்கைவா ரணங்கள் பிளிறிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மடக்கும்-வளைக்கத்தக்க, வார் கலாபம் மயில்-நீண்ட தோகையினையுடைய மயில்கள், துயில் எழுந்து - தூக்கத்திலிருந்து எழுந்து, மரு அலர் வேங்கைமீது அகவ-வாசனை நிறைந்த பூக்களை யுடைய வேங்கைமரத்தின்மேலேறி (அச்சமுற்றுக்) கூவும்படி, தடக்கை வாரணங்கள் - பெரிய துதிக்கையையுடைய யானைகள், பிளிறிடும்-பெருமுழக்கம் செய்யப்பெற்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, தொடுக்கும் - தேவரீர் அருளிச் செய்திருக்கின்ற, ஆகமங்கள் எல்லாம் - எல்லா ஆகமங்களும், சொல் - புகழ்ந்து பேசு கின்ற, ஐந்து எழுத்தும்-திருவைந்தெழுத்தையும், துணிந்த நெஞ்சு-சிறப்புடைத்தென்று தெளிந்திருக்கின்ற மனமாகிய கருவி, இருக்கை யால்-அடியேனிடத்து இருத்தலினால், படை கை இருந்தும்-பகை வரை அழிக்கத்தக்க ஆயுதம் கையிலிருந்தும், அஞ்சுறும் அவர் போல் - பகைவரைக் கண்டு பயப்படுகின்றவர்போல, பகட்டும் மா மறலியை - வெருட்டுகின்ற பெரிய இயமனுக்கு, வெருவேன் - ஒரு சிறிதும் பயப்படமாட்டேன்; எ-று.

(வி-ரை.) தேவாரம்

"வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத நாம நமச்சி வாயவே"

எனத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய படியே, 'தொடுக்குமா கமங்களெல்லாம் சொலேந்தொ ழுத்து' என்றார். ஆகமங்கள் இருபத்தெட்டு. ஆகமமென்னு மொழியில், ஆ என்பது ஞானமும், க என்பது மோக்ஷமும், ம என்பது மல நாசமுமாம். ஆகவே, ஆன்மாக்கட்கு மலத்தை நாசஞ்செய்து ஞானத்தை யுதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுத்தலால் ஆகமம் எனப் பெயராயிற்று. வேதமும் ஆகமமும் சிவபெருமானாலேயே அருளப் பட்டவையாதலின், அவைக ளிரண்டும் ஒரு சிறிதும் பேதமில்லாமல் இயலுந் தன்மையன.

திருமந்திரம்

"வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாத னருளவை நாடிலி ரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"

என்பதானறிக. இருபத்தெட் டாகம விவரங்களும், அவ்வாகம கிரந்த சங்கியையும், உபபேதங்களும், திருவங்கங்களும் இன்னோ ரன்ன பல விஷயங்களும் சிவபராக்கிரமம் ஸதாசிவ மூர்த்தியிற் காண்க. ஐந்தெழுத்து-பஞ்சாக்கரம். இதன் விவரம் முந்தி ஒரு செய்யுளிற் கூறியுள்ளது ஆங்கு கண்டுணர்க. இன்னம் பஞ்சாக்கர விவரம் உண்மை விளக்கத்திலும் சிவபராக்கிரமம் ஸதா நிருத்த மூர்த்தியிலும் காண்க. பகடு மா மறலி: எனப் பிரித்துப் பொருள் கூறுவாருமுளர். பகடு-எருமைக்கடா. "பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க" என்புழிக் காண்க. மறலியை-உருபு மயக்கம்: வேற்றுமை மயக்கமெனினு மொக்கும். ஸ்ரீ பஞ்சாக்கர மந்திரம் எவற்றிற்கும் மூலமந்திரமாயும், "அக்கர மைந்துணர்வீர் வினைகட் டறுமே' என மறைசையந்தாதியில் கூறியபடி வினையைப் போக்குவதற்கு மருந்

தாக இருப்பதாலும், அந்த ஸ்ரீ பஞ்சாக்கரத்தையும் சிறப்புடைய தென்று தெளிந்திருக்கின்ற மனமாகிய கருவி அடியேனிடத்தில் இருத்தலினாலும் பகைவரை யழிக்கத்தக்க ஆயுதம் கையிலிருந்தும் பகைவரைப் பார்த்து பயப்படுகின்றவர்போல இயமனுக்கு ஒரு சிறிதும் பயப்படமாட்டேனென்பார் ,துணிந்தநெஞ் சிருக்கையாற் பகையைப் படைக்கைதா னிருந்து மஞ்சுறு மவர்போற் பகட்டுமா மறலியை வெருவேன்' என்றார். எனவே, ஸ்ரீ பஞ்சாக்கரத்தை ஓதுகின்றவர்களைப் பார்த்தால் இயமனும் பயந்து நீங்கிவிடுவா னெனப் பெறப்பட்டது. நீண்ட தோகையினையுடைய மயில்கள் வேங்கை மரங்கள்மேலேறிப் பயமடைந்து கூவும்படி பெரிய யானைகள் பிளிறிடும் என்பார் 'மடக்குவார் கலாப மயிறுயி லெழுந்து மருவலர் வேங்கைமீ தகவத் தடக்கை வாரணங்கள் பிளிறிடும்' என்றார். எனவே, மேக முழக்கமென நினைத்து மயில்கள் அகவு மாறு யானைகள் முழங்கின என்பது பெறப்பட்டது. படை-கொல்லுந் தகைமையுடையது. அகவுதல்-கூவுதல். கலாபமயில் - இரண்டாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்றொக்கதொகை. (82)

நிந்தியா துடல முழுதுநீ றணிய
நேசியா தமலவைந் தெழுத்துஞ்
சிந்தியா துழலு மெனைக்கொடுங் கூற்றென்
செய்யுமோ வறிந்திலேன் றமியேன்
வந்தியா வரவ மன்றிடைக் கண்ட
மலர்சிலம் படியைமண் ணுணிபோய்ச்
சந்தியா தயர வொளித்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) அரவம்-பதஞ்சலிமுனிவர், வந்தியா - வழிபாடியற்றி, மன்றிடைக் கண்ட - சிதம்பரத்திலே தரிசிக்கப்பெற்ற, மலர் சிலம்பு அடியை-உலகமுழுதும் நிறைந்திருக்கின்ற சிலம்பினையணிந்த திரு வடிகளை, மண் உணி - மண்ணுண்ட விஷ்ணு, போய் சந்தியாது- பூமிக்குள் பன்றி (வராக) உருவ மெடுத்துச் சென்றும் காணாமல், அயர ஒளித்திடும் - சோர்வடையும்படி ஒளித்திருக்கின்ற, சோண

சைலனே! கைலைநாயகனே!—, உடலம் நிந்தியாது-தேகத்தை இகழாமலும், உடலம் முழுதும் நீறு அணிய நேசியாது - உடம்புமுழுதும் திருநீறு பூசவிரும்பாமலும், அமல ஐந்தெழுத்தும் - மலநீக்கந்தரும் ஸ்ரீபஞ்சாக்கரத்தையும், சிந்தியாது - மனதில் கொள்ளாமலும், உழலும் வினை-அலைகின்ற தீவினையேனை, கொடுங் கூற்று-கொடிய இயமன், என் செயுமோ-என்ன துன்பஞ் செய்வானோ?, தமியேன் அறிந்திலேன்-அடியேன் அறிந்திலேன்; எ-று.

(வி-ரை.) தாயுமானவர்

"காகமொடு கழுகலகை நாய்நரிகள்
சுற்றுசோறிடு துருத்தியைக்
காலிரண்டு நவவாசல் பெற்றுவளர்
காமவேணடன சாலையை
மோகவாசை முறியிட்ட பெட்டியை
முமலமிகுந் தொழுகுகேணியை
மொய்த்துவெங் கிருமிதத்து கும்பியை
முடங்கலார் கிடைசரக்கினை
மாகவிந்த்ர தனுமின்னை யொத்திலக
வேதமோதிய குலாலனார்
வினையவெய்ய தடிகார ளையமன்
வந்தடிக்கு மொருமட்கலத்
தேகமானபொய்யை மெய்யெனக் கருதியைய
வையமிசை வாடவோ
தெரிவதற்கரிய பிரமமே யமலசிற்
சுகோதய விலாசமே"

பட்டினத்தார் பாடல்

"காடோ செடியோ கடற்புற மோகன மேமிகுந்த
நாடோ நகரோ நகர்நடு வோநல மேமிகுந்த
வீடோ புறந்திண்ணை யோதமி யேனுடல் வீழுமிடம்
நீடோய் கழுக்குன் றி லீசா வுயிர்த்துணை நின்பதமே"

என்றபடி தேகம் அநித்தியமாவ தறிந்திருந்தும்,

### பட்டினத்தார் பாடல்

"அன்ன விசார மதுவே விசார மதுவொழிந்தாற்
சொன்ன விசாரந் தொலையா விசாரநற் றேகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரமிப் பாவிநெஞ்சுக்
கென்ன விசாரம்வைத் தாயிறை வாகச்சி யேகம்பனே"

"என்சிந்தை கெட்டுச் சாணும்வளர்க்க வடியேன்
படும்பாடு சற்றல்லவே"

என்றபடி, துக்கரூபமாவ தறிந்திருந்தும் அத்தேகத்தின்மேல் அடியேன் ஆசை யொழிந்திலேன் என்பார் 'நிந்தியாதுடலம்' என்றார். அணிந்துகொள்வோர்களது ஆணவாதி மலத்துன்பங்களை நீறுபடச் செய்யும் விபூதியின் பிரபாவத்தை யுணர்ந்து அணிந்திலேன் என்பார் 'முழுது நீறணிய நேசியாது' என்றார். ஆணவாதி மலத்துன்பங்களை நீறுபடச் செய்வது விபூதி யென்பதனை,

### உபதேசகாண்டம்

"மாய னவ்வழி முதல்வனை நோக்கியு மதியான்
நீயெ வன்கொலென் றறிவயர்ந் துரைத்தலு நிமலன்
ஆய மாயையி னடைந்தன னிவனென வருளித்
தூய நீறளித் தவனுள மாயையைத் துடைத்தான்"

என வருமாற்றானறிக. இன்னும் விபூதியைக் குறித்து ஒளவைப் **பிராட்டியார்** 'நீறில்லா நெற்றிபாழ்' என்பதும், பஸ்மமில்லாத நெற்றியைச் சுடு. சிவாலய மில்லாத கிராமத்தைக் கொளுத்து எனப் பொருள் தருவதான,

### பிருகஜ்ஜாபாலோபநிடதம்

"திக்பஸ்ம ரஹிதம் பாலம், திக்க்ராம மசிவா லயம்"

என்னும் சுலோகமும் ஈண்டு கவனிக்கத்தக்கது. மேலும் விபூதியை அன்னமுண்பதற்குமுன் அணிந்துகொண்டு சாப்பிட வேண்டியது முறைமையாக இருக்க, சூரபதுமன் உலக நடக்கைக்கு விரோதமாக அன்னமுண்ட பின்னரே திருநீறு தரித்துக் கொள்வது பெரும்

பாலும் அவனுக்கு வழக்கமெனக் கூறப்பட்டிருக்கிறது. அம்முறைமையில் அவனின்றது சுக்கிரனுடைய வேதவிரோதமான உபதேசத்தைக் கேட்டதனுலென்க. எனவே, அவன் நித்திய கர்மானுட்டானங்களைச் செய்தவனல்ல வென்பது பெறப்பட்டது. இதனை,

கந்தபுராணச் சுருக்கம்

"மன்னுபுன லாடியினி தாமடிசி லுண்டுதிரு
நீறுநுதல் வல்லை யிலணிந்
தின்னல லுங்களப மின்னு கலனனைவை
யிதம்பெற வணிந்தன னரோ"

என்பதனுலறிக. உள்ளன்புடன் உச்சரிப்பவர்களைத் தூய்மை செய்யும் இயல்புடையது பஞ்சாக்கர மென்பதை யுணர்ந்தும் அப் பஞ்சாக்கரத்தைச் சிந்தியாது உழலுவே னென்பார் 'அமலனைந் தெழுத்துஞ் சிந்தியா துழலும்' என்றார். உடலை சிந்தியாமலும், திருநீறு அணியாமலும், பஞ்சாக்கரம் தியானிக்காமலும் இருக்கும் அடியேனை இயமன் எவ்வாறு தண்டிப்பானே என வருந்துவார், 'எனைக்கொடுங் கூற்றென் செய்யுமோ வறிந்திலேன் றமியேன்' என்றார். 'அரவம்' என்பது பதஞ்சலிமுனிவரை. இந்த பதஞ்சலிமுனிவர் ஆதிசேஷாவதார மெனப்படும். இதன் விவரத்தைக் **கோயிற்புராணம் பதஞ்சலிச் சருக்கத்திற்** காண்க. மண்ணுணி - விஷ்ணுமூர்த்தி: இவர் உலகத்தை யுண்டமையால் இப்பேரேற்றனர். "உலக முண்ட பெருவாயா வுலப்பில் கீர்த்தி யம்மானே" என்றார் **ஆழ்வாராதிகள்** இக்கருத்து நோக்கியே யென்க. இன்னம் 'மண்ணுண்ணி மாப்பிளேயே காவிறையே' எனப் பிறர் கூறுவதுங் காண்க. இன்னம், மண்ணுணி என்பதற்குக் கற்பாந்தகாலத்தில் எல்லா வுலகையுந் தன்னுடைய வயிற்றிலடக்கி ஆலிலைமேல் ஒரு பாலகனுய் அறிதுயில் அமர்பவன் என வைணவர்களும் வைணவநூல்களும் கூறும். இதனை, 'ஆலிலைமே லொருபாலகனுய் ஞாலமேழு முண்டான்' என **ஆழ்வாராதிகள்** கூறுவதாற் காண்க. விஷ்ணுவுக்கு உலகமுண்டதனுல் 'மண்ணுணி' எனக் காரணப்பெயர் உண்டானதுபோல, சிவபெருமா

னுக்கும் விஷம் (நஞ்சு) உண்டதனுல் 'நஞ்சுணி' எனக் காரணப் பெயர் ஏற்பட்டுள்ளது. இதனை,

**தனிப்பாடற்றிரட்டு - காளமேகப்புலவர்**

"கூடிக்கெட் டேழுங் குலைந்து நடுநடுங்கி
பூதிக் கொப்பாகப் போய்விடுமே - ஆதி
நாக்காட் டகவரியை நற்சாப மாகிச்
சுருக்கா விடினஞ் சுணி"

என்னுஞ் செய்யுளா னறிக. ஆதிசேஷாவதாரமாகிய பதஞ்சலி முனிவர் சிதம்பரத்தில் தரிசித்த திருப்பாதங்களை உலகமுண்ட திருமால் பன்றி வடிவமாகச் சென்றும் திருவண்ணுமலையில் காண முடியாது சோர்வடையும்படி செய்யும் பெருமான் என்பார், 'வந்தியா வரவ மன்றிடைக் கண்ட மலர்சிலம் படியைமண் ணுணிபோய்ச் சந்தியா தயர வொளித்திடும்' என்ருர். எனவே, உலகமுண்ணும் போராற்றல் திருமாலுக்கு இருந்தும் அவர் செறுக்குற்றமையால் அவருக்குத் திருவடியை மறைத்தும், அத்திருமால் சயனமாகிய ஆதிசேஷாவதாரமாகவுள்ள பதஞ்சலிமுனிவருக்கு அவர் வழிபாடு நோக்கித் திருவடிதரிசனம் கொடுத்தும் தாம் அடியவர்க்கு எளியவரென்பதும் அடியவரல்லா தார்க்கும் அகங்காரிகளுக்கும் எளியவரல்லரென்பதும் சிவபெருமான் புலப்படுத்தினு ரென்க. இதனை,

**தேவாரம்**

"காரானை யீருரிவைப் போர்வை யானைக்
காமருபூங் கச்சியே கம்பன் றன்னை
யாரேனு மடியவர்கட் கணியான் றன்னை
யமரர்களுக் கறிவரிய வளவி லானை
பாரோரும் விண்ணேரும் பணிய நட்டம்
பயில்கின்ற பரஞ்சுடரைப் பரனை யெண்ணில்
பேரானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"

'மலர் சிலம்படியை மண்ணுணிபோய்ச் சந்தியாதயர'

என்றது பிரம விஷ்ணுக்கள் திருவண்ணமலையில் அடிமுடி தேடினதைக் குறித்தென்க. இதனை,

**பட்டினத்தார் பாடல்**

"வையமேழளந்த, நெடியோனும் வேதனுங்காணாத நித்தநிமலன்"

**தேவாரம்**

"விளவார் கனிபட நூறிய கடல்வண்ண னும்வேதக்
கிளர்தா மரைமலர் மேலுறை கேடில் புகழோனும்
அளவா வண்ணமழ லாகிய வண்ணா மலையண்ணல்
தளரா மூலைமுறு வல்லுமை தலைவண் ணடிசாரே"

'மண்ணுளி' என்பதற்கு நாகப்பூச்சி என்றும் பொருள். அரவம் கண்ட திருவடியை மண்ணுளி என்னும் சிறிய செந்து காணாதயர வென மற்றொரு பொருளும் தோற்றுமாறு சமத்காரமாகக் கூறினா ரென்க. 'உடலம் நிந்தியாது (உடலம்) முழுதுநீ றணிய' என முடித்துப் பொருள் கூறினமையால் உடலம் ஈண்டு தாப்பிசைப் பொருள் கோளென்க. பொருள்கோள் என்பதற்குச் சொற்கள் பொருளைக் கொள்ளும் விதம் என்பது பொருள். பொருள்கோ ளெனினும், அந்வயமெனினும் ஒக்கும். அப்பொருள் கோள்கள்: யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரனிறைப் பொருள்கோளும், விற்பூட்டுப் பொருள்கோளும், தாப் பிசைப் பொருள்கோளும், அளைமறிபாப்புப் பொருள்கோளும், கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடிமாற்றுப் பொருள்கோளும் என எட்டு வகைப்படும். தாப்பிசை என்பதற்கு ஊஞ்சற் கயிறு போல நடுவில் நின்று இருபக்கத்திலும் செல்லும் சொல் என்பது பொருள் (தாம்பு-கயிறு) செய்யுளில் நடுவில் நிற்கிற மொழி ஒழிந்த முதலிலும், கடைசியிலும் சென்று பொருளைக் கூடுவது தாப்பிசைப் பொருள்கோளாம். இதனை **மத்திமதீபம்** என்பர் வடநூலார். இதனை,

நன்னூல்

"இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை"

என்பதனுனறிக. உடலம் என்பதில் அம்-சாரியை. ஐ-இடைக் குறை. இடை-ஏழாம் வேற்றுமை உருபு. கண்ட என்பதில் காண்-பகுதி. மலரடி-வினைத்தொகை. சிலம்பு-இடைப்பிறவரல். இதனை,

நன்னூல்

"உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்
பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன"

என்பதனுனறிக. 'மலர் சிலம்படி' என்னும் இத்தொடர் பெரிய புராண காப்புச் செய்யுளில் "மலர் சிலம்படி வாழ்த்தி வணங்கு வாம்" என வருதல் காண்க. (83)

மங்கையர் பாரக் கொங்கையங் குவட்டு
மதர்விழிக் கடலினு மளகக்
கங்குலி னூடுஞ் சென்றவென் மனத்தைக்
கதியிடை நடத்துமா றெளிதோ
செங்கதிர் காலை மாலையுந் தங்கச்
சிலம்புள வெனக்கடும் பகலிற்
றங்குற நீடி நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) செங்கதிர் - சிவந்த கிரணங்களையுடைய சூரியன், காலையும் மாலையும் தங்க - உதய காலத்திலும், அஸ்தமன காலத்திலும் தங்கியிருக்க, சிலம்பு உள என-மலைகள் உளவெனக் கருதி, கடும் பகலில் தங்குற - உச்சிப் பகலில் தங்கி யிருக்கும்படி, நீடி நின்றிடும்-ஓங்கி வளர்ந்திருக்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, மங்கையர் - மாதர்களுடைய, அம் கொங்கைக் குவட்டும்-அழகிய தனங்களாகிய மலைகளிடத்தும், மதர் விழிக் கடலினும்-களிப்புப் பொருந்திய கண்களாகிய கடலினிடத்தும், அளகம் கங்குலி

னூடும் - கூந்தலாகிய இருளினிடத்தும், சென்ற என் மனத்தை-சென்று உழலுகின்ற அடியேனுடைய மனத்தை, கதி இடை நடத்தும் ஆறு - மோக்ஷ நெறியில் செலுத்துந் தன்மை, எளிதோ-எளிதாமோ? (எளிதன்று); எ-று.

(வி-ரை) மங்கை - உயர்திணைப் பெண்பாற் சிறப்புப் பெயர். மங்கைப்பருவம் மாதர்களுக்குரிய எழு பருவத்தில் ஒன்று. அவை யாவன:—பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பன. அவை முறையே: ஐந்து வயது முதல் ஏழளவும் பேதை. எட்டு முதற் பதினொன்றளவும் பெதும்பை. பன்னிரண்டு முதற் பதின்மூன்றளவு மங்கை. பதினான்கு முதற் பத்தொன்பதளவு மடந்தை. இருபதுமுத லிருபத்தைந்தளவும் அரிவை. இருபத்தாறு முதல் முப்பத்தொன்றளவுந் தெரிவை. முப்பத்திரண்டு முதல் நாற்பதளவும் பேரிளம்பெண் எனப்படும். இதனை,

இரத்தினச்சுருக்கம்

"வாரிமணி வெய்யோன் மதிபா ரதம்வள்ளல்
சீரியவ றம்வளர்க்குஞ் செய்கைதா னரிகேள்
பேதைமுத லாகப் பேரிளம்பெண் ணீறாக
வீதெழுவர் தம்பருவ மெண்" என்பதனா லறிக.

"அடர்ந்துதிரண் டிடங்கொண் டண்ணாந்து விம்மிப்
படர்ந்து சுணங்கு பரந்து-தடங்கொண்
டிணைத்துத் ததும்பி யிறுமாந்து வீங்கிப்
பணைத்துமுகம் பார்க்குமது பார்"

என்றபடி, கொங்கையி னியல்புகூறி யிருப்பதனால் மாதர்களது கனத்த தனங்களாகிய அழகிய மலைகள் என்பார் 'மங்கையர் பாரக் கொங்கையக் குவட்டும்' என்றார். மோக்ஷமடையும் வழியை விட்டு விட்டு மலையிலும், கடலிலும், இருளிலும் செல்லும் அடியேனது மனத்தை நல்வழிப்படுத்தல் அரிதென்பார் 'என் மனத்தைக் கதியிடை நடத்துமா றெளிதோ' என்றார். காலையிலும் மாலையிலும் சூரியன் தங்குவதற்கு உதயகிரி அஸ்தகிரி என்னும் மலைகளிருக்

கின்றன; ஆனால், நடுப்பகலில் சூரியன் தங்குவதற்கு ஒரு மலையும் இல்லையே யென்று திருவுளங்கொண்டு உச்சிவேளையில் தங்குவதற் காகவே யுயர்ந்திருக்கின்றது இச் சோணசைலம் என்பார் 'செங் கதிர் காலை மாலையுந் தங்கச் சிலம்புள வெனக்கடும் பகலிற் றங்குற நீடி நின்றிடும்' என்றார். எனவே, இம்மலை சூரியமண்டலம் வரை ஓங்கி வளர்ந்ததென்பது கருத்தாகக் கொள்க. ஊடு - ஏழாம் வேற் றுமை உருபு.

(84)

கண்டிகைக் கலனே கலனென விழைந்து
காயமே லணிந்துவெண் ணீற்றுப்
புண்டரக் குறிசேர் நுதலொடு நினையான்
பூசனை புரியுமா றருளாய்
முண்டகச் செழும்பூ வெனவிளக் கெரியு
முடிமிசை முத்துமேற் கட்டித்
தண்டிரைக் கங்கை யாறுசேர் சோண
சைலனே கைலைநா யகனே.

**(ப-ரை.)** செழு முண்டகம் பூ என-செழுமையான தாமரை மலர்போல, விளக்கு எரியும் முடி மிசை - கார்த்திகை விளக்கு எரியப்பெற்ற திருமுடியின்மேல், தண் திரை கங்கை ஆறு-குளிர்ந்த அலைகளையுடைய ஆகாய கங்காநதியானது, முத்துமேற் கட்டி சேர்-முத்துக்களாற் புனைந்து செய்யப்பட்ட விதானம்போற் சேர்ந்திருக் கப்பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, கண்டிகைக் கலனே - உருத்திராக்க மாலையையே, கலன் என விழைந்து - அணி கலமாக விரும்பி, காயம் மேல் அணிந்து - உடம்பின்மேல் தரித்து, வெண் திருநீற்றுப் புண்டரம் குறிசேர்-வெண்மையாகிய விபூதியைத் திரிபுண்டரமாக அணிந்த அடையாளத்துடன் கூடிய, நுதலொடு- நெற்றியோடு, நினை-தேவரீரை, யான் பூசனை புரியும் ஆறு அடியேன் பூசை புரியும்படியாக, அருளாய்-அருள் செய்வீராக; எ-று.

**(வி-ரை.)** சிவபூசை முதலிய செய்வார்க்கு உருத்திராக்கமாலை இன்றியமையாது வேண்டப்படுவ தாகலானும், அவ் வுருத்திராக் கத்தைத் தேகத்தில் அணிந்து கொள்ளாமல் செய்யும் சிவபூசை

பயன்தரா தாகலானும், அஃது ஏனைய ஆபரணங்களைப்போலல்லாமல் அணிபவர்களது பாவத்தை நீக்குவதாகலானும்,

உருத்திராக்கமாலை

"நீரிற் குளித்திடலா னீள்வேலை செய்திடலாற்
பாரில் விபூதியொளி பாறுமே"

எனக் கூறியபடி ஜலத்தில் ஸ்நானம் செய்யும்பொழுதும், வேலை செய்து உடம்பில் வெயர்வை யுண்டாகும்போதும் விபூதி கலைந்து விடுமாகலானும் எக்காலத்திலும் உருத்திராக்கம் உடலில் இருந்தே தீரவேண்டு மாகலானும் உருத்திராக்க மாலையையே ஆபரணமாகக் கொண்டு அவ்வாபரணம் அணிந்து கொள்வதற்கே விரும்பி தேகத்தில் தரிக்கவேண்டு மென்பார் 'கண்டிகைக் கலனே கலனென விழைந்து காயமே லணிந்து' என்றார். இதனை,

சீகாளத்திபுராணம்

"ஆயிரங் கலனுடம் பனைத்துந் தாங்கினும்
மாயிரும் பொறையலால் வருவ துண்டுகொல்
நாயகன் விழிமணி யொன்றோர் நாளுடல்
மீயணிந் திடில்வினை யாவும் வீயுமே"

என வருஞ் செய்யுளா னறிக. புண்டரம்-மூன்று குறியாகப் பிறை போல அணிவது 'நுதலிற் புண்டரம் பயிலன்பு டைப்புண்ணிய வணிகன்' என்னும் திருவிளையாடற் செய்யுளிலும் கூறியது காணக. செந்நிறவொளி பெற்றமையால் திருவிளக்குக்குத் தாமரை ஒப்பாயிற்று. மேற்கட்டி - மேலே கட்டப்படும் விதானம். கலன்-மொழியிறுதிப்போலி. திரை கங்கை-இரண்டாம் வேற்றுமையுருபும்பயனுமுடன்றொக்க தொகை. 'திரை' - அலை; திரைவது, திரையென அலைக்குக் காரணக்குறி; வினை முதற்பொருள் விகுதி புணர்ந்து கெட்ட பெயர்: திரைதல் - மடங்குதல். 'கங்கா' என்னும் வடசொல் கங்கை' யெனத் திரிந்தது: இது, வேகமாய்ச் செல்வது என்று பொருள்படும். (85)

நாவினைந் தெழுத்து மந்திர மலாத
நவிற்றுவோர் தமையுநீ யிருப்பப்
பாவினங் கொடுபுன் மனிதரைப் புகழும்
பாமரர் தமையுமென் றொழிவேன்
கோவினம் புரப்பக் குன்றமன் றெடுத்த
குன்றமம் பாடகக் குன்றந்
தாவினஞ் சிலையென் றெடுத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) கோ இனம் புரப்ப - பசுக்கூட்டங்களைக் காக்குமாறு, குன்றம் அன்று எடுத்த-கோவர்த்தன மலையை அந்நாளில்தூக்கிய, குன்றம் அம்பு (என்று)-நீலமலைபோன்ற விஷ்ணுவே அம்பென்றும், ஆடகம் குன்றம் - பொன் மலையாகிய மேருவே, தாவு இல் நம்சிலை என்று - கெடுதலில்லாத நமது வில்லென்றும், எடுத்திடும் - கைக் கொண்டருளிய, சோணசைலனே! கைலைநாயகனே!—, நாவின்-தம் முடைய நாவினால், ஐந்தெழுத்து மந்திரம் அலாத - பஞ்சாக்கரம் நீங்கிய மற்றைய மந்திரங்களை, நவிற்றுவோர் தமையும்-உச்சரிக்கின் றவர்களையும், நீ இருப்ப - தேவரீர் இருக்க (தேவரீரைப் புகழாமல்) பா இனம் கொடு-பாவினாலும், பாவினங்களினாலும், புல் மனிதரை- அற்பமாகிய மக்களை, புகழும் பாமரர் தமையும்-புகழ்ந்துரைக்கின்ற அறிவிலிகளையும், என்று ஒழிவேன் - எக்காலத்தில் விட்டு நீங்கு வேன்; எ-று.

(வி-ரை.) எல்லா மந்திரங்களுக்கும் சிறந்ததான ஸ்ரீபஞ்சாக்கர மந்திரம் இருக்கவும் அம்மந்திரத்தை யுச்சரிக்காமல், அஃதொழிந்த பிற மந்திரங்களை உச்சரிப்பவர்களையும், தேவரீர்மீது பாடல்பாடாமல் அற்ப மனிதர்கள்மீது பாடல்பாடிப் புகழும் அறிவில்லாதவர்களை யும் எக்காலத்தில் விட்டு நீங்குவே னென்பார் 'நாவினைந் தெழுத்து மந்திர மலாத நவிற்றுவோர் தமையுநீ யிருப்பப் பாவினங் கொடுபுன் மனிதரைப் புகழும் பாமரர் தமையுமென் றொழிவேன்' என்றார். 'நீஇருப்ப' என்பதற்குப் பாடலை யேற்றுப் பலனைக் கொடுப்பதற்குத் தேவரிருக்க தேவரீரைப் புகழாமல் எனப் பொருள் கொள்க.

அலாத என்பது இடைக்குறை: அல்லாத என்பது இவ்வாறு ஆயிற்று; வினையாலணையும்பெயர். பா நான்குவகையும், பாவினம் மூன்று வகையுமாம்; அவை:—வெண்பா, அகவல், கலி, வஞ்சி என்பனவும், தாழிசை, துறை, விருத்தம் என்பனவுமாம். குன்றம்: முன்னது கோவர்த்தனமும், இடையில் உள்ளது திருமாலும், பின்னது மேரு மலையுமாம். திருமாலைக் குறிக்கும் இடத்தில் குன்றம் என்பது ஆகுபெயர். 'குன்றம்' என்பதில் அம் சாரியை. மன்றம் என்ப தைப்போல. தேவேந்திரன் ஒருகாலத்தில் கன்மழை பெய்யும்படி செய்யப் பசுக்களைக் காக்குமாறு கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்தநீலமலைபோன்றவரான விஷ்ணுவையே அம்பாகவும், பொன் மலையாகிய மேருமலையை வில்லாகவும் ஏற்றருளிய பெருமான் என் பார், 'கோவினம் புரப்பக் குன்றமன்றெடுத்த குன்றமம் பாடகக் குன் றந் தாவினஞ் சிலையென் றெடுத்திடும்' என்றார். திரிபுரதகன காலத் தில் திருமாலை அம்பாகவும், வாயுவே அம்பிற்பூட்டிய சிறகாகவும், அக்கினியே அம்பின் கூர்வாயாகவும் அமைந்திருப்பினும் சொரூபம் விஷ்ணுவாதலால், அவ் விஷ்ணுமூர்த்தியே 'அம்பு' என்றார். ஏனைய ஆசிரியர்களும் இவ்வாறே கூறியுள்ளார்கள். 'குன்ற மன்றெடுத்த குன்றம்' என்றது - கோவர்த்தனகிரியைக் (இந்திரன் கன்மழை பெய் வித்த அந்தக்காலத்தில் பசுநிரைகளைக் காக்குமாறு) குடையாகப் பிடித்தருளிய நீலமலைபோன்ற விஷ்ணுமூர்த்தியை யென்க. விஷ்ணுமூர்த்தி கோவர்த்தன மேந்தியது என்பது: இந்திரன் பகை மைகொண்டு விடுத்த சத்த மேகங்களையும் தடுத்து, பசுமந்தையைக் காக்கும்படி கண்ணபிரான் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்தாரென்பதைக் குறித்ததாமென்க. இதனை,

### கூர்மபுராணம்-கண்ணனவதரித்த படலம்

"காரேழுமெ ழூந்தோரெழு கடல்வற்ற முகந்தாங்
கோர்தாரைநல் லயிராவண முயர்நீள்கர மொப்ப
வாராவுமிழ் தலுமானினந் துயராதனி துளவோன்
பேராவுயர் கோவர்த்தனங் குடையாமெனப் பிடித்தான்"

என்பதனுணர்க. (86)

திங்களுங் கதிரு மிலங்கிய மானுந்
திகழ்பெரும் பூதமோ ரைந்துங்
கங்குலும் பகலுங் கடந்தநின் வடிவங்
கண்டுகண் களிக்குநா ளுளதோ
பொங்குகுங் குலியக் கலயவா ரழலிற்
புகையெனச் சரோருக வல்லி
தங்குவண் டெழுபூம் பொய்கைசூழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை.) பொங்கு கும்குலியம் கலயம் - அழகினால் பொலிவு பெற்ற குங்குலியக் கலயத்தில், ஆர் அழலிற் புகை என-பொருந்திய அக்கினியிலுண்டாகும் புகைபோல, சரோருகம் அல்லி - செந்தாமரைப்பூவின் அகவிதழில், தங்கு வண்டு எழு - தங்கியிருக்கிற கரிய வண்டுகள் மேலே எழுகின்ற, பூம் பொய்கை சூழ்-அழகிய தடாகங்கள் சூழப்பெற்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, திங்களும் கதிரும் - சந்திரனும் சூரியனும், இலங்கு இயமானும் - விளங்குகின்ற ஆன்மாவும், திகழ் பெரும்பூத மோரைந்தும்-அனைத்திஹுக்கும் காரணமாய்த் திகழ்கின்ற நில முதலிய ஐந்து பூதங்களும்,, கங்குலும் பகலுங் கடந்த - இரவும் பகலுங் கடந்து நிற்கின்ற, நின் வடிவம்-தேவரீருடைய திருவுருவத்தை, கண்டு கண் களிக்கு நாள்-தரிசித்து அடியேனுடைய கண்கள் மகிழ்வெய்தும் காலமும், உளதோ-உண்டாகுமோ? (அறிகிலேன்); எ-று.

(வி-ரை.) சந்திரனும் சூரியனும் ஆன்மாவும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களும் இரவும் பகலும் கடந்து விளங்கிய பெருமான் வடிவத்தைத் தரிசித்து அடியேன் கண்கள் சந்தோஷமடையும் காலமும் உண்டாகுமோ அறியேன் என்பார், 'திங்களுங் கதிரு மிலங்கிய மானுந் திகழ்பெரும் பூதமோ ரைந்துங் கங்குலும் பகலும் கடந்தநின் வடிவம் கண்டுகண் களிக்குநா ளுளதோ' என்றார். எல்லாப் பொருள்களுந் தோற்றுவதற்குக் காரணமாயுள்ளது பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களாகலின் 'திகழ் பெரும் பூதமோ ரைந்தும்' என்றார்.

### தேவாரம்

"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமான னாயெரியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி யாகாச மாயட்ட மூர்த்தி யாகி"

எனவும்,

"ஐம்பெரும் பூத மிருசுட ரான்மா அன்றியே யுலகிலே யவைதா
மூன்பெரு வடிவ மெனப்படும்" எனவும்,

### திருவிளையாடற்புராணம்

"இயமான னிந்திரவி யெரிவானி லஞ்சலில மெறிகா
லெனும் பகுதி யிருநான், மயமான சுந்தரனே"

எனவும் கூறியபடி யுலகத்திலுள்ள பொருள்களெல்லாம் இங்கு கூறியுள்ள எட்டுப் பொருள்களில் அடங்குதலும், அந்த எட்டுப் பொருள்களும் சிவபெருமான் வடிவமாக விளங்குதலும், அதனால் பெருமான் அஷ்டமூர்த்தமாக விளங்குவதாகக் கூறுதலும், இவை இறைவனுடைய சகள உருவமென்றும், இவற்றைக் கடந்து நிற்பதே நிஷ்கள வுருவமென்றும் உணருமாறு இரண்டையும் விளக்கி ஆகிய இவைகளெல்லாம் கடந்து நிற்கின்ற பெருமான் திருவுருவம் என்பார் 'பூதமோ ரைந்துங் கங்குலும் பகலுங் கடந்தநின் வடிவம்' என்றார். எனவே, பெருமானுடைய நிஷ்கள அகண்டாகார வடிவத்தைத் தரிசித்துக் கண்கள் களிக்கும் காலமும் உண்டாகுமோ அறியேன் எனக் கூறித் தான் அந்த நிஷ்களவடிவத்தைத் தரிசனம் செய்ய வேண்டிப் பிரார்த்தித்ததென்க. குங்குலியக் கலயத்தில் பொருந்திய நெருப்பிலுண்டாகும் புகைபோலச் செந்தாமரைமலரின் அகவிதழில் தங்கி யிருக்கிற கரிய வண்டுகள் மேலே எழுகின்ற தடாகங்கள் சூழ்ந்து உள்ளதென்பார், 'பொங்குகுங் குலியக் கலயவா ரழலிற் புகையெனச் சரோருக வல்லி தங்குவண் டொடூம் பொய்கைசூழ்' என்றார். எனவே, குங்குலியக்கலயம், அழல், புகை என்பன முறையே தாமரைமலர்க்கும், அதன் அகஇதழுக்கும், கருவண்டு கட்கும் உவமையாயின. இயமானனும் என்பது 'இயமானும்' என ஈண்டு வந்தது தொகுத்தல் விகாரம். அல்லி-அகவிதழ்; இவ்வாறே புறவிதழிற்குப் புல்லி என்று பெயர்.

"அல்லி அகவிதழ்"
"புல்லி புறவிதழ்"

என்பன திவாகரச் சூத்திரம். 'கங்குலும் பகலும் கடந்தநின் வடிவம்' என்பதனை, தாயுமானவர் 'கங்குல் பகலறநின்ற வெல்லையுள தெதுவது கருத்திற் கிசைந்ததுவே' எனவும், 'இரவுபகலற்றவிடத்தே யிருத்தல் எளிதல்லவே' எனவும் வருமாற்றானறிக. (87)

பொறியெனப் புலன்க ளெனக்கர ணங்கள்
பூதங்க ளெனவிலா தடங்க
வறிவெனத் தமியேற் கொருமொழி யுதவி
யருவினைக் குறும்பற வெறியாய்
செறிமுலைக் கரியுஞ் சிற்றிடை யரியுஞ்
சேரமா துமைதினங் கட்டுந்
தறியெனக் கவின்பெற் றிலங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) உமை மாது - உமாதேவியார், செறி முலை கரியும்-நெருங்கிய தனங்களாகிய யானையையும், சிறு இடை அரியும்-குறுகிய இடையாகிய சிங்கத்தையும், சேர-சேரும்படி, தினங் கட்டும் தறிஎன - நாடோறும் கட்டுதற்குரிய தூண்போல, கவின் பெற்று இலங்குறும்-அழகுபெற்று விளங்குகின்ற, சோணசைலனே! கைலை நாயகனே!—, பொறி என - ஐம்பொறிகளும், புலன்கள் என-ஐம்புலன்களும், கரணங்கள் (என)-அந்தக்கரணங்களும், பூதங்கள் என-ஐந்து பூதங்களும், இலாது-(ஆகிய இவற்றில் அடியேன் ஒரு பொருள் என்று) அறிதலொழிந்து, அடங்க அறிவு என-முற்றும் ஞானசொரூபமாக அடியேனை உணரும்படி, தமியேற்கு ஒருமொழி உதவி-எளியேனுக்கு உண்மையாகிய ஒப்பற்ற மொழியை அருளி, அருவினை குறும்பு-நீங்குதற்கரிய வினைகளால் விளையுந் துன்பங்களை, அற எறியாய்-முற்றும் சேதித்தருள்வீராக; எ-று.

(வி-ரை.) இந்திரியங்களே ஆன்மா வென்பாரும், புலன்களே ஆன்மா வென்பாரும், அந்தக்கரணங்களே ஆன்மா வென்பாரும், பூதங்களே ஆன்மா என்பாரும் ஆகிய இவர்களின் கூற்றுத் தமக்கு

உடன்பாடல்லவென்பதை விளக்கி, 'பொறியெனப் புலன்களெனக் காணங்கள் பூதங்களென விலாது' என்றார். பொறி, புலன், காணம் என்னும் இவற்றின் தோற்றமில்லாமல் முற்றும் ஞானசொரூப மாகவே தோற்றும்படி ஒருமொழியை அருளவேண்டு மென்பார் 'அடங்க வறிவெனத் தமியேற் கொருமொழி யுதவி' என்றார். துணையற்ற எளியேனுக்கு ஐம்பொறிகளும், ஐம்புலன்களும், நான்கு அந்தக்காணங்களும், ஐம்பூதங்களும் ஆகிய இவைகளை ஆன்மா வென மயங்காமல் முற்றும் ஞானசொரூபமாகவே தோற்றும்படி துணையற்ற எளியேனுக்கு உண்மையாகிய ஒப்பற்றமொழியை யுப தேசித்து அம்மட்டில் அடியேனை விட்டுவிடாமல் நீங்குதற்கரிய வினைகளால் விளையுந்துன்பங்களை முற்றும் எறிந்தருள்வீராக எனப் பிரார்த்திப்பார் 'அருவினைக் குறும்பற வெறியாய்' என்றார். எனவே, உயிர் அறிவே உருவமாயதாயினும் மலத்தால் மறைக்கப்பட்டிருத்த லின் தன்னையும் தனக்கு ஆதாரமான தலைவனையும் உணராமல் நிற் கின்றது. ஆகையால், அம்மலத்தை யகற்றி உணர்த்தவேண்டு மெனப் பிரார்த்தித்தபடி என்க. 'என' என்பன மூன்றும் எண் ணிடைச் சொற்கள். 'காணம்' என்பதோடு 'என' என்பதைகூட்டுக. 'அடங்க' 'அற' என்பன முழுதும் என்னும் பொருள்பட நின்றன. யானைக்கோடு தனத்திற்கும், சிங்கம் இடுப்பிற்கும் உவமைகளாம். இஃது உருவகவணி. (88)

பொன்னிடத் தடைந்த மணியென வடைந்து
புண்ணியர்க் கருளுநின் பதங்க
ளென்னிடத் திரும்பி னடைந்தசெம் மணிபோ
லெய்திய தம்மவோ வியப்பே
மன்னிடக் கடலு ளடங்கும்வெற் பன்றி
மலைதரு மருட்பெருங் கடலைத்
தன்னிடத் தடக்கு மலையெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மன்னிட-நிலைபெறும்படி, கடலுள் அடங்கும் வெற்பு அன்றி-கடலில் ஒடுங்கியிருக்கும் மற்றைய மலைகளுக்கு நிகராதல் நீங்கி, மலைதரும் - இமயமலை பெற்ற, அருள் பெருங்கடலை - பெரிய

கருணைக்கடலை (பார்வதியை), தன் இடத்து அடக்கும்-தனது இடப் (வாம) பாகத்தில் ஒடுங்கியிருக்கச் செய்தருளிய, மலை எனும்-மலையென்று சொல்லும்படியான, சோணசைலனே! கைலைநாயகனே!—, பொன் இடத்து அடைந்த - பொன்னினிடத்திற் பதிக்கப்பட்ட, செம்மணி என-செவ்விய அரதனம்போல, அடைந்து-சேர்ந்து, புண்ணியர்க்கு அருளும்-தூய்மையாளர்க்கு அருள் செய்கின்ற, நின்பதங்கள்-தேவரீருடைய திருவடிகள், இரும்பினடைந்த செம்மணிபோல்-இரும்பைச் சேர்ந்துள்ள அரதனம்போல, என்னிடத்து எய்தியது-அடியேனிடத்து வந்தது, அம்ம ஓவியப்பே - பெரிய வியப்பாகும்; எ-று.

(வி-ரை) பொன்னிற் பதிக்கப்படும் அரதனங்கள் இரும்பிற் பதிக்கப்படாவாறுபோலப் புண்ணியர்களிடம் சென்றருளும் திருவடிகள் அடியேனிடம் வந்தடைவதற்கு உரியன வல்லவாயினும், பேரருளா லடைந்தது என்பது தோன்ற, 'என்னிடத் தெய்திய தம்மவோ வியப்பே' என்றார். 'அம்ம, ஓ' என அடுக்கிய இடைச்சொற்கள் ஆச்சரியத்தின் அதிகரிப்பைக் குறித்து நின்றன. சமுத்திரத்திற்குள் அடங்கும் பிறமலைகளைப்போலல்லாமல் அருட்பெருங்கடலாகிய உமாதேவியாரைத் தன்னிடத்தில் ஒடுங்கியிருக்கச் செய்தருளிய மலை இச்சோணசைலமென்பார், 'மன்னிடக் கடலுளடங்கும் வெற்பன்றி மலைதரு மருட்பெருங் கடலைத்தன் னிடத்தடக்கு மலையெனுஞ் சோணசைலனே' என்றார். எனவே, எல்லா மலைகளும் கடலுள் அடங்குவனவாக, இம்மலை கடலைத் தன்னிடத்தடக்கு மென மாறுபடக் கூறியதனால் இது மாறணி யாகும். (89)

நீங்கிய நேயத் தவர்க்கறி வரிய
நெடியவ னெஞ்சகன் றிடாத
தேங்கிய சோதி மன்றுளா டுவவென்
சிந்தையு ணடப்பநின் பதங்க
ளோங்கிய மூங்கிற் றலைமிசை மலர்வீழ்ந்
தழுமணி புரியிருன் மருவித்
தாங்கிய வால வட்டநேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) ஓங்கிய மூங்கில் தலைமிசை-உயர்ந்திருக்கின்ற மூங்கில் மரத்தின் உச்சியில், மலர்வீழ்ந்து உழும் அளி-பூக்களில் மொய்த்துக் கிண்டும் வண்டுகள், புரி இறால் மருவி-அமைத்த தேனடை பொருந்தப்பெற்று, தாங்கிய ஆலவட்டம் நேர்-ஏந்தியிருக்கின்ற ஆலவட்டத்தை யொத்த, சோணசைலனே! கைலைநாயகனே!—, நீங்கிய நேயத்தவர்க்கு - அன்பு குறைந்த அறிவிலாதவர்க்கு, அறிவு அரிய-அறிதற்கு அரியனவும், நெடியவன் நெஞ்சு-திருமால் மனத்தைவிட்டு, அகன்றிடாத - எக்காலத்தும் நீங்காதனவும், சோதி தேங்கிய-ஒளி நிறைந்து வளர்கின்ற, மன்றுள் ஆடுவ-சிற்சபையில் ஐந்தொழிற் கூத்தாடுவனவும் (ஆகிய), நின் பதங்கள்-தேவரீருடைய திருவடிகள், என் சிந்தையுள்-அடியேனுடைய மனத்தில், நடப்ப-பயில்வன (ஆதல் வேண்டும்); எ-று.

(வி - ரை.) 'ஆதல் வேண்டும்' என்பது வருவிக்கப்பட்டது: இசையெச்சம். நீங்கிய நேயத்து அவர்: எனப் பதம்பிரித்து, நேயம் நீங்கிய அவர் என அந்நுவயித்துப் பொருளுரைத்தலும் உண்டு. அரிய, அகன்றிடாத, ஆடுவ: இவை வினையாலணையும் பெயர்; இவ்விடங்களில் எண்ணும்மை விகாரத்தாற்றொக்கது. ஆலவட்டம் என்பது உபசாரக் கருவிகளில் ஒன்று; இஃது ஆலிலை வடிவமாக இருக்கும். அன்புகுறைந்த அறிவிலாதவர்க்கு அறிதற்கரியதாயும், விஷ்ணுவினுடைய மனத்தைவிட்டு என்றும் நீங்காததாயும், சிற்றம்பலத்தில் பஞ்சகிருத்தியத் திருத்தாண்டவம் புரிவதாயும் உள்ளது பெருமான் திருவடி யென்பார், 'நீங்கிய நேயத்தவர்க் கறிவரிய நெடியவ னெஞ்சகன்றிடாத தேங்கியசோதி மன்றுளாடுவ' என்றார். நெடியவன்-விஷ்ணு. இதனை,

திருவிளையாடற் புராணம்

"நெடிய வன்பிரன் றேட நீண்டவன்"

"நெடியோன்றன்னை விடையவன் வடிவமாக்கி நின்றவன்"

என வருமாற்றானறிக. மிக்க சிறப்புடைய தேவரீர் திருவடிகள் அடியேனுடைய மனத்தில் சஞ்சரிப்பன ஆதல் வேண்டுமென்பார் 'என்சிந்தையு ணடப்ப நின் பதங்கள்' 'சோதி தேங்கிய மன்று

ளாடுவ' எனவும் 'நின் பதங்களென் சிந்தையு ணடைப்ப' எனவும் முடிக்க. உயர்ந்து வளர்ந்த மூங்கில் மரத்தின் உச்சியில் வண்டினங்கள் அமைத்த தேனடை பொருந்தியிருத்தல் பார்ப்பதற்கு எம்மாதிரி இருக்கின்றதென்றால், அடியவர்கள் ஏந்திய ஆலவட்டத்தை ஒத்திருக்கின்றது என்பார், 'ஓங்கிய மூங்கிற் றலைமிசை மலர்வீழ்ந் தழுமணி புரியிறால் மருவித் தாங்கிய வால வட்டமோ' என்றார். எனவே, இறால் ஆலவட்டத்திற்கும், மூங்கில் அதனுடைய காம்புக்கும் உவமையாயின. 'ஆல' என்பதில் அகரம் சாரியை. புரியிறால்- வினைத்தொகை நிலைத்தொடர். மலர்வீழ் - ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். (90)

எழுபசும் புல்லும் புனலுமெவ் விடத்து
மிருந்திட நினைத்தவவ் விடத்தே
விழைவொடு வந்து தோன்றுநீ யிருப்ப
வீணின்மா னுடர்பிறந் துழல்வார்
மொழிதரு கருணை மலையெனும் பெயரன்
மொழியொரீஇ வேற்றுமைத் தொகையைத்
தழுவுற நின்று வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) மொழி தரு - அன்பர்களாற் புகழ்ந்து கூறப்படும், கருணை மலை எனும் பெயர்-கருணைமலை என்னும் தேவரீருடைய திருப்பெயரானது, அன்மொழி ஒரீஇ - அன்மொழித்தொகை என்னும் இலக்கணத்தைவிட்டு, வேற்றுமைத் தொகையை-வேற்றுமைத் தொகை என்னும் இலக்கணத்தை, தழுவுற-ஏற்கும்படியாக, நின்று வளர்ந்திடும்-நிலைபெற்று வளருகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, எழு பசும் புல்லும்-தானே வளர்கின்ற பசுமையான புற்களும், புனலும்-தண்ணீரும், எவ்விடத்தும் இருந்திட-எல்லா விடங்களிலும் எளிதிற் கிடைக்கக் கூடியதாகவிருக்க, நினைத்த அவ் விடத்தே - அன்போடு நினைக்கின்ற இடம் எதுவாயினும் அவ்விடத்தில், விழைவொடு வந்து தோன்றும் நீ இருப்ப - மிகுந்த விருப்பத்தோடு வெளிப்பட்டுத் திருவருள்புரியும் தேவரீர் இருக்க, மானுடர்-

மனிதர்கள், வீணில் பிறந்து உழல்வார் - (நீராலும் புல்லாலும் நெஞ் சுருகப் பணிந்து நிமலனருள் பெறுமல்) வீணே பிறந்து உழன்று காலம் கழிக்கின்றார்கள் (இஃது எத்துணைப் பேதைமை); எ-று.

(வி-ரை.) பட்டினத்தார் 'பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி, மெச்சிச் சிவபதவீடருள்பவன்" எனப் பிறபெரியோர்களும் திருவாய் மலர்ந்தருளினமையால் இவரும் அவற்றைத்தழுவி 'எழுபசும் புல்லும் புனலு மெவ்விடத்து மிருந்திட நினைத்த வவ்விடத்தே விழைவொடு வந்து தோன்றுமீயிருப்ப வீணின்மானுடர் பிறந்துழல்வார்' என்றார். இதனை,

திருமந்திரம்

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ண லதுகண் டருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே"

என்பதனு னறிக. எனவே, நீரும் புல்லும் நினைத்தவிடத்தில் எளி தாகக் கிடைப்பனவா யிருந்தும், தேவரீரும் அன்போடு நினைக்கு மிடத்தே எளிதாக வெளிப்படு மியல்புடையவரா யிருந்தும் மனிதர் கள் இதனை யுணர்தலில்லாமல் இழிவடைகின்றார்களே என இரங்கிக் கூறினாரென்க. 'கருணை மலை' என்னும் திருநாமமானது அன்மொழித்தொகை என்னும் இலக்கணத்தைவிட்டு வேற்றுமைத் தொகை என்னும் இலக்கணத்தை ஏற்கும்படியாக நிலைபெற் றோங்கிய சோணசைலன் என்பார், 'மொழிதரு கருணை மலையெனும் பெயரன் மொழி யொரீஇ வேற்றுமைத் தொகையைத் தழுவுற நின்று வளர்ந்திடுஞ் சோணசைலனே' என்றார். எனவே, 'கருணை மலை' என்னும் திருநாமம் இந்த மலையுருவ மாவதற்கு முன்னே கருணையாகிய மலையை யுடையவனென்றும் மொழி மாறி மலைபோலுங் கருணையை யுடையவனென்றும் விரிந்து முறையே பண்புத்தொகைப்புறத்தும் உவமைத் தொகைப்புறத்தும் பிறந்த அன்மொழித் தொகையாய் நின்று, இந்த மலையுருவமான பிறகு கருணையையுடைய மலை என விரிந்து இரண்டாம் வேற்றுமை

உருபும் பயனும் உடன்றொக்க தொகையைத் தழுவிற்று என்றபடி குறித்தாரென்க. அன்மொழித் தொகையாயின், கருணையாகிய மலையையுடையவன், மலைபோலுங் கருணையுடையவன் என இரண்டு விதமாக விரியும். இவ்வாறு இரண்டுவிதமாக விரித்தால் பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையும், உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையுமாம். வேற்றுமைத் தொகையாயின் கருணையையுடைய மலை என விரியும். இவ்வாறு விரித்தால் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாம். எனவே சிவபெருமானைக் குறித்து வழங்கும்படியான 'கருணைமலை' என்னும் திருநாமம் இந்தமலை உருவமாவதன் முன்னர் அன்மொழித்தொகையாய் நின்று இந்த மலை உருவமைந்த பிறகு வேற்றுமைத்தொகைத் தழுவிற்று என்பதை ஈண்டு குறித்தாரென்க. 'மொழிதரு' என்பதில், மொழி தா - பகுதி. 'ஒரீஇ' என்பது சொல்லிசை யளபெடை. (91)

வேணவா வகன்று நின்றிரு வடியின்
மெய்ம்மையன் படைந்துபொய்ப் பிறவி
நாணுவா ரினங்கண் டுறும்படி தூய
ஞானநாட் டம்பெற வருளாய்
சேணுலா மதியந் தவழ்பெருங் குடுமிச்
சிலம்புகள் சிறுதுரும் பாகத்
தாணுவா யெழுந்து வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) சேண் உலாம் மதியம் - விண்ணகத்தே உலாவுகின்ற சந்திரன், தவழ் பெருங் குடுமி - தவழ்ந்து செல்லப்பெற்ற பெரிய சிகரங்களையுடைய, சிலம்புகள் - மற்றைய மலைகளெல்லாம், சிறு துரும்பு ஆக-சிறிய துரும்புபோ லாகும்படி, தாணுவாய்-மிகப் பெரிய திருவுடையதாய், எழுந்து வளர்ந்திடும்-ஓங்கி வளரப்பெற்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, வேணவா அகன்று - வேட்கையால் உண்டாகும் ஆசை யொழிந்து, நின் திருவடியில் - தேவரீருடைய திருவடிகளில், மெய்ம்மை அன்பு அடைந்து-உண்மை அன்பு பூண்டு, பொய் பிறவி நாணுவார் - அழியு மியல்பிற்றாய பிறவியை வெறுத்

கின்றவர்களுடைய, இனம் கண்டு உறும்படி-கூட்டத்தை அறிந்து அவர்களுடன் சேரும்படி, தூய ஞான நாட்டம்-குற்றமில்லாத ஞானக் கண்ணினை, பெற அருளாய்-அடியேன் பெறும்படி அளிப்பீராக;எ-று.

(வி-ரை.) வேட்கை+அவா=வேணவா என்றாயிற்று.

"செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐயென் இறுதி அவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுத லென்மனார் புலவர்
டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும்"

என்பது இலக்கணமாகலின் என்க. 'வேட்கை' - விருப்பம் எனப் பொருள்படுதலை "உயர்ந்த வேட்டத் துயர்ந்திசி னோர்க்கு" எனவரும் புறநானூறு 214-ம் உரையினுட் காண்க. சிவனடியார்களைக் கண்டு அவருடன் கூடுவதற்கு ஞானநாட்டம் இன்றியமையாது வேண்டப்படுதலின் அதனைப் பெறுமாறு அடியேனுக்கு அளிப்பீராக என வேண்டுவார் 'பொய்ப்பிறவி நாணுவாரினங் கண்டுறும்படித் தூய ஞான நாட்டம்பெற வருளாய்' என்றார். பிரபஞ்சத்தைப்பற்றி உண்டாகும் வேட்கைப் பெருக்கத்திினின்றும் நீங்கிப் பெருமான் திருவடிகளில் உண்மை பக்தி பூண்டு பிறவி யெடுத்தலில் வெட்கி வருந்துவோர் அன்பர்களே யாகலின் 'வேணவா வகன்று நின்றிரு வடியின் மெய்ம்மை யன்படைந்து பொய்ப்பிறவி நாணுவார்' என்றார்.

### பட்டினத்தார் திருப்பாடல்

"பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்திட்ட பிச்சையெல்லா
நாய்போ லருந்தி நரிபோ லுழன்று நன்மங்கையரைத்
தாய்போற் கருதித் தமர்போ லனைவர்க்குந் தாழ்மைசொல்லிச்
சேய்போ லிருப்பர்கண் டீருண்மை ஞானந் தெளிந்தவரே"

என்றபடி உலகத்திற்கஞ்சி மறைந்துள்ளவர்களான சிவஞானச் செல்வர்களைக் கண்ணுற் காண்டலும். அவர்களுக்குத் தொண்டுபூண்டு ஒழுகுதலும்,

### திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

"வளையார் பசியின் வருந்தார் பிணியின் மதனனம்புக்
கிளையார் தனங்கண் டிரங்கிலர் லாரிப் பிறப்பினில்வந்

தளையார் நரகினுக் கென்கட வார்பொன் னலர்ந்தகொன்றைத்
தளையா னிடைமரு தன்னடி யாரடி சார்ந்தவரே"

எனக் கூறியுள்ளபடி அவ்வாறு தொண்டுபூண் டொழுகுவதால் அடியவர்க்கு அடியவர்கள் அடையும்பேற்றினை யடைதலும், ஞான நாட்டம் பெற்றாலல்லாமல் முடியாதாகலின், ஞானநாட்டம் பெற விரும்பினரென்க. நாட்டம்-கண்; நாடு-பகுதி, அம்-கருவிப்பொருள் விகுதி. நாடுதற்குக் கருவியாயுள்ளது நாட்டம் [கண்] நோக்கு தற்குக் கருவியானது நோக்கம் [கண்] என்பதுபோல. (92)

நின்னையே நோக்கி விடாதகட் புலனு
 நின்னையே நினைக்குநெஞ் சகமு
நின்னையே துதிக்கு நாவுமென் றருளி
 நின்றிரு வடியின்வைத் தருள்வாய்
தன்னையே றினர்க்குச் சகமெலாங் காட்டுந்
 தரணியோ டிகலிமே வினர்க்குத்
தன்னையே காட்டு மலையெனுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) தன்னை ஏறினர்க்கு-தன்னிடம் ஏறினவர்கட்கு, சகம் எலாம் காட்டும் - உலக முழுவதையும் காட்டுகின்ற, தரணியோடு இகலி-மற்றைய மலைகளோடு மாறுபட்டு, மேவினர்க்கு-அடைந்தவர்களுக்கு, தன்னையே காட்டும் மலை எனும் - (உலகநிலையைக் காட்டாது) தன்னுடைய நிலையொன்றையே காட்டும் மலை என்று சொல்லப்படும், சோணசைலனே! கைலைநாயகனே!—, நின்னையே நோக்கி - தேவரீரையே தரிசித்துக்கொண்டு, விடாதகண் புலனும்- அதனிற் பிரியாத கண்ணிந்திரியமும், நின்னையே நினைக்கும் - தேவரீரையே தியானம் செய்கின்ற, நெஞ்சகமும்-மனமும், நின்னையே துதிக்கும்-தேவரீரையே புகழ்ந்து பாடுகின்ற, நாவும்-வாக்கும் (ஆகிய இவற்றை), என்று அருளி-எக்காலத்தில் கொடுத்து, நின் திருவடியில்- தேவரீருடைய திருவடி நிழலில், வைத்தருள்வாய் - வைத்தருளு வீரோ? (அடியேன் அறியேன்); எ-று.

(வி·ரை.) கண்புலன் - கண்ணுகிய புலனெனப் பொருள்படும். இம்மையில் மனம், வாக்கு, காயம் மூன்றும் தேவரீரை நினைக்கவும், புகழவும், வழிபடவுஞ் செய்து மறுமையில் திருவடிப்பேறும் அருள்க என வேண்டுகின்றாரென்பது கருத்து. உலகத்திலுள்ள மலைக ளெல்லாம் தன்மேலிவர்ந்தவர்களுக்கு உலகத்தையும் அதனிடத் திற் றோன்றும் பொருளையுமே காட்டும். ஆனல் இம்மலையோ அவ்வாறன்றித் தன்மேலிவர்ந்தவர்களுக்குத் தன்னிலை யொன்றையே காட்டுமென்பார், 'தன்னையே நினர்க்குச் சகமெலாங் காட்டுந் தாணியோ டிகலி மேவி னர்க்குத் தன்னையே காட்டு மலையெனும்' என்றார். தன்னையே காட்டுதலாவது: உயிராகிய தன்னியல்பை யும், உயிருக்கு உயிராகிய இறைவ னியல்பையும் முறையே உணர்த்துதலாம். கண் பெருமானைத் தரிசிப்பதும், மனம் அப் பெருமானைச் சிந்திப்பதும், நா அவனையே புகழ்ந்து பாடுதலும் இல்லாமல் வாணுளை வீணுளாகக் கழிப்பதாகவும் அதனல் இந்திரி யங்களை அவன் திருத்தொண்டி லீடுபடும்படி செய்யவேண்டு மென அப் பெருமானையே பிரார்த்திப்பார், 'நின்னையே நோக்கி விடாதகட் புலனு நின்னையே நினைக்கு நெஞ்சகமு நின்னையே துதிக்கு நாவுமென் றருளி' என்றார். இதனை,

**தேவாரம்**

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர்த் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே"

என்பதனு னறிக. இம்மையில் திரிகரணங்களையும் பெருமான் தம் முடையதாக ஆக்கிக்கொண்டு அம்மட்டில் அப்பெருமான் நில்லாது திருவடி நீழலாகிய முத்தியிலும் சேர்த்தருள வேண்டுமெனப் பிரார்த்திப்பார் 'நின்றருவடியின் வைத்தருள்வாய்' என்றார். இதனை

**திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் திருஅங்கமாலை**

"இறுமாந் திருப்பன் கொலோ,
வீசன் பல்கணத் தெண்ணப்பட்டுச்

சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென் றங்,
கிறுமாந் திருப்பன் கொலோ"

என்பதனானறிக. ஜகம் என்னும் வடமொழி சகம் எனத் திரிந்தது. தன்னையேறினர்க்கு - உருபுமயக்கம். (93)

மின்வணங் கவருஞ் செஞ்சடா டவியும்
விளங்கொளி மார்பும்வா னுலக
மன்வணங் குறுநின் பதாம்புய மலரு
மனங்குடி யிருக்குநா ளுளதோ
பொன்வணம் புரியுங் காகமொன் றினைப்பொற்
பொருப்பென வடைபொரு ளனைத்துந்
தன்வணம் புரியும் பொருப்பெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) பொன் பொருப்பு - பொன்மலையாகிய மேருவானது, காகம் ஒன்றினை-தன்னிடத்தடைந்த ஒரு காகத்தை, பொன் வணம் புரியும் என - பொன்னிறமாகச் செய்யும் (இஃது ஒரு அற்புதமோ) என்று, அடைபொருள் அனைத்தும் - தன்னிடம் அடைந்த எல்லாப் பொருள்களையும், தன் வணம் புரியும் - தன்னிறமாகச் செய்கின்ற, பொருப்பு எனும்-மலையென்று சொல்லப்படுகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, மின் வணம் கவரும்-மின்னலின் நிறத்தையும் கவரும்படியான, செம் சடாடவியும் - செம்மைநிறத்துடன் கூடிய சடைக்காடும், ஒளி விளங்கு மார்பும்-பிரகாசம் பொருந்திய திருமார்பும், வான் உலகம் - தேவர்களாலும், மன் வணங்குறும் - மிகுதியாக வழிபடப்பெற்ற, நின் பத அம்புய மலரும்-தேவரீருடைய திருவடித் தாமரை மலரும், மனம் குடிஇருக்கும் நாள்-அடியேனுடைய மனத்தில் குடியிருக்கின்ற நாளும், உளதோ-உண்டோ? (அறியேன்) எ-று.

(வி-ரை.) 'மன்' என்பது ஈண்டு மிகுதிப் பொருளில்வந்தது. இந்த 'மன்' என்னும் இடைச்சொல் மிகுதிப்பொருளில் வருவதே யல்லாமல், அசைத்து நிற்றற்பொருளிலும், ஒழிந்த சொற்பொருளி லும் நிலைபெறுதற் பொருளிலும் வரும். இதனை,

நன்னூல்

"மன்னே யசைநிலை யொழியிசை யாக்கங்
கழிவு மிகுதி நிலைபே றாகும்"

என்பதனானறிக. சடாடவி, பதாம்புயம் - இரண்டும் வடமொழிப் புணர்ச்சி. மின்னலின் நிறத்தையும் கவரும்படியான செந்நிறத்துடன் கூடிய சடைக்காடாகலின் 'மின்வணங்கவருஞ் செஞ்சடாடவியும்' என்றார்.

திருவாரூர் நான்மணிமாலை

"தன்னெஞ்சுக்குஞ் செல்வக் கமலைப்
பிரான்செஞ் சடாடவிமற்
றென்னெக்கு மென்னி லெரியொக்குங்
கொன்றை யெரியிலிட்ட
பொன்னொக்கும் வண்டுகரி யொக்குங்
கங்கையப் பொன்செய்விக்கு
மின்னொக்கும் பொன்செய் கிழக்கொல்ல
னொக்குமவ் வெண்பிறையே"

எனக் குமரகுருபரசுவாமிகளும்,

பொன்வண்ணத்தந்தாதி

"எரிகின்ற தீயொத் துளசடை யீசற்கத் தீக்கிமையோர்
சொரிகின்ற பாற்கடல் போன்றது சூழ்புன லப்புனலிற்
சரிகின்ற திங்களோர் தோணியொக் கின்றதத் தோணியுய்ப்பான்
றெரிகின்ற திண்கழை போன்றுள தாலத் திறலரவே"

எனச் சேரமான்பெருமாணயனாரும்,

அற்புதத்திருவந்தாதி

"கலங்கு புனற்கங்கை யூடால லாலு
மிலங்கு மதிமயங்க லாலு-நலங்கொள்
பரிசுடையா னீண்முடிமேற் பாம்பியங்க லாலும்
விரிசடையாங் காணில் விசும்பு"

எனக் காரைக்காலம்மையாரும்,

## தேவாரம்

"அங்கட் கடுக்கைக்கு முல்லைப் புறவ முறுவல்செய்யும்
பைங்கட் டலைக்குச் சுடலைக் களரிப் பருமணிசேர்
கங்கைக்கு வேலை யரவுக்குப் புற்றுக் கலைநிரம்பாத்
திங்கட்கு வானந் திருவொற்றி யூரர் திருமுடியே"

எனத் திருநாவுக்கரசுசுவாமிகளும் சடைவர்ணனை கூறியுள்ளது காண்க. இவ்வாறே பலரும் கூறியுள்ளார்கள். விரிவஞ்சி இம்மட்டோடு நிறுத்தினோம். மின்வணம், வானுலகம் - இரண்டிலும் சிறப்பும்மைகள் தொக்கன. உலகம் - இடவாகுபெயராய்த் தேவர்களை உணர்த்தியது. வண்ணம் என்பன இடைக்குறை விகாரம் பெற்று வணம் என நின்றன. பொன்மலையாகிய மேருமலையானது பொன்னிறமுடைய பறவைகளும் கருநிறமுடைய பறவைகளும் தன்னிடம் வருமாயின் தன்நிறத்தையுடைய பறவையின் நிறத்தை மாற்றமுடியாமல் கருமைநிறமுடைய பறவையையே பொன்னிறமாக்கும் ஆற்றலுடையது. ஆனால், சிவசொரூபமாகிய சோணசைலமோ தன்மயமான பொருள் ஒன்று மில்லாமையின், தன்னிடத்தில் வந்தடைந்த உயிருடைப் பொருள்களையெல்லாம் தன்மயமாக்கும் சக்தியுடைய தென்பார் 'அடைபொரு ளனைத்தும் தன்வணம் புரியும்' என்றார். மேருமலையின் ஆற்றலைப்பற்றி பிறரும்,

## சிதம்பரமும்மணிக்கோவை

"பொன்னிறப் புறவுங் கருநிறக் காக்கையு
மன்னுமா லிமைய வரைப்புறஞ் சேர்ந்துழி
யிருதிறப் பறவைக்கு மொருநிற னல்லதை
நிறம் வேறு தெரிப்ப துண்டோ"

என வருதல் காண்க. எனவே, இச்சோணசைலமோ எல்லாப் பொருள்களையும் தன்மயமாகச் செய்தலின் சிறப்புடைத்து என்பது பெறப்பட்டது. தன்வணம் புரிதலாவது-தன்மயமாக்குதல், அஃதாவது, சிவசொரூபமாகச் செய்தல். 'பொன் பொருப்பு காகமொன்றினைப் பொன்வணம் புரியும்' என முடிக்க. (94)

குருமணி மகுடம் புனைந்துல காளுங்
கொற்றவ ராதலி னென்கட்
கருமணி யெனுநின் றொண்டர்குற் றேவல்
கருதியாட் பட்டிட வினிதே
பெருமணி விசும்பி னுச்சியி னெழுந்த
பிள்ளையங் கதிரென வரவந்
தருமணி யொளிவெண் மதியுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) பெருமணி விசும்பின்-பெரிய நீலநிறமான வானத்தின், உச்சியில் எழுந்த-உச்சியில் தோன்றிய, அம் பிள்ளை கதிர் என-அழகிய இளஞ் சூரியனென்று அனைவரும் மதிக்கும்படி, அரவம் தரும் மணி ஒளி-நாகரத்தினங்களின் செவ்விய ஒளியானது, வெண் மதி உறும்-வெண்ணிறமுடைய சந்திரனிடம் சேரப்பெற்ற, சோண சைலனே! கைலைநாயகனே!—, குருமணி மகுடம்-நல்ல நிறமமைந்த மணிகள் பதித்த கிரீடத்தை, புனைந்து-அணிந்து, உலகு ஆளும்-உலகத்தை ஆட்சிபுரிகின்ற, கொற்றவர் ஆதலின்-அரசர்களாவதிலும், என் கண் கருமணி எனும்-என்னுடைய கண்ணிற் கருமணிபோன்ற, நின் தொண்டர்-தேவரீர் திருத்தொண்டர்களுடைய, குற்றேவல் கருதி-திருப்பணிகளைப் பெரிதாக மதித்து, ஆட்பட்டிடல் இனிது - அத் தொண்டர்கட்கு அடிமைப்பட்டு அவர்கள் ஏவிய குற்றேவல் செய்வதே மிக இனிதாம்; எ-று.

(வி-ரை.) குரு-நிறம். முடிமன்னராய்ப் புவியாட்சி செய்வதிலும் அடியவர்களுக்குக் குற்றேவல் செய்து பிச்சையேற்று அருந்தி வாழ்வது இன்பம் தருவதாம் என்பார், 'குருமணி மகுடம் புனைந்துல காளுங் கொற்றவ ராதலி னென்கட் கருமணி யெனுநின் குற்றேவல் கருதியாட் பட்டிட வினிதே' என்றார். இதனை

திருப்போரூர் சந்நிதிமுறை

"அளகா புரியன்ன பட்டணத் தேசுதை யால்வளைந்த
களவார் முகில்படி மாடத்தி னூடு களித்தலினும்

புளகா டவியெழ மெய்ப்போரி வேலவனைப் போற்றியுய்யார்
வளவார் புறந்திண்ணை வைகுத லேதமின் மாசுகமே"

என்னும் செய்யுள் ஈண்டு நோக்கத்தக்கது. இதனால், அடியார்க்குக் குற்றேவல் செய்தல் இன்பம் தரும் என்பது பெறப்பட்டது. கண்மணி - நன்மை தீமைகளைப் பகுத்துணரச் செய்து தீயவழியில் நீக்கி நல்ல வழியில் செலுத்துவதுபோல, அடியவர்களும் தம்மை அடைந்தோரைப் பாவவழிகளினின்றும் நீக்கிச் செந்நெறியிற் செலுத்துவார்களாகலின் 'கட்கரு மணியனைய நின்தொண்டர்' என்றார். நாகரத்தினங்களின் செவ்விய ஒளியானது சென்று சந்திரனிடம் சேர சந்திரனுடைய வெண்மைநிறம் மாறிச் செந்நிறம் பெற்று அழகிய இளஞ் சூரியனென்று சொல்லும்படியாகப் பெரிய நீலநிறமான வானத்தின் உச்சியில் தோன்றும் என்பார், 'பெருமணி விசும்பி னுச்சியி லெழுந்த பிள்ளையங் கதிரென வரவந் தருமணி யொளிவெண் மதியுறும்' என்றார். நின் தொண்டர்-ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். 'மணி'-கழுவுதல் எனப் பொருள்படும். மண் என்னும் முதனிலையிற்றோன்றிய தமிழ்ச்சொல்; கழுவுதலாவது சாணைக்கல்லில் தேய்த்து மாசுபோக்கித் தூய்மைசெய்தல். 'தொண்டர்'-பணிசெய்யும் அடியவர்; தொண்டு-பணி: தொழும்பு, தொண்டு, அடிமையென்னுஞ் சொற்கள் ஒரேபொருளை உணர்த்தல் **திவாகரம் பிங்கலந்தை**களான் அறிக. இஃது ஈற்றயல் திரிந்தவிளியாக 'தொண்டீர்' எனவும்வரும். கொற்றம் - (பகைவரைக்) கொன்று அடைவதென வெற்றிக்குக் காரணக்குறி; கொல்-பகுதி; து-சாரியை; அம்-விகுதி: மற்றவை சந்தி. தொழிலடியாகப்பிறந்த பெயர்; இதனைப் பண்படியாகப்பிறந்த பெயர் என்பர். அது பொருந்தாது. பகுதியை நோக்கின் 'உலகாளும்' என்பதில் 'உலகு' என்றது-உலகங்களையும் அதிலுள்ள உயிர்களையும் உணர்த்திநின்றது.

## பெருமாள் திருமொழி

"அங்கணெடு மதில்புடைசூ ழயோத்தி யென்னு
மணிநகரத் துலகனைத்தும் விளக்குஞ் சோதி."

என்பதுபோல என்க. 'மதி' யாவராலும் நன்குமதிக்கப்படுவது என சந்திரனுக்குக் காரணப்பெயர். (95)

சிம்புளாய் மடங்க லெறுழ்வலி கவர்ந்த
திறலுமுப் புரஞ்சுடு விறலு
மம்புயா தனத்தன் முடிகளேந் திட்ட
வடலுமேத் தினர்க்கிட ருளதோ
வும்பர்மா மதியி லங்கையி லிருந்த
வுழைகுதித் திருப்பவா ரழல்வான்
றம்பமா யெழுந்து நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) அம் கையில் இருந்த உழை - தேவரீருடைய திருக் கரத்திலிருந்த மான் கன்றானது, உம்பர் மாமதியில் - வானத்தி லுள்ள நிறைமதியினிடத்து, குதித்து இருப்ப-தாவி யிருக்கும்படி, ஆர் அழல் வான் தம்பம் ஆய்-நிறைந்த அக்கினி வடிவமான உயர்ந்த ஸ்தம்பமாகி, எழுந்து நின்றிடும்-ஓங்கி வளர்ந்த, சோணசைலனே! கைலைநாயகனே!—, சிம்புள் ஆய்-சரபப்புள் வடிவங்கொண்டு, மடங் கல்-நரசிங்கத்தினுடைய, எறுழ்வலி-மிகுந்த திறத்தினை, கவர்ந்த திற லும்-அழித்த வெற்றியும், முப்புரம் சுடுவிறலும்-திரிபுரங்களை நகைத் தெரித்த வெற்றியும், அம்புய ஆதனத்தன்-தாமரைமலரைப் பீடமாக வுடைய பிரமதேவனுடைய, முடி - உச்சியிலுள்ள சென்னியை, களேந்திட்ட அடலும்-கிள்ளிய வலிமையும் (ஆகிய இச்செயல்களை), ஏத்தினர்க்கு - துதித்தவர்களுக்கு, இடர் உளதோ - துன்பமும் உண்டோ? (இல்லை); எ-று.

(வி-ரை.) சிவபராக்கிரமம் அஷ்டாஷ்ட மூர்த்தங்களாகிய அறு பத்துநான்கு மூர்த்தங்களுள் கோரமூர்த்தங்களைத் தியானிப்பவர் களுக்கு எல்லாத் துன்பங்களும் நீங்குமாகலின், ‘திறலும், விறலும், அடலும் ஏத்தினர்க்கு இடருளதோ’ என்றார். உளதோ என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது.

சிம்புளாய் மடங்கல் எறுழ்வலி கவர்ந்தது:—இரணியகசிபுனைச் சங்கரித்த நரசிங்கத்தைச் சிவபெருமான் சரபம் என்னும் எண்காற் பறவையாகச் சென்று அதன் வலிமை போக்கினர். இவ்வாறு நரசிங் கத்தின் வலிமையடக்கினமையால் சிவபெருமான் ‘ஸிம்ஹக்நமூர்த்தி’

எனப்பெயரேற்றனர். ஸிம்ஹக்நமூர்த்தம் அஷ்டாஷ்டமூர்த்தமாகிய அறுபத்துநான்கு மூர்த்தங்களில் மூப்பதாவதுமூர்த்தம்.

மூப்புரஞ் சுட்டது:—தாரகாசுரன் தனையராகிய தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்பவர்களையும் அவர்கள் மூப்புரத்தையும் அமரர்துயர் அகலும்படி சிவபெருமான் சிரித்தெரித்தனர். இவ்வாறு திரிபுரத்தைச் சிரித்தெரித்தமையால் சிவபெருமான் 'த்ரிபுராந்தக மூர்த்தி' எனத் திருநாமமுற்றனர். த்ரிபுராந்தகமூர்த்தம் அஷ்டாஷ்ட மூர்த்தங்களில் இருபதாவது மூர்த்தம்.

அம்புயாதனத்தன் முடி களைந்திட்டது:—தானே பிரமமெனச் செருக்கு எய்திய பிரமதேவனுடைய ஐந்தாவது தலையைச் சிவபெருமான் தன்னுடைய நகநுனியால் கிள்ளினர். இவ்வாறு பிரமதேவன் தலையைக்கிள்ளினமையால் சிவபெருமான் 'ப்ரஹ்மசிரச்சேதமூர்த்தி' என ஒரு பெயரேற்றனர். ப்ரஹ்மசிரச்சேதமூர்த்தம் அஷ்டாஷ்ட மூர்த்தங்களில் ஐம்பத்தெட்டாவது மூர்த்தம்.

இதுவன்றி, அச்சிவபெருமான் ஏகமூர்த்தமாகியும், பஞ்சமூர்த்த மாகியும், இருபத்தைந்து மூர்த்தமாகவும் விளங்குவர். ஏகமூர்த்தம் என்பது:—சகளமும், நிஷ்களமும், சகளநிஷ்களமும் கடந்து நின்று சுத்தசிவமாகிய ஒரே மூர்த்தம். பஞ்சமூர்த்தங்கள் என்பது:—பரம சிவன்-அநாகதசிவன் - சதாசிவன்-மகேசன் - உருத்திரனுகிய ஐந்து மூர்த்தங்கள்.

இருபத்தைந்து மூர்த்தங்கள் என்பது:—சந்திரசேகரர் - உமா மகேசர்-ரிஷபாரூடர்-சபாபதி-கலியாணசுந்தரர் - பிக்ஷாடனர்-காமாரி-அந்தகாரி-திரிபுராரி-ஜலந்தராரி - விதித்துவம்சர்-வீரபத்திரர்-நரசிம்ஹ நிபாதனர்-அர்த்தநாரீசுவரர் - விக்கிராதரர்-கங்காளர் - சண்டேசாநுக் கிரகர்-நீலகண்டர்-சக்கிரா பயப்பிரகாதர் - கஜமுகாநுக்கிரகர்-சோமா ஸ்கந்தர்-ஏகபாதர் - அனந்தசுகபிருது-தக்ஷிணாமூர்த்தி - லிங்கோற்பவர் என்னும் பஞ்சவிம்சதி மூர்த்தங்கள். இதனை,

திருவிளையாடற் புராணம்

"ஒன்றாகி யைந்தா யையைந் துருவாகி வருவாய் போற்றி"

என்பதனாலறிக.

அஷ்டாஷ்ட மூர்த்தங்கள் என்பது:—இலிங்கம் - இலிங்கோற்பவம்-முகலிங்கம்-சதாசிவம்-மகாசதாசிவம்-உமாமஹேசம் ... ... ... ... ... ... ... ... ... ... ... பிரார்த்தநாமூர்த்தம் - இரத்தபிக்ஷாடனம்-சிஷ்யபாவம் எனப்படும் அறுபத்துநான்கு மூர்த்தங்கள். இவற்றின் விரிவெல்லாம் தமிழ்வசன நூலாகப் பிரமாணசஹிதம் அறுபத்துநான்கு திருவுருவப் படங்களுடன் வெளியிட்டிருக்கும் சிவபராக்கிரமத்தானறிக. இவற்றை,

சிவபராக்கிரமம்

"லிங்கம் லிங்கோத்பவஞ் சைவமுக லிங்கஞ்
ஸதாசிவம் விக்ரஹம் பாவயேத்ஸதா" என்பதனானறிக.

'சிம்புளாய் மடங்கலெறும் வலிகவர்ந் திறலும்' என்றமையின் உபலக்ஷணத்தால் விஷ்ணுமூர்த்தியின் தசாவதாரங்களில் கூர்மாவதாரத்திலும், மச்சாவதாரத்திலும், வராஹாவதாரத்திலும், வாமனாவதாரத்திலும் சிவபெருமான் சம்ஹாரம் செய்ததாகிய கூர்மஸம்ஹாரமூர்த்தி (கூர்மாரி) மச்சஸம்ஹாரமூர்த்தி (மச்சாரி) வராஹஸம்ஹாரமூர்த்தி (வராஹாரி) கங்காளமூர்த்தியும், கஜயுக்தமூர்த்தி, சார்த்தூலஹரமூர்த்தி, காலாந்தகமூர்த்தி (காலகாலன்), காமதஹநமூர்த்தி (காமாரி), வீரபத்திரமூர்த்தி, தக்ஷயஜ்ஞமூர்த்தி முதலியன வெல்லாம் கோரமூர்த்தங்கள். கோரமூர்த்தங்களின் பராக்கிரமங்களைத் தியானிப்போர்களுக்கு ஒருவித கெடுதியு முண்டாகாதாதலால் இவரும் 'வந்தினர்க் கிடருளதோ' என்றார். திருக்காத்திலிருந்த மான்கன்று சந்திரனிடத்தில் தாவியிருக்கும்படி அக்கினிஸ்தம்பமாக எழுந்தருளியிருக்கின்றது என்பார் 'உம்பர் மாமதியிலங் கையிலிருந்த வுழைகுதித்திருப்பவா ரழல்வான் றம்பமா யெழுந்து நின்றிடும்' என்றார். சந்திரனிடத்துள்ள களங்கத்தை மான் என்றும் முயல் என்றும் கூறுதல் புலவர் வழக்காதலின், அதனைத்தழுவியே சிவபெருமான் தமது திருக்கரத்திலுள்ள மான் அவர் திருக்கரத்திலிருக்கும் நெருப்புக்குப் பயப்பட்டு சந்திரனிடத்தில் போய்ச் சேர்ந்துவிட அந்த அக்கினிவடிவு கொண்டதாக வர்ணித்தாரென அறிக. எறுழ்வலி ஒருபொருட் பன்மொழி. 'மீமிசை' 'நீண்டிறல்' 'நாகிளங்' கன்று என்பனபோல.

ஸ்தம்பம் என்னும் வடமொழி தம்பமென்றாயிற்று. ஆனால், வட மொழியில் ஸ்தம்பம் என வேறொரு பதமுண்டு. அது இதனின் வேறு; அதுவும் இதுவுமொன்றென மயங்கற்க. எவ்வாறெனின், புல் கோரை செடி கொடி முதலியவற்றின் புதர், வடமொழியில் ஸ்தம்பம் எனப்படும். அது 'க' ப்ரத்யயம் பெற்று 'ஸ்தம்பகம்' என நிற்கும் அவ்வடசொல் 'தம்பகம்' என விகாரப்பட்டுவரும். இதனை,

பெருமாள்திருமொழி

"எம்பெருமான் ஈசனெழில் வேங்கடமலைமேல்
தம்பகமாய்நிற்கும் தவமுடையே னாவேனே"

என்பதனானறிக. ஏத்தினர்-வினையாலணையும் பெயர். (96)

அஞ்சலென் றவலக் கொடியனே னென்றனை நின்
னடியரிற் கூட்டுக வுலகி
னஞ்சமுண் டிருண்ட கண்டமென் றுனது
நற்கள மிகழ்பவ ருளரோ
வஞ்சமைங் கரன்கொண் டிளவலோ டிகலி
வலங்கொள்வா தின்னும்வந் துறினுந்
தஞ்சமென் றிடாது நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) ஐங்கரன் இளவலோடு இகலி-விநாயகக்கடவுள் தம்பியாகிய முருகப்பெருமானோடு மாறுபட்டு, வஞ்சம் கொண்டு-உடனே கபடத்தைக்கொண்டு, வலம் கொள் வாது-தேவரீரை வலம் வருகின்ற வாதம், இன்னும் வந்து உறினும்-இனி ஒருதரம் வருமேனும், தஞ்சம் என்றிடாது - (வலம் வருதல்) முன்போல எளிது என்று நினைக்காதபடி, நின்றிடும்-பருத்த திருவுருவங்கொண்டு நிற்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, உனது நல் களம் - தேவரீருடைய திருக்கழுத்தை, நஞ்சம் உண்டு இருண்ட கண்டம் என்று-விடத்தை அமுதுசெய்து அதனால் கருநிறமடைந்த கண்டம் என்று, உலகில் இகழ்பவர் உளரோ - உலகத்தில் இகழ்ந்து பேசுவார் யாரேனும் உளரோ? (இல்லை) ஆகலின், அவலம் கொடியனேன் தனை - வீண் செய்கையையுடைய கொடியனாகிய அடியேனையும், அஞ்சல் என்று

அஞ்சற்க எனக்கூறி, நின் அடியாரிற் கூட்டுக-தேவரீருடைய அடியார் களினத்திற் சேர்த்தருள்க (அதனால் அவர்க்கு இழிவு இன்று); எ-று.

(வி-ரை.) தேவரீர் திருக்களத்தை விஷம் உண்டு கறுத்த கழுத்தென்று உலகத்தில் இகழ்ச்சியாகப் பேசுவோர்கள் யாரேனும் உண்டோ? இல்லை; அதுபோலவே அடியேனையும் அடியார்களுடன் சேர்த்து விடுவீராயின் அதனால் அவ்வடியார்களை இகழ்பவர்கள் இல்லை; ஆகையால் வீண் செய்கையையுடைய கொடியவனாகிய அடியேனையும் அஞ்சற்க எனக்கூறிச் சிவனடியார் திருக்கூட்டத்தில் சேர்த்தருள்க என்பார், 'அஞ்சலென் றவலக் கொடியனேன் றனை நின் னடியாரிற் கூட்டுக வுலகி னஞ்சமுண் டிருண்ட கண்டமென் றுனது நற்களமிகழ்பவ ருளரோ' என்றார். எனவே, கண்டத்திலடங்கிய விஷம் கொடியதாயினும் அக்கொடிய விஷமுடைமை பற்றி அக்கண்டத்தை இகழ்ந்து பேசாமல் அஃது உலகிற்கு உண்டான பெரிய துன்பத்தை மீட்டுக் காத்ததாகலின், யாவரும் இகழ்ச்சிகூறாமல் புகழ்ச்சியாகப் பேசுகிறார்கள். அதுபோலவே உலகத்தில் கொடியவனாகிய அடியேனை அடியார்கள் ஆட்கொள்ளின் அடியேனால் அன்னியர்களுக்கு ஒருவித துன்பமும் விளையாதபடி ரக்ஷித்து அடியேனை அடக்கி நல்வழிப்படுத்துவார் ஆகலின் அவ்வாறுசெய்க என வேண்டுகின்றார் என்பதாம். இதனை,

**தாயுமானவர்**

"என்றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ
யாதேனு மறியாவெறுந்
துரும்பனே னென்னினுங் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்"

என்பதனாலறிக. முன்னொருகாலத்தில் சிவபெருமான் கையில் ஒரு கனியை வைத்துக்கொண்டு, விநாயகரையும், முருகக்கடவுளையும் நோக்கி உலகை முதலில் வலம்வருபவர்கள் எவர்களோ அவர்களுக்கே இக்கனியைக் கொடுப்பேனென்று சொல்ல, முருகக்கடவுள் மயில்வாகன மீதிலமர்ந்து உலகை வலம் வருவதற்குள்ளாக விநாயகக்கடவுள்

சிவபெருமானையே வலம்வந்து, 'உலகம் உமக்குள் அடக்கமாகலின் கனியைத்தாரும்' என்று பெற்றுக்கொண்டார். இனி அத்தகைய வாதம் வரின் வலம்வருதல் முன்மாதிரி எளிதல்ல என்பதூஉம், விநாயகர் மலையை வலம் வருவதற்கு முன்னதாகவே முருகக்கடவுள் உலகத்தை வலம்!வந்து முன்னர் கனியைப் பெறுவார் என்பது தோன்ற, 'வஞ்சமைங் கரன்கொண் டிளவலோ டிகலி வலங்கொள்வா னின்னும் வந் துறினுந் தஞ்சமென் றிடாது நின்றிடுஞ் சோணசைலனே' என்றார். (97)

அணிந்திடு கலனுஞ் சாந்துமொண் டுகிலு
மரிவையர் போகமும் பெறுவான்
றுணிந்திடு மனமென் றுனைப்பொரு ளாகத்
துணியுமோ வறிந்திலேன் றமியேன்
பணிந்திடு மயன்மால் பெருமைக ளனைத்தும்
பறவைகொண் டெழுதலாய் முடிந்து
தணிந்திட நிமிர்ந்து நின்றிடுஞ் சோண
சைலனே கைலநா யகனே.

(ப-ரை.) பணிந்திடும் - (கடவுளாகப்) பலரால் வணங்கப்படுகின்ற, அயன் மால்-பிரம விஷ்ணுக்களுடைய, பெருமைகளனைத்தும்-எல்லாப் பெருமைகளும், பறவை கொண்டு எழுதல் ஆய்-அன்னமுங் கருடனுமாகிய பறவைகள் தூக்கிச்செல்லக்கூடிய அளவில் அமைந்து, முடிந்து தணிந்திட-முடிதலால் (அவர்பெருமை) நிமிர, நிமிர்ந்து நின்றிடும் - (அவ்வாறு எளிதின் ஏந்திச்செல்லாதபடி) ஓங்கி நிற்கின்ற, சோணசைலனே! கைலநாயகனே!—, அணிந்திடு கலனும் - அணிதற்குரிய ஆபரணங்களும், சாந்தும் - கலவைச்சாந்தும், ஒள் துகிலும்-அழகிய பட்டாடையும், அரிவையர் போகமும்-பெண் போகமும், பெறுவான்-(ஆகிய இவற்றைப்) பெறும்படி, துணிந்திடும் மனம்-அவற்றையே சிறந்த பேறாகத் துணிந்த அடியேன் மனம், என்று உனைப் பொருளாகத் துணியுமோ-எக்காலத்தில் மெய்யாகிய பொருளாகத் தெளிந்துணருமோ?, தமியேன் அறிந்திலேன்-அடியேன் உணர்ந்திலேன்; எ-று.

(வி - ரை.) கலனும், சாந்தும், துகிலும், போகமும் ஆகிய பொய்ப்பொருள்களை மெய்ப்பொருளாகக் கருதி அவற்றில் விருப்புற்றிருக்கின்ற அடியேன் மனம், மெய்ப்பொருளாகிய தேவரீரையே நம்பி அன்புசெலுத்தி உஜ்ஜீவிக்கும்படியான காலமும் உளதோ? என்பார், 'அணிந்திடு கலனுஞ் சாந்து மொண்டுகிலு மரிவையர் போகமும் பெறுவான் றுணிந்திடு மனமென்றனைப் பொருளாகத் துணியுமோ வறிந்திலேன் றமியேன்' என்றார். பிரம விஷ்ணுக்களுடைய பெருமைகளெல்லாம் அன்னமும் கருடனும் தாங்கிச் செல்லக்கூடிய அளவில் அமைந்து முடிதலால் அவர்கள் பெருமை சிறிதாக அவ்வாறு எளிதில் தாங்கிச் செல்லாதபடி ஓங்கி நிற்கின்றது என்பார் 'பணிந்திடு மயன்மால் பெருமைக ளனைத்தும் பறவைகொண் டெழுதலாய் முடிந்து தணிந்திட நிமிர்ந்து நின்றிடும் சோணசைலனே' என்றார். 'அயன்' அஜன் என்ற வடசொல்லின் விகாரம் என்பர்; அப்பெயர் திருமாலினின்றும் தோன்றியவன் என்று பொருள்படும்; அ-விஷ்ணு. 'மால்' என்பதற்கு-அன்பு, மாயை, பெருமை, முதலிய பலபொருள் உதிக்கின்ற தாகலின், இவை அனைத்தும் உடையவன் என்று அறிக. பறப்பது, 'பறவை' எனக் காரணப்பெயர்; ஐ-கருத்தாப்பொருள் விகுதி. (98)

பூவுறு தடமு மதியுறு விசும்பும்
புனலுறு முறப்புநின் றலகாள்
கோவுறு நகரு மென்னவென் மனநின்
குரைகழன் மருவுநா ளுளதோ
வீவுறு மனைசெய் பவர்கொள மரந்தாங்
கோங்கல்க ணுணவுன் னினர்க்குத்
தாவுறு முயர்வீ டளித்தருள் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) ஈவுறும் மனை செய்பவர்-அறிஞரால் விலக்கப்படுகின்ற வீட்டினைக் கட்டுபவர், கொள மரம் தாங்கு-கொள்ளும்படி பலவகை மரங்களைத் தாங்கியிருக்கின்ற, ஓங்கல் கள் நாண-மலைகள் வெட்கமடையும்படி, உன்னினர்க்கு-நினைத்தவர்களுக்கு, தாவுறும் உயர்வீடு-யாவராலும் விரும்பப்படுகின்ற உயர்ந்த பேரின்ப வீட்டினை, அளித்

தருள்-கொடுத்தருள்கின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, பூவுறு தடமும்-பூக்கள் செறிந்த தடாகமும், மதி உறு விசும்பும்-சந்திரன் பொருந்திய வானமும், பூண் உறும் உறுப்பும்-அணிகலை யணிந்த அவயவங்களும், நின்று உலகு ஆள் - நன்னெறியில் நின்று உலகை ஆட்சிபுரிகின்ற, கோஉறு நகரும்-அரசன் வாழும் நகரமும், என-பொலிவுபெற்று விளங்குதல் போல, என் மனம்-அடியேனுடைய மனம், நின்குரை கழல்-தேவரீருடைய ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த திருவடியை, மருவும் நாள் உளதோ-பெற்றுச் சிறப்புடன் வாழும் நாளும் உண்டோ? (அறியேன்); எ-று.

(வி-ரை.) உம்மைகள் எண்ணுப் பொருளன. மலர்களில்லாத குளமும், சந்திரனில்லாத வாகாயமும், அணிகளில்லாத அவயவமும் கொடுங்கோன் மன்னர் நகரமும் எவ்வாறு பொலிவற்றிருக்குமோ அம்மாதிரியே அடியேனுடைய மனமும் தேவரீர் திருவடி பொருந்தாமையால் பொலிவற் றிருக்கின்றது; ஆகையால், அடியேன் மனதில் தேவரீருடைய திருவடி மருவும்நாள் எந்நாளோவென வருந்துவார், 'பூவுறுதடமும் மதியுறு விசும்பும் பூணுறு முறுப்புநின் றுலகாள் கோவுறு நகருமென வென்மனநின் குரைகழன் மருவுநாளுளதோ என்றார். எனவே, தடம் முதலியன பூ முதலியவற்றைப் பொருந்தி னலல்லாமல் சிறப்படையாமைபோல, அடியேனுடைய மனமும் தேவரீருடைய திருவடியைப் பொருந்தினு லல்லாமல் மேன்மை யடையாது என்க. அறிஞரால் விலக்கப்படுகின்ற வீட்டைக் கட்டு பவர்கள் கொள்ளுமாறு பலமரங்களையும் தாங்கியுள்ள மற்றைய மலைகள் வெட்கமடையும்படி தன்னைத் தியானித்தவர்களுக்கு யாவ ராலும் விரும்பப்படுகின்ற உயர்ந்த பேரின்பவீட்டை யளிக்குமென் பார் 'ஓவுறு மனைசெய் பவர்கொள மரந்தாங் கோங்கல் களுணவுமன் னினர்க்குத் தாவுறு முயர்வீ டளித்தருள்' என்றார். எனவே, ஏனைய மலைகளெல்லாம் தாழ்ந்த வீட்டையுங் கொடுக்க மாட்டாமல், வீட்டிற் குரிய பல கருவிப்பொருளில் மரத்தைமாத்திரங் கொண்டிருக்க இம்மலை நினைத்த அளவில் என்று மழியாத சிறந்தவீட்டை யளிப்பத னல் இம்மலையைக்கண்டு அம்மலைகள் நாணுவனவாயின வென்க. ஓவுறும், தாவுறும், என்பனவற்றில் செயப்பாட்டு வினைப்பொரு

றுணர்த்தும் பகு விகுதி தொக்குநின்றது. உறுதடம், உறுபகை, உறுநகர்-இவை வினைத்தொகை நிலைத்தொடர்கள். குறைகழல்-வினைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கழல்-தானியாகு பெயர். (99)

சீரணி புகழுங் கல்வியுஞ் சிறந்த
    செல்வமு மில்லில்வாழ் பவர்க்குப்
பேரணி கலமென் புதல்வருங் கதியும்
    பெறத்துதிப் பவர்க்கருள் பவனீ
நேரணி கதியை மறந்தவர் கண்டு
    நினைந்துற மிக்கபே ரருளாற்
றாரணி முழுதுந் தோன்றிடுஞ் சோண
    சைலனே கைலைநா யகனே.

(ப-ரை.) அணி கதியை மறந்தவர் - சிறப்புப் பொருந்திய முத்தியை மறந்தவர்களும், நேர் கண்டு நினைந்து உற-எதிராகப்பார்த்து நினைக்கும்படியாக, மிக்க பேரருளால் - மிகுந்த பெரிய கருணையால், தாரணி முழுதும் தோன்றிடும்-உலகமுழுதும் தோன்றுகின்ற, சோணசைலனே! கைலைநாயகனே!—, சீர் அணி புகழும் - சிறப்பமைந்த புகழும், கல்வியும்-வித்தையும், சிறந்த செல்வமும்-அரசாட்சி முதலிய உயர்ந்த ஐசுவரியமும், இல்லில் வாழ்பவர்க்கு-இல்லற வொழுக்கமேற் கொண்டவர்களுக்கு, பெரு அணிகலம் என்-பெரிய ஆபரணம் என்று பெரியோராற் கூறப்படும், புதல்வரும்-மகப்பேறும், கதியும்-முத்தியும், பெற-அடையும்படி, துதிப்பவர்க்கு-வழிபாடு செய்பவர்கட்கு, அருள் பவன் நீ-தந்தருள்பவர் தேவரீர்; எ-று.

(வி-ரை.) புகழ்-கல்வி - சிறந்தசெல்வம் - மக்கட்பேறு முதலிய இம்மைப் பேறுகளையும் மறுமையில் முத்தியையும் அடையும்படி துதிப்பவர்க்கு அருள்பவர் தேவரீராயிருந்தும் மனிதர் தேவரீரை யடைந்து வழிபட்டு புகழ்முதலிய இம்மைப்பேறுகளையும் மறுமையில் முத்தியையும் அடையாமல் இருக்கின்றனர் இஃது என்ன அறியாமை என வருந்துவார் 'சீரணிபுகழுங் கல்வியுஞ் சிறந்த செல்வமு மில்லில் வாழ்பவர்க்குப் பேரணிகலமென் புதல்வருங் கதியும்பெறத் துதிப்பவர்

அருள்நீ' என்றார். அடியவர்கள் விரும்பும் யாவையும் அளிப்பவன் சிவபெருமான் என்பதனை,

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்

"வேண்டுவார் வேண்டுவதே ஈவான்"

என்பதானறிக.

திருக்குறள்

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று"

என்றபடி புகழுள்ள மனிதயாக்கையை ஒவ்வொருவரும் விரும்ப வேண்டியது முக்கியமாகலான் முதலில் புகழும், அந்தப்புகழும் குற்ற மில்லாதபடி நன்மார்க்கத்தில் ஈடுபட அதனால் உண்டான புகழா யிருக்கவேண்டுமே யல்லாமல் துன்மார்க்கத்தில் ஈடுபட அதனால் உண் டாகும் புகழ் ஒருபுகழ் அல்லவென்றும், அந்தப் புகழை அறிஞர்கள் அருவரும்பர் எனவும் தோன்ற 'சீரணி புகழும்' என்றார். 'கல்வி' இம்மையி லேயே பயன் கொடுக்கக்கூடிய தாகலானும், பிறர்க்குக் கொடுக்கக் கொடுக்க குறையாமல் வளருவதாகலானும், வெள்ளத்தால் அழியாதாக லானும், கள்ளர் முதலோரால் அபரிக்க முடியாததாகலானும், வெவ் விய நெருப்பினால் வேகாதாகலானும், இன்னோரன்ன பலகாரணங்க ளாலும் கல்வி முக்கிய மாகலின் 'கல்வியும்' என்றார். ஆக்கை.

நாலடியார்

"இம்மை பயக்குமா லீயக் குறைவின்றால்
தம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றால்
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோல்
மம்ம ரறுக்கு மருந்து"

"குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு
மஞ்ச ளழகு மழகல்ல-நெஞ்சத்து
நல்லம்யா மென்று நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு"

என்பனவற்றானறிக. எவ்வாறு அருளில்லாதவர்களுக்கு மோக்ஷ சாம்ராஜ்ஜிய மில்லையோ அதுபோல மிகுந்த ஐசுவரியம் இல்லா

விடில் இவ்வுலகில் ஒன்றும் நடைபெறாதாகலான் அச் செல்வமும் அத்தியாவசியமாய் வேண்டப்படுவ தொன்றாகலின் 'சிறந்த செல்வமும்' என்றார். பொருள் நிலையாமை தோன்ற 'செல்வம்' என்ற பெயராற் குறித்தார். இது ஒரோவழி விகாரப்பட்டு செல்வு எனவும் வரும். எல்லாப் பேற்றுள்ளும் புத்திரப்பேறே சிறந்ததாகலானும், அப்புத்திரப்பேறு இன்றேல் இல்லற நடத்துவதால் ஒரு பயனுமில்லாமல் அப்பிரயோசனமாகு மாதலானும் 'இல்லில் வாழ் பவர்க்குப் பேரணி கலமென் புதல்வரும்' என்றார். இதனை,

திருக்குறள்

"தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொருள்
தத்தம் வினையான் வரும்"

என்பதனு னறிக. இம்மையில் புகழ் முதலியவைகள் முக்கியமாயிருத்தல்போல மறுமையில் முக்கியமானது முத்தியாகலின 'கதியும்' என்றார். 'கதி' என்பதற்கு அடைக்கலம் என்றும் பொருள் உண்டு. அப்பொருள் இங்கு பொருந்தாது. புகழும், கல்வியும், சிறந்த செல்வமும், புதல்வரும், முத்தியும் தரக்கூடியவரா யிருந்தும் மனிதர்கள் தேவரீரை அடைந்து வழிபட்டு அப்பேறுகளைப் பெறுகின்றிலரென்பது எஞ்சி நின்றது. எல்லாம் வல்ல இறைவனை வழிபட்டு இன்புறாமை மனிதர்களுடைய குற்றமேயல்லாமல் இறைவனுடைய குற்றமன்று ஆகலின் அனைவரும் அமலனை வழிபட்டு இம்மை மறுமை இன்பங் களை எய்துவாராக எனப் பரமனைப் பரவுகின்றாரென்க. முத்தியை மறந்தவர்களும் எதிராகப் பார்த்து நினைக்கும்படியாகக் கருணை மேலீட்டினால் உலகமுற்றும் தோன்றுகின்ற பெருமான் என்பார், 'நோனி கதியை மறந்தவர் கண்டு நினைந்துற மிக்க பேருளாற் றுரனி முழுதுந் தோன்றிடுஞ் சோணசைலனே' என்றார். (100)

## சோணசைலமாலை மூலமும் உரையும்

### முற்றிற்று.

உ

கடவுள் துணை

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி



செய்யுள் முதற்குறிப்பு அகராதி

முற்றிற்று.

---

பூமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1937.